உ

# श्रीविघ्नेश्वरस्तुतिमञ्जरी

(स्तोत्रभाग:)

# ஸ்ரீவிக்நேச்வர ஸ்துதி மஞ்ஜரீ

(ஸ்தோத்ரங்கள் - நாமாவளீ)

நான்காம் பாகம்



வெளியிடுவோர் :

SRI VIGNESWARA VENKATESWARA TRUST

283, T.T.K. Salai, Chennai - 600 018

2010

# श्रीविघ्नेश्वरस्तुतिमञ्जरी

पूजा-मन्त्र-सपर्या होमविभागः

चतुर्थो भागः

# ஸ்ரீ விக்நேச்வர ஸ்துதி மஞ்ஜரீ

பூஜை-மந்திர-ஸபர்யாஹோமவிதானங்கள்

நான்காம்பாகம்

தொகுத்தவர்

வைத்ய S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரி

ஸ்ரீ ரங்கம்

வெளியிடுபவர்

**Sri Vighneswara Venkateswara Trust**

**283, T.T.K. Salai, Chennai - 600 018**

விக்ரம் - 2000



लीलागणेशः

सत्त्वादौ साभिलाषं स्ववहनविवशं वीतपाशाङ्कुशाभ्यां
पाणिभ्यामूरुमध्ये निहितमभिमृशन् दक्षपाण्यङ्गुलीभिः ।
किं भक्ष्ये तेऽभिलाषः ? किमु मयि? निभृतं पश्य मामित्युदारं
पृच्छन् मूकेऽथ मूषे, सदयहृदवताद् बालवेतण्ड वक्त्रः ॥

லீலா கணேசர்

SRI SANKARA BHAGAVADPADACHARYA PARAMPARAGATHA
His Holiness Sri Kanchi Komakoti Peetathipathi

# Jagadguru Sri Sri Sankaracharya Swamigal

Srimatam Samsthanam
No 1, Salai Street, Kancheepuram - 631 502

Camp - Mumbai 15.3.2000

நமது அத்யந்த ப்ரிய சிஷ்யர்களால் நிர்வாஹம் செய்யப்படுகின்ற ஸ்ரீ விக்நேச்வர வெங்கடேச்வர டிரஸ்ட் மற்றும் நமது அத்யந்த ப்ரிய சிஷ்யர் வைத்ய ராதா க்ருஷ்ண சாஸ்திரிகள் விஷயமாக நாராயண ஸ்மரணம் செய்யப்படுகிறது.

நமது அருளாசியுடன் இந்த டிரஸ்ட் ஏற்கனவே விநாயகரைப் பற்றி மிக விஸ்தாரமாக அனேக விஷயங்களைத் தொகுத்து மூன்று பாகங்கள் வெளியிட்டு மக்களுக்குப் பேருபகாரம் செய்துள்ளது. இப்போது வரும் விக்ரமப் புத்தாண்டன்று நான்காவது பாகம் வெளியிட இருப்பதையறிந்து மிகவும் ஸந்தோஷிக்கிறோம். இந்த நான்காவது பாகத்தில் விக்நேசுவரரைப் பற்றி வேதத்திலுள்ள ஸூக்தம் வல்லபேசோபநிஷத், ஹேரம்போபநிஷத், கணேச அதர்வசீர்ஷோபநிஷத் இவற்றின் பாஷ்யத்தை அனுஸரித்த தமிழுரை, மேலும் ப்ரபஞ்ச ஸாரம், மந்த்ரமஹார்ணவம் முதலிய மூல நூல்களில் உள்ள மந்த்ர விதானங்கள், முத்திரைகளின் விளக்கப் படங்கள், பூஜையின் பரிபாஷா விளக்கங்கள், செயல்முறை விளக்கம், புராண வரலாற்று சுருக்கம் முதலிய அனேக விஷயங்களைத் தொகுத்து சுமார் 700 பக்கங்களில் வெளியிட இருக்கிறார்கள். இந்த உயர்ந்த நூல் மக்களுக்கு நன்கு பயன்பட்டு விநாயகப் பெருமானின் அருளால் இந்த டிரஸ்டும் மேல் மேல் ஓங்கி வளர்ந்து இம்மாதிரி அனேக நூல்கள் வெளியிட்டு மக்களுக்குச் சேவை செய்யட்டும் என்றும், நூலாசிரியரும் அனேக நூல்களை வெளியிட்டு மக்களும் நற்பயனை அடைந்து உலகமனைத்தும் பரமக்ஷேமமாக வாழ வேண்டுமென்றும் ஆசீர்வதிக்கிறோம்.

நாராயண ஸ்ம்ருதி:

ஶ்ரீ:

# விநாயகனே எவ்வரமும் ஈவான்

அன்றொரு நாள் போட்ட பிள்ளையார் சுழி. மனோரதம் ஏறி விண்ணைக் கடந்தாலும் நிறைவேற்ற இயலாததொரு பணியை - தன் பெருமை விளக்க வந்த நூலை - நான்கு பாகங்களாக விரித்து ஸ்வஸ்திகமாக அந்தச் சுழி வெளிப்படுத்தியுள்ளது. அப்பெருமை அவரது அருள் ஒன்றையே சாரும். காகிதத்திற்கும் எழுதுகோலுக்கும் மைக்கும் அச்சியந்தரத்திற்கும் அப்பெருமை உரித்தாகுமெனில் இவனுக்கும் உரித்தாகும். ஆட்டுவித்தபடி ஆடியதொன்றிற்குத் தனிப்பெருமை ஏது?

ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடம் ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய ஸ்ரீ ஜயேந்த்ர ஸரஸ்வதி ஸ்ரீசரணர்களின் ஸங்கல்பம் ஸ்ரீ விக்னேச்வர வெங்கடேசுவர டிரஸ்டு நிறுவனத்தின் விருப்பமாக மாறி ஸ்ரீ விக்நேச்வரர் துணை நின்று செயலாக்க அது இவ்வாறு நிறைவடைந்துள்ளளது.

இப்பகுதியை வெளியிட முற்பட்டபோது பெருந்தயக்கமிருந்தது. குருவரர்களின் அருள் அவ்வப்போது கலக்கத்தை நீக்கித் தெளிவைத் தந்தது. காஞ்சியில் ஸ்ரீ மஹா பெரியவர்களின் திருநாமம் தாங்கிய நூலகம் தன் வற்றாத கோசத்தை, நூல்களின் முக்கியப் பகுதிகளைத் தடங்கலின்றி பயன்படுத்த அனுமதி தந்தது. அன்பர்கள் தன்னிடமிருந்த மூல நூல்களைத் தந்து உதவினர். தொடங்கும்போது திகைக்க வைத்தவை, பின் தாய்ப்பசுபோல அணைத்து உதவின. கணேசரே தாளிலும் பேனாவிலும் அச்சகத்திலுமிருந்து இரவும் பகலும் பாராமல் நிறைத்துத் தந்துள்ளார். ஸ்ரீ விக்னேசுவர வெங்கடேசுவர டிரஸ்டு நிறுவனம் இப்பணியை முன்னின்று ஆற்றியதற்கு சமுதாயமே நன்றிக் கடன்பட்டுள்ளது. விக்னேசுவரர் அனைவரையும் இவ்வாறு அடிக்கடி நற்பணியில் ஈடுபடுத்துவாராக.

என் தனித்த நன்றிக்குரியவர்கள் - ஸ்ரீ சந்த்ரசேகரேந்திர ஸரஸ்வதி பன்னாட்டு நூலகத்தின் மேலாளரும்

உதவியாளர்களும், ஸபர்யை பற்றி அவ்வப்போது விளக்கமும் மயூரேசுவர பூஜைக்கான கையெழுத்துப் ப்ரதியும் தந்துதவிய கும்பகோணம் ப்ரும்மஸ்ரீ தினகர சர்மா, அகத்தியர் கீதங்களை ஏட்டிலிருந்து நகல் எடுத்துத் தந்தஸங்கீத வித்வான் பெரும் உபாஸகர் திருவெண்காடு ஸ்ரீ ஜயராமன் அவர்கள், ஸ்ரீ ஆசிரியர் ஸ்ரீ நாகஸாமி தம்பதியினர், காஞ்சீபுரம் புலவர். பு.மா ஜயசெந்தில் நாதன் அவர்கள், மற்றும் நூல்கள் தந்து உதவிய அன்பர்கள். இந்த கடினமான புத்தக வெளியீட்டில் பெரிதும் உதவிய வி.கே.என், எண்டர்பிரைஸஸ் நிறுவனத்தினரான ஸ்ரீ வி.கே. நாராயணன் அவர்கள், அழகிய விநாயகர் தியான உருவங்களை வர்ணச்சிற்பமாக சித்தரித்துத் தந்த சித்திரகாரர் ஸ்ரீ பத்மவாஸன் அவர்கள் முதலானோர். இவர்களுக்கு என் மனமார்ந்த நன்றி உரித்தாகும்.

என்னிடத்தில் பரம கருணையுடன் எப்போதும் நற்செயல்களில் ஊக்குவித்து அருட்பார்வையால் நன்கு நிறைவுற அருள்புரிகிற நடமாடும் தெய்வமான ஸ்ரீ காஞ்சீ ஜகத்குரு ஸ்ரீ சரணர்கள்' மூலம் ஸ்ரீ விக்நேசுவரரது திருவடிக் கமலங்களில் இந்நூலை ஸமர்ப்பணம் செய்கிறேன்.

**S.V. ராதாக்ருஷ்ணசாஸ்த்ரீ**

*22. வீரேச்வரம் அப்ரோச் ரோடு.*

*ஸ்ரீரங்கம் - 620 006*

*11-3-2000*

# தெய்வ வழிபாடு

தெய்வத்தை எல்லோரும் ஏதோ ஒரு வகையில் வழிபடுகிறோம். அது மனித இயல்பு எனலாம். தெய்வம் தன்னைக் காட்டிலும் சிறந்தது ; வலிமை மிக்கது ; நெருக்கடியில் கை கொடுத்து உதவக் கூடியது ; அதனிடம் பல எதிர் பார்வைகள் ; பயம் என்று எத்தனையோ காரணங்கள். தாயாகத் தந்தையாக, ஆசானாகி வழிகாட்டியாக, அன்புக்குரியதாக, அன்புள்ளம் கொண்டதாக இப்படிப் பல தோற்றங்கள். இவ்வாறு தெய்வமாக நம் வாழ்க்கையில் பங்கு பெறுவதன் பொருட்டு, அதனைப் பின் பற்றுவதாக அதனை வழிபடுவதாகத் தான் வழிபாட்டு முறைகள் அமைந்துள்ளன. சைவர், சாக்தர், வைஷ்ணவர்கள், காணபதர் என்று வழிபாட்டில் கொண்ட முறை மாறுதல்களால் உட்பிரிவுகள் எண்ணற்றவை.

தெய்வத்தை ஏதேனும் ஒரு வழியில் பற்றி, நன்மை, மேன்மை பல பெற்ற பெரியோர்களின் வரலாறுகளும் அவர்கள் விட்டுச் சென்ற துதி முதலான நூல்களும் நமக்கு உதவ நாம் தெய்வத்தை அணுகுகிறோம். நமது பக்தியில் ஆழமில்லை. அதனால் நாமே நம் மொழி கொண்டு தெய்வத்தைத் துதிக்க முற்பட்டால் அது பெரும்பாலும் பொய் மொழியாகத் தானிருக்கும். உள்ளத்தின் ஆழத்திலிருந்து அது வெளிப்பட்டிராது. உதட்டின் நுனியிலிருந்தும் பேனா நுனியிலிருந்தும் வெளிபடுகிற போலி வார்த்தை ஜாலமாக இருக்கும். அதனால் பெரும்பாலும் நாம் நமக்குத் தெய்வத்தை வேண்டும்போது கூட பெரியோர்கள் இயற்றிய துதியைக் கையாள்கிறோம். அது அவர்களது இதயமொழி. இறைவனுடன் ஒட்டிப் பழகிய அனுபவத்தில் வந்த கருத்துக்கள். அவற்றில் ஆழமுண்டு. சுவை உண்டு. அம்மொழியை பகவான் பல முறை கேட்டறிந்துள்ளார். எந்த வாய் சொல்லுகிறது என்றறிய விரும்புவதில்லை. உள்ளக் கசிவும் நெகிழ்தலும் இல்லாதவனும் அதனைக் கூறும்போது நெகிழ்ந்து உருகி விடுகிறான். அந்தத் துதி பகவானுக்கு ஏற்றதொன்றுவதில் அதிசயமில்லை. அப்படி இனிக்க இனிக்க

நெஞ்சம் தழக்க தழக்கப் பாடி வழிபட ஏற்ற பல துதிகள் இந்நூலின் நான்கு பாகங்களிலும் இடம் பெற்றுள்ளன.

நான்காம் பாகத்தில அதிகக் கட்டுப்பாட்டுடன் குருவருள் துணை நிற்கப் பகவானை வழிபடும் முறைகள் தொகுக்கப் பட்டுள்ளன. பூஜை, ஸபர்யை, மந்த்ர ஜபம், ஹோமம் என்றவாறு அவை விரிவடைகின்றன. எந்த தெய்வத்தை வழிபட்டாலும் முதலில் விநாயகர் வழிபாடு உண்டு. ஸ்ரீ வித்யை உபாஸகர்கள் லலிதா திரிபுர ஸுந்தரி ஒருவளையே பரம்பொருளாக பர தெய்வமாக வழிபடுவர். அதற்கான ஸ்ரீ க்ரமத்தை உபதேசிக்க வந்த பரசுராம கல்ப ஸூத்ரம் முதலியவை முதலில் ஸ்ரீ கணபதிக் கிரமத்தைக் கூறியபின்னரே ஸ்ரீ க்ரமத்தை விளக்குகின்றன.

கணபதிக் கிரமமானது வைதிகம் தாந்திரிகம் மிச்ரம் என்று மூன்று வகையாகப் பிரிந்துள்ளது. தாந்திரிகத்திலும் தக்ஷிணம் வாமம் என்றும் பூர்வாம்நாயம், ஊர்த்தவாம்நாயம் என்றும் பல மாறுபட்ட வழிகள் காட்டப்படுகின்றன. ஆனால் தமிழ்நாட்டில் ஸ்ரீ வித்யா ஸபர்யாங்கமாக கணபதியை வழிபடுபவர்களும் தனித்துக் கணபதியை வழிபடுபவர்களும் வைதிக தாந்திரிகமான ஒரு தனிமுறையை அனுஷ்டித்து வருகின்றனர்.

## பூஜா - ஸபர்யா - வழிபாடு

தன்னை விடச்சிறந்தவரை மேலானவராகக் காட்டித் தன்னைத் தாழ்த்திக் கொண்டு, உள்ளார்ந்த நன்மதிப்புடன் உபசரிப்பது பூஜையாகும். पूजा (பூஜா) नमस्या (நமஸ்யா) अपचितिः (அபசிதி:) सपर्या (ஸபர்யா) अर्हणा (அர்ஹணா) என்ற சொற்கள் அமாநுஷ சக்தி படைத்த தேவர்களது பூஜைக்கான மாற்றுச் சொற்கள். மனிதர்களிடையே அமாநுஷ சக்தி பெற்றவரென ஒருவரை மதித்து உபசரிக்கும் போது शुश्रूषा (சுச்ரூஷா) वरिवस्या (வரிவஸ்யா) परिचर्या (பரிசரியா) उपासना (नं) (உபாஸநா (நம்) என்று அமரகோசம் மாற்றுச் சொற்களைத் தருகிறது.

பூஜா அர்ச்சா அர்ஹணா மதித்து உபசரிப்பது. நமஸ்யா - வணங்கி உபசரிப்பது. அபசிதி: - தன்னைத் தாழ்த்திச் செவி சாய்த்து உபசரிப்பது. ஸபர்யா - மேலானவருடன் இருப்பதை நன்குணர்ந்து ஏற்றபடி உபசரிப்பது. பரேணஸஹவர்த்ததே ஸபர:, தத்ரஸாத்வீ. வரிவஸ்யா - அருகில் நேரிடையாக உபசரிப்பது. சுச்ரூஷா - மேலானவர். சொல் கேட்டு அதன்படி நடப்பதில் ஆர்வம். பரிசர்யா - சுற்றிச் சுற்றி நின்று பணிவிடை. உபாஸநா - அருகில் அமர்ந்து பணிவிடை. இந்தச் சொற்கள் உணர்த்தும் முறை பின்வருமாறு - எப்போதும் உடலாலும் மனத்தாலும் மேலோரின் - தெய்வத்தின் அருகாமையை விரும்பி, அவர் வழி நின்று, அதற்கேற்ற எண்ணம், சொல் செயல் என்ற மூன்றையும் நெறிப்படுத்தி, தன் அகந்தை மமதைகளை விட்டொழித்து அவரே மேலானவர். தன் உடைமையாளர், தான் அவரது உடைமை என்ற எண்ணம் மேலோங்க, அவரது பேராற்றலை உணர்ந்து உபசரிப்பது தான் பூஜை. அதுவே ஸபர்யையும் வரிவஸ்யையுமாகும்.

எனினும் பூஜை என்பது உபசரிப்பு சாதனங்களைக் கொண்டு வழிபடுவது. இது இருவகை (1) பாஹ்ய பூஜை (வெளிப்படையான உபசரிப்பு) (2) மாநஸ பூஜை என்பது உள்ளுணர்வில் அந்த உபசரணைகளை நிகழ்த்துவது என்று வழக்கில் வந்துள்ளது.

ஸபர்யையோ இதற்குச் சற்று மாறுனது. மந்த்ரம், தந்த்ரம், யந்த்ரம் என்ற மூன்று ஸாதனங்களின் துணை இதில் சிறப்பிடம் பெறுகிறது. பூஜையில் செய்கிற உபசரணைகளே இதிலும் இடம் பெறுகின்றன. உடலும் மனமும் ஆத்மாவும் தான் வழிபடுகிற தெய்வத்துடன் ஸபர்யையில் ஒன்றிப் போகும். தன்னைக் காட்டிலும் அது வேறுபட்டதல்ல என்ற உணர்வைப் பல ஸாதன முறைகளால் ஏற்படுத்திக் கொள்வர்.

உபசரணையில் பயன்படுகிற மந்த்ரமும் யந்த்ரமும் அந்த தேவதையே என்ற பாவனையும் உண்டு. வழிபடுகிற தானும் வழிபடப்பெறுகிற தேவதையும் அதற்குப் பயன்படுகிற மந்த்ர யந்த்ரங்களும் இவற்றைத் தனக்குச் சுட்டிக் காட்டி வழி நடத்திச் செல்கிற குருவும் ஒன்றே. இந்த சதுர்வித ஐக்யம்

உணரப்பெறுவதே ஸபர்யையின் முக்கிய நோக்கும், ஸபர்யையின் இறுதியில் பெறும் ஸித்தியுமாகும்.

அந்தக் குறிக்கோளைச் சென்றடைவதாக படிப்படியாக அமையுமானால் அது ஸபர்யை. அதற்குப் பயன்படாதபோது அது ஒரு ஆடம்பரமிக்க பாஹ்ய பூஜையாகும். உயர்ந்த பொருளைத் தாழ்ந்த பணியில் பயன்படுத்திய அறியாமை இது என வல்லுனர் கூறுவர்.

## பூஜா விதானம்

பூஜை, ஸபர்யை என இரு தனி வழிபாட்டு முறைகள் பிரித்துத் தரப்பட்டுள்ளன. தனது மனத்திற்கும் வாக்கிற்கும் எட்டாத பகவானை - ஏதாகவோ எங்கோ எங்குமோ இருப்பவரை - தன் உளமார்ந்த வேண்டுகோளை ஏற்றுத் தன் இருப்பிடத்திற்கு வர அழைக்கிறோம். அவர் அருள் புரிந்து நம்மை நோக்கி வரும் போது மனத்தாலும் கைகளாலும் தாங்கி வரவேற்பதே ஆ-வாஹனம்.

அவ்வாறு அடிக்கடி வரவேற்று அவரது அருகாமையை உணர்ந்து பழக அவரது அருளுருவத்தின் ரூப - குணாதிகளை உணர்ந்து ஆழ ஆழ்மனத்தில் பதித்து விடுகிறோம். அவர் எப்போதும் நம் உள்ளத்தினுள் குடி கொண்டிருப்பதை உணர்ந்து சேதனராக அவர் நமது ஒவ்வொரு செயலையம் கண் காணிப்பவராக உணர்கிறோம். இது தியானம். தியானத்தால் மனத்தை ஒருமுகப்படுத்தி, ஆனந்த வடிவினராக அவரைக் கண்டு, பேரொளியாக, பேரொலியாக அவர் மாறியதை உணர்ந்து இதய கமலத்தின் நடுப் பகுதியிலிருந்து அவரை வெளியே வரக்கோரி, மனத்தால் தாங்கி, மூச்சால் வெளிப்படுத்தி, அவரது வழிபாட்டிற்கென வெளியே அமைந்துள்ள - அவரை உருவகப்படுத்துகிற விக்ரகம் சித்திரம் யந்த்ரம் முதலியவற்றில் வந்தமரும்படி வேண்டுகிறோம். அது தியானமும் ஆவாஹனமுமாகிறது.

விக்ரகம் முதலானவற்றுள் நுழைந்த பரமன் அவற்றுள் பரவி நின்று வழிபாட்டை ஏற்க, அவற்றிற்கு ஜீவசக்தி ஊட்ட பிராண பிரதிஷ்டை செய்கிறோம். பூத உடல், பொறிகள்,

உள்ளம் இச்சா - கிரியா ஞான சக்திகள், எல்லாம் நிறைந்த பூர்ண சைதன்ய வடிவினனாக பகவானை விக்ரகம் முதலானவற்றில் எதிர் கொள்கிறோம். இது வரை உள்ளத்தில் குடி கொண்டிருந்த பெருமானே வெளியே விக்ரமாக சித்திரமாக நிற்கிறார்.

இவருக்கு ஆஸனம் முதலிய பல உபசாரங்கள் நிகழ்கின்றன. இது பாஹ்ய பூஜை. இதற்கும் தேசம், காலம், இடம், பொருள், ஏவல் என்ற பல சாதனங்களை எதிர்பார்ப்பது அவசியமாகிறது. இவற்றின் நிறைவு பேராநந்தத்தைத் தருகிறது.

உள்ளத்திலேயே குடி கொண்ட பெருமானை அவ்விடத்திலேயே மனம் உருவகப்படுத்திய ஆஸனம் முதலிய சாதனங்களைக் கொண்டு கோயில் கொள்ளச் செய்து விரிவாக வழிபடலாம். ஸ்ரீ சங்கர பகவத் பாதர்கள் திருப்பள்ளி எழுச்சி தொடங்கி இரவு திருப்பள்ளியமர்தல் வரையுள்ள உபசாரங்களை மனத்தாலேயே மிக விரிவுடன் எல்லா தேவ - ராஜ உபசாரங்களுடன் நிகழ்த்த வழி காட்டியுள்ளார், தமது மானஸ பூஜா ஸ்தோத்திரங்களில்.

மனமானது தேசம் காலம் பொருள் பணி என்ற வெளி நிலையை எதிர்பாராமல் தனக்கெனத் தனித்த தேசகாலாதிகளை வகுத்து நொடியில் யுக - யுகாந்தரமாக - நிகழ்த்த வேண்டிய உபசாரங்களைச் செய்து விடுகிறது. ஆனால் எளிதில் மனம் ஒரு நிலைப்படுவதில்லை. அதனால் மானஸ பூஜை செய்வதற்கும் பாஹ்ய பூஜையைக் கருத்துடன் பல தடவைகள் செய்து பழகி ஆழ் மனத்தில் உள்வாஸனையாக - ஸம்ஸ்காரமாக வழிபாட்டைப் பதிக்கும்படி குருவரர் உபதேசிப்பர். பின்னரே மானஸ பூஜை எளிதாகும். மானஸ பூஜையிலும் பாஹ்ய பூஜையின் வரிசையமைப்பே இடம் பெறுகிறது. பாஹ்ய பூஜையிலும் மனத்தின் கருத்தொருமித்த நிலை முக்கியமெனினும் உடலின் உதவியும் பெருமளவு தேவை. மானஸ பூஜையில் உடல் கட்டையாகி விட மனம் தனித்துப் பூர்ணமாக செயலாற்றுகிறது. மனமே ஸர்வாதிகாரி.

உபசாரங்கள் - இவை பலவகைப்படுகின்றன. பஞ்சோபசாரங்களில் கந்தம், புஷ்பம், தூபம், தீபம்,

நைவேத்யம் என்ற ஐந்தும் இடம் பெறுகின்றன. தாம்பூலத்தையோ, தாம்பூலம் முதலிய அனைத்து உபசாரங்களையுமோ இதிலேயே அடக்குவர். இதற்கு லமித்யாதி பஞ்ச பூஜை என்ற பெயருண்டு. பூமியின் தத்துவ நிலை மணம், அதன் உருவகம் சந்தனம். ஆகாயத்தின் தத்துவ நிலை மலர்ச்சி என்ற விரிவடைதல். இதன் உருவகம் பூ. வாயுவின் தத்துவ நிலை பரவச்செய்தல். அதன் உருவகம் தூபம் அக்கினியின் தத்துவ நிலை ஒளி. அதன் உருவகம் தீபம். ஜலத்தின் தத்துவ நிலை அமுதம் எனும் உயிர்ப்பு. அதன் உருவகம் உணவு (நைவேத்யம்). உலகை ஐந்து பூத தத்துவங்களாகப் படைத்து நமது ஜீவனத்திற்கு உதவுகிற மூலப் பொருளாக்கித் தந்த பெருமானுக்கு அவற்றை உரிமைப் பொருளாக்குவதே இந்த உபசாரங்களின் நோக்கம்.

ஷோடசோபசார பூஜை என்று 16 உபசாரங்கள் கொண்ட பூஜை உண்டு. இதில் எவை எவை அடங்கும் என்பதில் கருத்துக்கள் வேறுபடும். பெரும்பாலும், ஆஸனம், பாத்யம், அர்க்க்யம், ஆசமனம், மதுபர்கம், ஸ்நானம், வஸ்த்ரம், ஆபரணம், கந்தம், அக்ஷதை, புஷ்பம், தூபம், தீபம், நைவேத்யம், தாம்பூலம், கர்பூர நீராஜநம் என்பவை வழக்கில் உள்ளன. ஆவாஹநத்தை முதலில் சேர்த்து அக்ஷதை நீக்கிக் கொள்வது உண்டு. பிராணப் ப்ரதிஷ்டை செய்து நித்ய பூஜை நடைபெறுவதில் அவ்வப்போது ஆவாஹனம் அவசியமில்லை என்ற கருத்தில் ஆவாஹனத்திற்கு மாற்றாகத் தியானத்தைக் கொள்வதுமுண்டு. வெளியிலுள்ள விக்ரகத்தில் பிராண ப்ர்திஷ்டை செய்திருந்தாலும், அந்த விக்ரகத்தில் உள்ளத்தில் குடி கொண்டவரையும் கொண்டு சேர்ப்பது உசிதமானதால் தியானமும் ஆவாஹனமும் ஒவ்வொரு முறையிலும் தேவைதான். ஆனால்அது ஒரு தனித்த உபசாரமல்ல என்று குருநாதர் கூறுவார்.

கந்தத்தில் அக்ஷதையையும், நிவேதனத்தில் தாம்பூலத்தையும் அடக்கி ஸ்தோத்திரம் அல்லது மந்த்ர புஷ்பம், ப்ரதக்ஷிண நமஸ்காரங்கள் என்ற இரு உபசாரங்களைச் செய்வர். ப்ரதக்ஷிண நமஸ்காரங்களும் உபசாரத்தில் சேராது. பகவான் மனமிரங்கி வழிபாட்டை ஏற்றதற்கான

நன்றியுணர்வின் வெளிப்பாடு என்பார் குருநாதர். கர்பூர நீராஜனத்தை உபசாரமாகக் கொள்ளாமல், வஸ்த்ரத்தைத் தொடர்ந்து உபவீதத்தை உபசாரமாக்குவது உண்டு. பெண் தெய்வத்திற்கும் உபவீதம் உண்டு.

உபசாரம் செய்யும் போது ஏற்படுகிற பிழைகளைப் பொருத்தருள வேண்டிக் கற்பூரம் போல் பிழைகள் கரைய வேண்டுகிறோம. உபசாரம் (பணிவிடை) என்பது பகவானைத் த்ருப்திப் படுத்த. உபசாரத்திற்கு மற்றொரு பெயர் - ஆராதனம் - முழு திருப்திப் படுத்துதல். இவ்விரண்டையும் கர்பூர நீராஜனம் தருகிறது'' ஸர்வாபராதக்ஷமாபணார்த்தம் - ஸர்வ மங்கள ப்ராப்த்யர்த்தம்.

பதினாறு உபசாரங்களில் அருந்தக் குடிநீர் (அம்ருதபானீயம்) புஷ்பாஞ்ஜலி, குடை (சத்திரம்) சாமரம், கண்ணாடி (தர்பணம்) பல்லக்கு முதலிய அரச மரியாதைகள் அடங்காதவை. வழிபாடு நிறைவுற்றதும் பகவானை அவரது இருப்பிடம் செல்ல வழியனுப்புதல் உத்ஸர்ஜனம் எனப்படும். திரும்ப இதய கமலத்தில் குடி கொள்ள வேண்டுவதும் இதனுட்படும். நித்ய பூஜையில் உள்ளவருக்கும் சோணபத்ர சிலையில் பஞ்சாயதன பூஜையாகச் செய்யுமிடத்திலும் ஆவாஹன - உத்ஸர்ஜநங்கள் செய்வதில்லை. இதயத்திற்குள் கொள்வது மட்டும் உண்டு. தாற்காலிக பூஜையாகில் இவ்விரண்டும் அவசியமே.

ஸாமான்ய பூஜையில் கலசம், சங்கம், பூஜை - அபிஷேக நீரை வாங்கிக் கொள்கிற பதத்க்ரஹம் (வேதியிலிருந்து விழுவதை ஏந்திக் கொள்வது) என்ற பாத்திரங்கள் தேவை. விரிவு படுத்தும் போது பாத்யம், அர்க்யம், ஆசமனம், மதுபர்கம் ஸ்நானம் என்ற ஐந்து பாத்திரங்கள் (பஞ்ச பாத்திரம்) அதிகம்.

பாத்யத்திற்கான நீரில் அருகம்புல், தாமரை விஷ்ணுக்ராந்தி, சாமை தான்யம் இவைகளைச் சேர்ப்பர். நறுமணமுள்ள எண்ணெய்ப் பூசியபின பாத்யநீரால் திருவடிகளை அலம்புவர். எள், தர்ப்பை நுனி, சந்தனம், வெண் கடுகு, யவையரிசி, நறுமணப்பூ, அக்ஷதை, அருகம்புல் என்ற எட்டை அர்க்கிய நீரில் சேர்த்துக் கைகளை அலம்பச் செய்வர்.

முழங்கால் மண்டியிட்டு இதனைத் தரும்படி சிவபுராணம் கூறும். ஆசமனத்திற்கான நீரில் ஜாதிக்காய், வால்மிளகு, கிராம்பு, சந்தனம் கலந்து தருவர். பச்சை கற்பூரம், அகில்கட்டை அரைத்த விழுது, நறுமணப்பூ போட்டதும் தருவர். மதுபர்கம் என்பது தயிர், நெய், தேன், சர்க்கரை இவற்றைக் கரைத்த திரவம், தேன், திராக்ஷை வாழைப்பழம் சர்க்கரை கலந்த பாலும் பயன்படுத்தப் படுகிறது. தேனும் தயிரும் நெய்யும் கலந்து தருவதே மதுபர்கம் தான். ஸ்நான ஜலமாக, கணாநாம் த்வா என்ற ருக், கணேசகாயத்ரி, கணபத்யத்ர்வசீர்ஷம், பிரம்ஹணஸ்பதிஸூக்தம் முதலியவற்றை ஜபித்து புனிதமாக்கிய நீர் சிறந்தது.

பகவானது எல்லா உபசாரங்களிலும் எட்டு நறுமணப் பொருள்கள் கொண்ட அஷ்டகந்தம் சேர்க்கப்படும். சிவனுக்கும் விஷ்ணுவிற்கும் தேவிக்கும் அஷ்டகந்தமிருப்பது போல் கணபதிக்கும் தனித்த அஷ்டகந்தம் உண்டு. குங்குமப்பூ, கோரோசனை, ஜடாமாஞ்சீ, கஸ்தூரி, காரகில், சந்தனம், கோரைக் கிழங்கு, செஞ்சந்தனம் என அவை எட்டு. ஸ்நானம் முதலியதிலும் ஸாமான்யார்க்யம் முதலியவற்றிலும் இதைச் சேர்ப்பர்.

தீபம் - பகவானுக்கு எதிரில் தீபம் வைப்பர். ஒன்று, அல்லது ஒன்றுக்கு மேற்பட்டால் இரட்டைப் படையாக வைப்பர். சுடரும் தாபமும் பகவானை அணுகக் கூடாது. புகையும் சடசட சப்தமும் இல்லாமல் ஒளி பரவும்படி இருத்தல் அவசியம். தீபத்தைப் பூமியில் வைக்கக் கூடாது. இலவம் பஞ்சாலான திரி, தாமரை நூலாலான திரி நல்லது. நல்லெண்ணெய், நெய் விட்டு எரிப்பது நல்லது. எண்ணெய்க் கலப்படம் ஏற்றதல்ல.

பொதுவாக தீபத்தின் முகம் கிழக்கு வடக்கு நோக்கின் சுபம். சில தேவதைகளுக்கு மேற்கு முகம் ஏற்றது. பகவானுக்கு வெளிச்சம் கொடுக்க மேற்கு முகமும் நல்லதே. பொதுவாக 3-5-7-9 என ஒற்றைப் படை முகம் கொண்ட தீபங்கள் நல்ல ஒளி தருபவை. தேன் மெழுகாலான வத்தியும் நல்லதே. நெய் தீபத்தைப் பகவானது வலப்பறத்திலும் எண்ணெய் தீபத்தை

இடத்திலும் வைப்பர். செந்நிறத்திரியானால் இடத்திலும் வெண்ணிறத்திரியானால் வலத்திலும் வைப்பர்.

தீபத்திலேயே தெய்வத்தை ஆவாஹனம் செய்து வழிபடுவதுண்டு. அப்போது அது கிழக்கு முகமாகவே வைக்கப்பெறும். வேறு தீபம் வைத்து அதிலேயே திரி கூடம் முதலியவற்றை ஏற்றுவர்

புஷ்பமும் பத்திரமும் - அருகம்புல், வன்னி இலை, மந்தாரை இலை, மந்தாரைப்பூ, இவை கணபதியை வழிபடச் சிறந்தவை. தாழம்பூவும், துளசியும் ஏற்றவையல்ல. சிவ வழிபாட்டில் பயன்படுகின்ற பூவும் இலையும் இவருக்கு ஏற்றவையே. விநாயக சதுர்த்தியன்று செய்யப்படுகிற 21 - இலை - பூ அர்பணத்தில் துளசியும் தாழம்பூவும் இடம் பெறலாம். அது விதி விலக்கு. அருகம்புல், வன்னி இலை, மந்தாரைப்பூ, இவற்றைக் கணேசப் பெருமான் உவந்தேற்பதற்கும், துளசியை அவரது வழிபாட்டில் தவிர்ப்பதற்கும் விந்தை மிகுந்த புராணக் கதைகள் உண்டு.

வில்வ இலைக்கு நிர்மாலிய தோஷம் இல்லை என்பர். ஒரு மாதம் வரை - சிதையும் வரை நீரைத் தெளித்துத் திரும்பத் திரும்பப் பயன்படுத்துவது உண்டு. புஷ்பம் முதலியவற்றை காம்பு கீழாகவும் மலர்ப்பகுதி மேலாகவும் பதியும்படி பகவானின் மேல் போட வேண்டும். வில்வ பத்திரத்தை மட்டும் உட்புறத்தைப் பகவானின் மேல் படும்படி போட வேண்டும். புஷ்பாஞ்சலியாகப் போடும்போது எப்படியேனும் இருக்கலாம். அருகம்புல்லும் பில்வமும் சேர்த்து அர்பணம் செய்வது சிறந்தது. தும்பைப்பூ, நந்தியாவட்டை, அகத்திப்பூ, மகிழம்பூ, நாகப்பூ, நொச்சி இலை, அல்லி, ஆம்பல், கழுநீர், முதலியவையும் சிறந்ததே.

காய்ந்தது, மணம் குன்றியது, பூச்சியரித்தது. பறித்து ஒரு நாளானது, தானே உதிர்ந்தது. சிதைந்தது, மலராமல் மொட்டாக உள்ளது, இடுப்பிலுடுத்திய ஆடையில் கட்டிக் கொணர்ந்தது, வழிபாட்டில் பயன்படுத்தியது இவை வழிபாட்டிற்கு ஏற்றவையல்ல. நூலில் கட்டிய பூ தைத்தபூ அர்ச்சனைக்கு ஏற்றதல்ல. மாலைக்கு ஏற்றதே.

விநாயக சதுர்த்தியின் போது 21 இலைகள் 21 பூக்கள் 21 பழங்கள் கொண்டு வழிபடுபவர். பெரும்பாலும் இவை காட்டில் பயிராகுபவை.

ஸ்நானம் - அபிஷேகம் - சந்தனத்தைலம் முதலிய நறுமணமிக்க எண்ணெய் தேய்த்து, பஞ்சகவியம், இவற்றில் நீராட்டல் மஞ்சள் பொடி, அரிசி மா, ஸுகந்திப் பொடி முதலியவற்றால் அழுக்கு நீக்குதல், ஐந்து பழச்சாறுகளாலான பஞ்சாமிருதம், வாழைப்பழம் திராக்ஷை பேரீச்சை தேன் சர்க்கரை என்ற ஐந்து கலந்த பஞ்சாமிருதம், நெய் பால் தயிர், தேன் கருப்பஞ்சாறு, இளநீர், சந்தனம் முதலியவற்றால் நீராட்டிப் பின் கங்கை நீர் முதலிய புனித நீர். மந்திர ஜபத்தால் புனிதமாக்கிய நீர். இவற்றால் அபிஷேகம் செய்வர். பிரதிமை, விக்ரஹம், யந்த்ரம், தகடு முதலியவற்றில் வழிபடுவதானால் தினமும் நீராட்டுவதில்லை. அழுக்கு சேர்ந்து ஒளி மங்கினாலோ, கிருஷ்ணாஷ்டமி பௌர்ணமி, க்ருஷ்ண சதுர்தசி அமாவாஸ்யை மாதப்பிறப்பு என்ற பர்வ தினங்களிலோ, வெள்ளிக்கிழமை, செவ்வாய் முதலிய விரத நாட்களிலோ சுக்ல - க்ருஷ்ண சதுர்த்திகளிலோ அபிஷேகம் செய்வர். கணபதி ஸூக்தம் ப்ரம்ஹணஸ்பதி ஸூக்தம், கணேசாதர் வசீர்வஷம், கணாநாம் த்வா என்ற மந்த்ரம், ஏதேனும் ஒரு கணபதி மந்தரம் இவைகளில் எதனையும் அறியாதவர் காயத்ரிமந்திரம், அதன் உபதேசம் பெறுதவர், கணபதியின் ஏதேனும் ஒரு ஸ்தோத்திரம், நீராட்டுவதில் சிறந்தது. பகவானது உள்ளம் குளிர்ந்து அருள் பரவும். கபிலைப்பசுவின் பஞ்சகவியஸ்நானம் சூழ்நிலையையும் வழிபடுபவனிடத்தில் உள்ள கேடுகளையும் நீக்கும்.

நூற்றுக் கணக்கில் கலசங்களும் சங்கங்களும் வைத்து அவற்றிலுள்ள நீரில் பகவானது மந்த்ரம் ஜபித்து பகவானை ஆவாஹனம் செய்து வழிபட்டு அதனால் நீராட்டல், பெரும் பலனைத் தரவல்லது.

தேன், நெய், தயிர் கலந்த மது பர்கத்தால் நீராட்டுவதும், பச்சைக்கற்பூரம் கலந்த நீர், பூமணமிக்க நீர் (பன்னீர்) அருகம்புல்லிட்ட நீர் இவற்றால் நீராட்டுவதும் சிறந்ததே.

ஞான தாதாவாக விக்னம் நீக்குபவராக வழிபடின் வெண்ணிறமேனியில் வெண்ணிற ஆடை, வெண்ணிறப்பூ, வெள்ளை ரத்தினங்களாலான அணி- இவற்றை அணியச் செய்வர். வெண்குடை வெண் சாமரம் இவற்றால் அழகுபடுத்துவர். ஆற்றலும் செல்வமும் பெற செந்நிற மேனியில் செந்நிற ஆடை செந்நிற ரத்னங்கள் பதித்த ஆபரணங்கள் சிவந்த பூ சிவந்த பூச்சு சிவந்த குடை முதலியவற்றால் உபசரிப்பார்.

சந்தனம் முதலிய நறுமணப் பொருள்களால் உடற்பூச்சு, சந்தனம், கோரோசனை, சிந்தூரம், புனுகு, ஜவ்வாது, கஸ்தூரி, இவற்றைச் சேர்த்தோ, தனித்துக்குழைத்தோ திலகமிடுதல், பச்சைக் கற்பூரம் காரகில் கஸ்தூரி சந்தனம், வால்மிளகு இவற்றாலான யக்ஷகர்தமம் என்ற பூச்சு, குங்குமப்பூ 2 பங்கு கஸ்தூரி 2 பங்கு, சந்தனம் 3 பங்கு, பச்சைக் கற்பூரம் 1 பங்கு இவற்றாலான பூச்சு பச்சைக் கற்பூரம், சந்தனம், கஸ்தூரி, குங்குமப்பூ இந்த நான்கையும் ஸமஅளவு சேர்த்து அரைத்த பூச்சு இவை யந்த்ரம் விக்ரகம் முதலியவற்றில் நறுமணம், கமழவும், புழுபூச்சி பாதிக்காமலிருக்கவும் நல்லது.

சந்தனம் முதலியவற்றை இட, வலது நடு விரலும் பவித்ரவிரலும் சிறந்தவை.

முனை முறியாத முழு அரிசி - நெல்லிலிருந்து உமி உரித்து எடுக்கப்பட்டதே அக்ஷதை (முனை முறியாதது) ஆகும். இதனைக் குங்குமப்பூ, குங்குமம், மஞ்சள் தூள், செஞ்சந்தனக் குழம்பு, இவற்றால் மஞ்சள் அல்லது செந்நிற மடையச் செய்தபின் உபயோகிக்கலாம். அக்ஷதையை வெண்ணிறமாகவே உபயோகிப்பதில்லை. வசதியுள்ளவர் முத்து பவழம் முதலிய ரத்தினங்களையும் அக்ஷதையாகப் பயன்படுத்துவர்.

பூவை நடு விரலுக்கும் மோதிர விரலுக்கும் இடையே எடுத்து அர்பணம் செய்வதும், நிர்மாலியத்தைக் கட்டை விரல் ஆட்காட்டி விரல்களால் அகற்றுவதும் சிஷ்டரின் வழக்கம். செண்பகம், தாமரை, நீல அல்லி, ஆம்பல் செம்பரத்தை, அருகம்புல், மந்தாரைப்பூ, வன்னி இலை, ஜாதிப்பூ,

முதலியவற்றாலான மாலைகள் சிறந்தவை. குறிப்பிட்ட நாட்கள் வரை ( 6 மாதங்கள் ஒரு வருஷம் என) குறிப்பிட்ட ஒரு பூவைக் கொண்டே வழிபடுவதுண்டு.

புஷ்பம் பகவானை அலங்கரிக்கவும், அவரது திருவடிகளில அவரது நாமம் சொல்லி நமஸ்காரத்தைச் செய்வதான பாவனையுடன் பூவை வைப்பதற்கும் உதவுகிறது.

கர்பூர நீராஜனம் - நமது பாபங்களனைத்தும் சுட்டெரிக்கப் படுவதாக, நமது பிழைகளைப் பகவான் கருணையால் பொறுத்துக் கொள்வதாகப் பாவனையுடன் இதனைச் செய்கிறோம். தொடர்ந்து வேத - ஸ்துதிகளைக் கூறி புஷ்பாஞ்ஜலி செய்து வலம் வந்து (ப்ரதக்ஷிணம்) நமஸ்காரம் செய்து பகவானது திருவருள் வேண்டி நிற்கிறோம்.

நித்ய பூஜையாக இருந்தால் பகவானைத் திரும்ப உள்ளத்தினுள் குடிபுகச் செய்வோம். (ஹிருதயாவஸ்தாபனம்) தாற்காலிக நிமித்த பூஜையாயின் விஸர்ஜநம் - யதாஸ்தானம் - ப்ரதிஷ்டாபனம் செய்து அவர் நமது வழிபாட்டை ஏற்ற மகிழ்ச்சியில் தம்மிருப்பிடம் செல்வதை உணர்கிறோம். பகவானின் வழிபாட்டில் பயன்பட்ட பொருளை அவரது அருட் பிரஸாதமாக ஏற்றுப் பூஜையை நிறைவு செய்கிறோம்.

### மந்த்ர விதானம்

ஸபர்யையில் மந்திரம் தந்திரம் யந்திரம் என மூன்று உதவுகின்றன. இவ்வழியில் உபாசனை செய்பவனுக்கு உடலும் மனமும் ஆத்மாவும் தூய்மையும் கட்டுப்பாடும் பெற்று ஈடுபட வேண்டியிருக்கிறது. உபாஸகனது பக்குவ நிலைக்கேற்ப சுருக்கமாகவோ விரிவாகவோ பல உபாஸநாக்கிரமங்கள் பின்பற்ற நேரும். அதில் பயிற்சியும் பழக்கமும் பெற, அவற்றைத் தன் இயல்பாகக் கொண்டு தெய்வீக வாழ்வாகத் தன் வாழ்வை. வாழ்க்கை முறைகளை - அமைத்துக் கொள்ள ஒரு வழிகாட்டி - குரு - தேவை -

உபாசனை ஒவ்வொன்றுக்கும் பல்வேறு முறைகள் உள்ளன. பல்வேறு ஸம்ப்ரதாயங்கள் உள்ளன. அவற்றை நூல்முகமாக கற்கும் போது இது சிறந்ததா அது சிறந்ததா என்று

கற்பனையில் சீர் தூக்கிப் பார்க்கையில் குழப்பம் நேரும். எந்தப் பேரறிவாளரும் தானே தனக்கேற்ற குருவைத் தேடிச் சென்றடைவதுண்டு. அவரே தெய்வமென்ற பாவனை வலுக்க அவர் காட்டுகிற வழியில் உபாஸனை நன்கமையும்.

இறையருள் முழுவதும் பெற்ற குரு உபாஸகனுக்கேற்ற மந்திர - தந்திர - யந்திர முறைகளை வகுத்துப் போதிப்பார்.

குருவிற்கு ஆறு முக்கியப்பணிகள். பகவானின் அருள் பெற இன்றியமையாத வழி பாட்டு முறையில் ஈடுபாடு ஏற்படுத்துவது, அதற்கான வழி காட்டுவது, அதனைச் சொல்லித் தருவது. செய்து காட்டி வழியை எளிதாக்குவது. பிழை ஏற்படாமல் கருத்துடன் உபாஸனை புரியக் கட்டுப் பாடுகளை அமைத்துத் தருவது, உபாஸனையின் முழு தத்துவங்களையும் உணரச் செய்து தனக்குச் சமமாக, தன்னை விட மேம்பட்டவனாக, தெய்வ நிலை உணர்வு முழுதும் பெற்றவனாக ஆக்குவது என்பதே அப்பணிகள்.

**प्रेरकः सूचकश्चैव वाचको दर्शकस्तथा ।**
**शिक्षको बोधकश्चैव षडेते गुरवः स्मृताः ॥**

என்று குலார்ணவம் கூறும். இத்தகைய குரு கிட்டுவது அரிது. பகவானே குருவாக வந்துள்ளார் என்ற பாவனை முற்றி உபாஸனைதெய்வத்திற்கும் குருவிற்கும் இடையே வேற்றுமை உணராத நிலைக்கு வரும் போது குரு அவனுக்கு நல்ல வழி காட்டியாயிருக்கிறுர். இந் நிலையில் குரு காட்டிய வழியிலேயே செல்வான். வேறு பல வழிகள் தென்பட்டாலும் கலங்காமல் உறுதியுடன் குரு காட்டிய வழியையே ஒளிமிக்கதாகக் காண்பான். குரு இவனுக்கென விரித்தோ சுருக்கியோ சில வழிகளைக் காட்டுவார். அதுவே இவனுக்கு ஏற்றது. நூல்களில் காட்டியிருக்கின்ற வழி எல்லாமும் இவன் செய்வதற் கேற்றதல்ல. குரு காட்டுகிற வழியே ஏற்றது. நூல்கள் உபாஸனைக்கான கோடிகாட்டக்கூடும். நூல்களின் மூலம் (குருவின்றி) கற்ற மந்த்ரம் பலிக்காது. விபரீதபலன் கூடத் தரக்கூடும் என்று அந்த நூல்களே வற்புறுத்துவதைக் காணலாம்.

குரு மூலம் பெற்ற மந்த்ரத்தைக் குரு காட்டிய வழியில் ஜபம் செய்து புரச்சரண முறைப்படித் தனக்கு உரியதாக்கிக்

கொள்ளுதல் அவசியம். பெண்ணுக்கும் ஆணுக்கும் விவாகப் பொருத்தம் பார்ப்பது போல் உபாஸகனுக்கும் மந்த்ரத்திற்கும் ஸித்தாரி கோஷ்ட முறையில் பொருத்தம் பார்ப்பர். ஏற்கனவே (முன் பிறவியில்) சித்தியாகி இப்பிறவியில் குரு உபதேசம் என்ற வழிமுறையை மட்டும் எதிர்பார்க்கும் மந்த்ரங்கள், ஸுஸித்தம் எனவும் எளிதில் சித்தியாகக்கூடியவை ஸித்தம் எனவும், கடும் முயற்சியால் மட்டும் சித்திக்கக் கூடியது ஸாத்யம் எனவும் கடும் முயற்சியாலும் சித்தி பெற இயலாததோடு நில்லாமல் சத்துருவாகக் கூடியது அரி என்றும் நான்கு வகையாக மந்திரங்களை சித்தாரி கோஷ்டத்தின் மூலம் கண்டு பிடிப்பர். முன் பிறவியில் தீவிர உபாஸனையால் சித்திக்க வேண்டிய மந்திரம் தடைபட்டிருந்தால், இப்பிறவியில் தான் கடன் பட்டிருந்ததுபோல் குரு உபதேசம் பெற்றதும் சித்தித்து விடும். முன் பிறவியில் மந்திரத்தைக் கெட்ட வழியில் பயன்படுத்தி இருந்தால் இப்பிறவியில் அது சத்துருவாகித் துன்பம் தரும். இதுவும் வினைப்பயனே.

குருவிடமிருந்து பெற்ற மந்த்ரத்தை முறைப்படி ஜபிக்காமல் விட்டால், தெய்வக் குற்றத்திற்குத்தான் ஆளாவது மட்டுமின்றி குருவும் அதில் பங்கு பெறுவார். நல்ல குருவாகவும் நல்ல சிஷ்யனாகவுமிருப்பது தான் குரு பரம்பரைக்கு மேன்மை தரும்.

மந்த்ரங்கள் தன்னை மனனம் செய்பவர்களைக் காப்பவை (மநநாத் த்ராயதே). மநநம் என்பது நாப்பழக்கமான சொல்லை மனத்தால் பழகுவதே. இடையறாது உள்ளத்தில் பதித்து நினைவு அகலாமல், எண்ணம் சிதறாமல் மனம் ஒரு முனைப்பட்டுச் செய்வது மனனமாகும். மானசிக வழிபாட்டில் ஈடுபடுபவனுக்கு மந்த்ர ஜபம் எளிதில் நடக்கும்.

மந்த்ரம் பலவகைப்படும். ஓரக்ஷரம் உள்ளவை பிண்டம். இரண்டு அக்ஷரம் உள்ளவை கர்தரீ. மூன்று முதல் ஒன்பதக்ஷரங்கள் வரை கொண்டவை பீஜம். 10 - 20 அக்ஷரங்கள் கொண்டவை மந்திரங்கள். அதற்கு மேற்பட்டவை மாலா மந்திரம் - மஹா மந்திரம் எனப்படும். மந்திரத்தில் ஒவ்வொரு அக்ஷரத்திற்கும் தனித்த சக்தி உண்டு. ஓர் எழுத்தாகத்

தோன்றுவதில் அதில் உள்ள மெய்ப்பகுதிக்கும் உயிர்ப் பகுதிக்கும் ம் என்று அனுஸ்வாரத்திற்கும், உயிர் எழுத்தின் குறில், நெடில், நீட்சி (ஹ்ரஸ்வம், தீர்க்கம், ப்லுதம்) என்ற பகுதிக்கும், அதன் ஒலி நீட்சியில் உள்ள கார்வைக்கும் (ம்ம்ம்......) கூட தனி சக்தி உண்டு.

மந்த்ர ஜப முறையில் முதல் அங்கமாக, ஆசமனம், ஆஸனம் குருவந்தனம், பூதோத்ஸாரணம், பூதசுத்தி, ஆத்மபிராணப் ப்ரதிஷ்டை என்றொரு வரிசை உண்டு. தூய உடலும் மனமும் பெற ஆசமனம் உதவுகிறது. அச்யுதன் முதலிய பகவான் நாமங்கள் உடலையும் உள்ளத்தையும் தூய்மைப் படுத்துகின்றன. உபாஸகன் தன்னை ஆத்ம - வித்யா - சிவ தத்துவங்களாகவும் பிரித்து ஒவ்வொன்றையும் பீஜாக்ஷரத்துடன் நீர்த்துளியைப் பருகிச் சுத்தப்படுத்துகிறான். இது தத்துவாசமனமாகும். தான் உட்காருமிடம் மனம் சலிக்காமல் உடல் உறுத்தாமல் அமர்வதற்கேற்றதாக இருத்தல் அவசியம். மனித உணர்விற்குப் புலப்படாத சில எதிர் சக்தியலைகள் மனத்தைச் சிதறச் செய்யும். தனது ஆஸனத்திற்கு அடியில் தாங்கும் சக்திகளும், தன் உடலின் உள்ளும் புறமும் சூழ்ந்துள்ள ஆத்ம - வித்யா - சிவ தத்துவங்களின் இணக்கமும் அநுகூலமாக இராது. அதனால்தான் வாழ்கின்ற ஜம்பூத்வீவம் பாரத வருஷம் பரத கண்டம் என்பதற்கெல்லாம் ஆதாரமான தத்துவங்களை வணங்கி மந்த்ர ஜபத்திற்கு உதவக் கூடியவையாக இருக்க வேண்டுகிறோம். இது பூதோத்ஸாரணம்.

அதிபூதநிலை, அதி ஆத்மநிலை அதிதைவ நிலை என்ற மூன்று நிலைகளைச் சீர்குலையச் செய்வது பாவம். அந்த நிலைகளுக்கு உதவுவது புண்யம். இவை வாஸனைகளாக உள்ளே அமைந்துள்ளன. ஆத்மாவை இக்கூட்டை விட்டு ஹம்ஸ மந்த்ரத்தால் வெளியேற்றித் தனது பிரும்ம ரந்த்ரத்திலுள்ள பரமாத்மாவுடன் இணைப்பர். அதன்பின் பாப புருஷனை வாயு தத்துவத்தால் உலர்த்தி அக்னி தத்துவத்தால் சுட்டெரித்துச் சாம்பலாக்குவர். பின் பிரும்ம ரந்திரத்திலிருந்து பெருகுகிற அமுத நீராகிய ஜல தத்துவத்தையும் பூமி தத்துவத்தையும் பெருக்கித் தன் உடலைச் சாம்பவ சரீரமாக

புண்ய சரீரமாக்கிக் கொண்டபின் முன் பரமாத்மாவுடன் இணைக்கப்பட்டிருந்த ஆத்மாவை ஸுஷும்நா நாடி வழியே இறக்கிக் குண்டலினியில் வல்லமை பெற்ற தாக்குவர். இது பூதசுத்தி - ஆத்ம பிராண ப்ரதிஷ்டை.

மந்திரம் என்றும் எங்கும் பரவி நிற்கிற பரமாத்ம சக்தி. ஒலி வடிவாக அருள் பாலிக்க விமர்சமாக வந்த அந்த சக்தியை முதலில் கண்டறிந்தவர் ருஷி. அந்த மூல குருவிலிருந்து உபாஸகனது குரு வரை அது காது வழி உபதேசமாக வந்தது. உபாஸகன் தன் குரு, அவரது குரு, அவரது குரு இம்மூவரையும் வந்தனம் செய்தே ஜபத்தைத் தொடர்கிறுன். குருத்ரயம் என்பது ஒரு தத்துவம். பௌதிக நிலையில் காண்பது மட்டுமல்ல, அதனையும் கடந்து தெய்வ நிலையிலுள்ள தத்துவமது. அந்த குரு தத்துவத்தை வணங்குமிடம் பிரும்ம ரந்திரத்திலுள்ள துவாத சாந்தம் என்ற மேல் நிலை. தெய்வத்தை இதயத்தில் வணங்குவர். குருவைச் சென்னிமேல் கைகூப்பி வணங்குவர். ஜீவசிவன், பரமாத்சிவனான குருவை குருத்ரயத்தை - வணங்குகிறுன். ஜீவ சிவனையும் பரமாத்ம சிவனையும் இணைத்து அத்வைத பாவனை உண்டு. ஆனால் குருவான பரமாத்ம சிவனிடம் அத்வைத பாவனை கொள்வதில்லை. பரமாத்ம சிவனும் பரமாத்ம சிவனாகிய குருவும் தனித்தே எப்போதும்உணரப்படுகின்றனர். ''நாத்வைதம் குருணா ஸஹ'' (சங்கரர்)

ஸங்கல்பத்துடன் மந்த்ர ஜபம் செய்பவன். எந்த தேவதையின் மந்த்ரத்தை ஜபிக்கிறுனோ, எதனை வழிபடுகிறுனோ, அதுவாகவே உடலாலும் உள்ளத்தாலும் மாறினால்தான் வழிபட முடியும் என்பது முடிவு. நாருத்ரோ ருத்ரமர்சயேத். ருத்திரனாகாதவன் ருத்திரனை வழிபட முடியாது. அதனால் சிவபூஜை செய்பவன் விபூதி - ருத்ராக்ஷரங்களை ஏற்கிறுன். சைவ சின்னங்களே விநாய கருக்கும் ஏற்றவை தான். மஹாராஷ்டிரத்தில் சிந்தூர திலகமும் தந்தம் போல் சந்தனக் கீற்றும் நெற்றியில் இடுவர். தந்தரத்தாலான ஜபமாலை கொள்பவருமுண்டு. புறச்சின்னங்கள் போல் உள்ளத்திலும் மாற்றம் நிகழ

வேண்டும். நியாஸங்கள் மூலம் இவைகளை உபாஸகன் செய்து கொள்கிறான்.

மந்த்ர ஜபத்திற்கு உரிய நியாஸங்கள் 28. குறிப்பிட்ட விரல் அல்லது கைப்பகுதியால் குறிப்பிட்ட உடற் பகுதியைத் தொடுவதே நியாஸமாகிறது. ருஷி நியாஸம், சந்தஸ்நியாஸம், தேவதாந்யாஸம், பீஜ நியாஸம், சக்திநியாஸம், கீலக நியாஸம், விநியோக நியாஸம் கர நியாஸம் (6) அங்க நியாஸம் (6) திக்பந்தம், தியானம், பஞ்ச பூஜை (5) திக் விமோகம், ஸமர்பணம் என. ஜப முடிவில் அங்க நியாஸமும் தியானமும் மறுபடி செய்யப்படுகின்றன.

ருஷி நியாஸம் - தான் ஜபிக்க விருக்கிற மந்த்ரத்தை முதலில் கண்டுபிடித்தவர் ருஷி - குருவின் இருப்பிடமும் வணங்குமிடமும் பிரும்மரந்திரமானதால் சிரசை வலது கை விரல்களால் தொட்டு வணங்குவதாக பாவனை செய்வதே ருஷி நியாஸமாகும். ஆழ்ந்ததும் அழுத்தமானதுமான எண்ணமே பாவனை. உடலால் செய்யும் பணி மேலேழுந்தவாரியாக, உள்ளத் தொடர்பின்றி கூட அமையும். கருத்துடன் உணர்ந்து மனத்தால் ஒன்றைச் செய்யும் போது அந்தச் செயல் தீவிரமடையும். நியாஸங்களைப் பழக்கத்தால் இடத்தைத் தொடுவதாக அமைக்காமல் உள்ளமார்ந்த செயலாக்குவது மந்த்ர உபாஸனையில் மிக அவசியம்.

சந்தஸ் நியாஸம் - ஒலி வடிவில் வெளியான சக்தி சொல்லமைப்பாக, சந்தஸ் எனும் கட்டிற்குள் பதிகிறது. காயத்ரீ அனுஷ்டுப் முதலியவை தனித்த சொற்கட்டு உள்ளவை. யாப்பு முறைக்கு உட்படுபவை. ஒலி வாயின் வழியே வெளியாவதால் உதட்டை வலது கையால் தொடுவது சந்தஸ் நியாஸமாகிறது.

தேவதாநியாஸம் - தேவதையை மனத்தில் உருவகப்படுத்தி இதயத்தில் அமர்ந்துள்ளதாக பாவித்து இதயத்தைத் தொடுவது தேவதா நியாஸமாகும்.

பீஜநியாஸம் முதலியவை - சூக்ஷ்ம ஒலி வடிவில் உள்ள மந்திரத்தில் அதன் சக்தி விதை போல்அதனைவிட சூக்ஷ்மமாக ஓர் எழுத்தில் தங்கியிருக்கிறது. அது பீஜம். விதை நிலையிலுள்ள அதில் அடங்கிய ஆற்றல் சக்தி . சக்தி சிதறாமல்

கட்டிப்போடுவது கீலகம். இவை ஒவ்வொரு மந்த்ரத்திற்கும் வேறுபடும். (பல மந்த்ரங்களின் கீலகம் பற்றிய விவரம் குரு முகமாகத்தான் தெரிந்து கொள்ளவேண்டும். ஜபம் ஏதேனும் ஒரு விருப்பத்தை நிறைவேற்றப் பயன்படுவதாயின் அதனைத் தெரிவிப்பதே விநியோக நியாஸம். பொதுவாக மந்த்ர தேவதையின் அருள்கிட்டுவதே பயனாய் இருக்கும். மார்பின் வலது புறத்தில் தொட்டு பீஜத்தையும், இடது புறத்தில் தொட்டு சக்தியையும், நடுவில் தொட்டுக் கீலகத்தையும் மார்பிற்கெதிரே கைகூப்பி விநியோகத்தையும் நியாஸம் செய்வர். பீஜத்தைத் தொப்புளிலும் சக்தியை மறைவிடத்திலும் (குஹ்யத்திலும்) கீலகத்தைக் கால்களிலும் தொட்டுச் சொல்வர். விநியோகத்தில் வலது கையால் எல்லா அங்கங்களையும் வலமாகத் தொடுவது உண்டு. குரு காட்டும் வழியே சிறந்தது.

கர நியாஸம் - ஜபம் செய்கிற விரல்களும் உள்ளங்கையும் புறங்கையும் தூய்மை பெறவும் அவை தெய்வத்தன்மை பெறவும் இதனைச் செய்வர். அங்குஷ்டம் - கட்டை விரல், தர்ஜநீ - ஆட்காட்டி விரல் (சுட்டு) மத்யமா நடுவிரல், அநாமிகா - மோதிர விரல், கனிஷ்ட்டிகா - சுண்டு விரல். இருகைகளின் கட்டை விரல்களை ஆட் காட்டி விரல்களால் அடியிலிருந்து நுனி வரை தடவ அங்குஷ்ட்ட நியாஸம். அப்படிக் கட்டை விரல்களால் ஆட்காட்டி - நடு மோதிர சுண்டு விரல்களை வரிசையாகத் தடவ, தர்ஜநீ நியாஸம் மத்த்யமா நியாஸம், அநாமிகா நியாஸம், கனிஷ்டிகா நியாஸம் என்றாகிறது. இரு கைகளின் உள் வெளிப்புறங்களை இடதால் வலதையும் வலதால் இடதையும் தடவ கரதல கரப்ருஷ்ட்ட நியாஸமாகிறது.

அங்க நியாஸம் - ஹிருதயாதி நியாஸம், ஷடங்க நியாஸம் என்ற பெயருமுண்டு. இதயத்தை வலது நடு மோதிர ஆட்காட்டி விரல்களால் ஹ்ருதயாய நம: என்ற தொட ஹ்ருதய நியாஸம். தலையை வலது மோதிர விரல்களால் சிரஸே ஸ்வாஹா எனத்தொட சிரோ நியாஸம். வலது கட்டை விரலால் சிகை. முடிப்பிடத்தை சிகாயை வஷட் எனத்தொட சிகா நியாஸம். இடது கை விரல்களால் வலது தோளையும் வலது கை விரல்களால் இடது தோளையும் ஒரே சமயத்தில் கவசாயஹும்

எனத்தொட கவச நியாஸம். புருவ நடுவிலும் இரு கண்களிலும் வலது ஆட்காட்டி - நடு - மோதிர விரல்களால் நேத்ரத்ரயாய வௌஷட் எனத்தொட நேத்ர நியாஸம். இடது உள்ளங்கையை வலது ஆட்காட்டி - நடு விரல்களால் அஸ்திராயபட் என 2 தடவை தட்ட அஸ்திர நியாஸம் - இந்த ஆறும் இதயம் முதலிய இடங்களில் தேவதா சக்தியைப் பதிய வைப்பதற்காக. இதயம் உள்ளுணர்வின் கேந்திரம். சிரஸ் - அறிவின் கேந்திரம். சிகை குண்டலினீ மேல் சென்று திரும்புமிடம். இரு தோள்களும் தீய சக்திகளை உட்புகாமல் காப்பாற்றும் ஆற்றல் பெற்றவை. அதில் கவசம். ஸ்தூலப்பார்வை, ஸூக்ஷ்மப்பார்வை உள்நோக்கு என்ற மூன்றையும் கட்டுப்படுத்துமிடங்கள் வலிவுபெற நேத்ர நியாஸம். தெய்வீகமான அஸ்திர சக்தியைக் கொண்டு தீய எண்ண அலைகள் பட்டெனத் தெறித்தோட அஸ்த்ரம். பின்னர் வியாஹ்ருதியையும் பிரணவத்தையும் இணைத்து பூர்ப்புவஸ்ஸுவரோம் என்று பத்து திக்குகளிலிருந்தும் கேடு வராமல், உட்சென்ற தேவதாசக்தி சிதறாமல் திக்குகளைக் கட்டுகிறோம். இதை திக்பந்த நியாஸம் என்பர்.

தியானத்தால், மனத்தில் வழிபட வேண்டிய மந்திர தேவதையின் ஸகுண ஸ்வரூபத்தை, ஒளி வடிவில் இதய குகையில் காண்கிறோம். தேவதையை உடன் மானஸீகமாக வழிபடுகிறோம். கந்தம், புஷ்பம் தூபம், தீபம், நைவேத்யம் என்ற ஐந்து அந்த மானஸிக பூஜைகள். ஜபம் ஒரு மானஸிக யாகம் அந்தர்யாகம். அங்கு உபசாரங்களும் மானஸீகமே. ஈசன் நமது போகத்திற்கு அளித்த புவனம் ஐந்து பூதங்களாலானது. அவற்றையே ஈசனுக்கு ஐந்து உபசாரங்களாகத் தருகிறோம். கந்தம் - சந்தனம் - பிருதுவிதத்துவம். அதனை பிருதிவீ தத்துவமாக நின்று தேவதை ஏற்கிறது. புஷ்பம் ஆகாச தத்துவம் தூபம் வாயு தத்துவம், தீபம் அக்னி தத்துவம். நைவேத்யம் ஜல தத்துவம் இத் தத்துவங்களின் பீஜாக்ஷரங்கள் முறையே லம் ஹம் யம் ரம் வம் என்பவை. கட்டை விரல், ஆட்காட்டி, நடுவிரல், மோதிர விரல் சுண்டு விரல் என்ற ஐந்தைக் கொண்டு முறையே ஆகாசம் வாயு அக்னி ஜலம் பூமி என்ற ஐந்து பூதத் தத்துவங்களைக் குறிப்பிடுவர். நியாஸங்களைப் போல் இந்த

பஞ்சோபசாரங்களும் இரு கைகளாலும் ஐந்து முத்திரைகளால் காட்டப் பெறுகின்றன. சுண்டு விரலின் அடிக்கணுவில் கட்டை விரல் நுனியை இணைக்க கந்த முத்திரை. ஆட் காட்டி விரலைக் கட்டை விரலின் அடிக்கணுவுடன் இணைக்க புஷ்ப முத்திரை. ஆட்காட்டி விரலின் அடிக்கணுவுடன் கட்டை விரல் நுனியை இணைக்க தூப முத்திரை. அவ்வாறே நடு- மோதிர விரல் அடிக்கணுவுடன் கட்டை விரல் நுனியை இணைக்க தீப நைவேத்ய முத்திரைகள். பஞ்ச பூத ஸமஷ்டி பீஜமான ஸம் என்ற பீஜத்துடன் எல்லா பூத தத்துவ ஸமஷ்டியான பகவானையும் கைகளின் உள்ளும் புறமும் பாவித்துத் தாம்பூலம் முதலிய மற்ற உபசாரங்களின் ஸமஷ்டியை அர்ப்பணம் செய்வர். சிலர் அஞ்சலி செய்து அர்பணம் செய்வர்.

ஜபம் செய்து முடித்ததும் மறுபடி அங்கநியாஸம் செய்து திக்பந்தம் செய்ததை விடுவிக்க அதே வியாஹ்ருதியும் பிரணவமும் கொண்ட பூர்ப்புவஸ்ஸுவரோம் என்பதால் திக்விமோகம் செய்து ஜபத்தை தேவதைக்கு ஸமர்ப்பிக்கிறோம்.

இது எல்லா மந்திரங்களுக்கும் பொது. கணேசப் பெருமானுக்குப் பல மந்திரங்கள் உள்ளன. ஒவ்வொன்றிலும் பல முறைகள் உள்ளன. உபாஸகன் தன் குருவிடமிருந்தே தான் பின்பற்ற வேண்டிய முறையைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

### ஸபர்யாவிதானம்

மந்த்ரங்களின் துணை கொண்டே ஸபர்யை செய்யப் பெறுகின்றது. கணேசப் பெருமானின் ஸபர்யை பெரும்பாலும் அவரது 28 எழுத்துக்கள் உள்ள மந்திரத்தைக் கொண்டே நடைபெறுகிறது. வெகு சிலர் - வக்ரதுண்டர், உச்சிஷ்ட கணபதி - ஸ்ரீ வித்யா கணபதி முதலிய மந்திரங்களால் ஸபர்யை செய்கின்றனர். நியாஸங்களிலும் உபசாரங்களிலும் பயன்படுகின்ற பீஜாக்ஷரங்கள் ஆவரண தேவதைகள் மாறக்கூடும். அவற்றைப் பற்றி சுருக்கமான குறிப்புகள் ஆங்காங்கு தரப்பட்டுள்ளன. எதிலும் குருவின் வழியே சிறந்தது.

சிலருக்கு வாழ்நாளில் ஓரே குரு அமைவார். சிலருக்குப் பல குருவரர்களின் துணை கிடைக்கும். முதலில் ஏற்ற குருவின் உபதேசத்தை ஒட்டி விரிவோ விளக்கமோ பின் வருபவர் தந்தால் பெரும் பாக்கியம். முதல் குருவின் அனுமதி பெற்று உபாஸனையில் மாற்றம் கொண்டால் தவறில்லை. முதல் குருவிடம் உதாஸீனத்துடன் மாற்றம் நேர்ந்தால் அது நல்லதற்கல்ல. குருவை வஞ்சிப்பதோ, உதாஸீனப் படுத்துவதோ வெறுப்பதோ மற்ற எல்லா சிறப்புகளையும் அழித்து விடும். அதில் அதிக கவனம் தேவை. சிஷ்ய வத்ஸலரான குரு தன் சிஷ்யன் மேன்மேலும் பெரியவர்களை நாடி மேன்மை பெறுவதை முழு மனத்துடன் ஏற்பார். அதனால் அவரது மனம் நோகாமல் பக்தியுடன் அவரைப் பின்பற்றுவது தெய்வ வழிபாட்டில் முதலிடம் பெறும்.

ஸ்ரீ வித்யா ஸபர்யா க்ரமத்தின் அங்கமாக ஸ்ரீ மஹாகணபதி ஸபர்யாக்ரமம் இடம் பெறலாம். தனித்தும் ஸ்ரீ மஹாகணபதி ஸபர்யை மட்டுமே செய்பவருமுண்டு. ஸ்ரீவித்யா ஸபர்யையின் அங்கமானால் பாத்ராஸாதனம் முதலியவை தனித்துச் செய்ய அவசியமிராது. தனித்து மஹாகணபதி ஸபர்யை செய்யும் போது அதன் கிரமம் இந்நூலில் தரப்பட்டுள்ளது.

மஹாகணபதியைத் தனியே ஆராதிப்பவர், ஸூர்ய மண்டலத்தில் அவரைத் தியானித்து அவருக்குத் தனித்து அர்க்கியம் கொடுத்து வணங்குவது கணபதி ஸந்த்யா வந்தனமாகும். அது நித்யாந் ஹிகமாக அன்றாட முதற்பணியாக இடம் பெறுகிறது. நதியில் நீராடித் தன் குல வழக்குப்படி ஸந்த்யா வந்தனம் முடித்துப்பின் கணபதி ஸந்தியை செய்ததும் ஸூர்ய கிரணங்களால் தூய்மை பெற்று வானிலிருந்து பொழிந்த நதிகளாகப் பெருகுவதாக ஜலத்தைப் பாவித்து அதில் கணபதி யந்த்ரத்தை பாவனையால் எழுதி அதன் நடுவே அமர்ந்துள்ள கணபதிக்கு ஒவ்வொன்றும் 4 தடவையாக 111 தடவை கணபதி, அவரது மந்திராக்ஷர வடிவம், அவரது ஆவரண தேவதைகள் இவர்களுக்கு தர்ப்பணம் செய்வர். சதுரா விருத்தி தர்பணம் என்ற இந்த வழிபாடு பகவானின் அருளைப் பெற மிகச்சிறந்த ஸாதனம்.

பரசுராம கல்ப ஸூத்திரம் முதலிய மூல நூல்களில் விளக்கியுள்ள இம்முறையை ஸ்ரீ சங்கர பகவத் பாதர் ப்ரபஞ்ச ஸாரத்தில் ஒரு சுலோகத்தில் சுருக்கித் தந்துள்ளார். அதற்கு விளக்கம் தந்த பத்மபாதாசாரியர் 3-4 விதமாக அதனை விளக்கியுள்ளார். பின்னர் வந்த கீர்வாணேந்திர ஸரஸ்வதி தன்து ப்ரபஞ்ச ஸார ஸாரஸங்கிரஹத்தில் வேறு விதமாக வகுத்துள்ளார். மாபெரும் சாக்தரான பாஸ்கரராயரின் சிஷ்ய பரம்பரையைச் சார்ந்த ராமேசுவரரும் உமாநந்த நாதரும் விளக்கம் தந்துள்ளனர். பெரும்பாலும் உமாநந்தரின் நித்யோத்ஸவ நூலின் ப்ரயோகத்தை ஒட்டி இன்று சதுராவிருத்தி தர்பணம் நடைபெறுகிறது. வெகு சில குரு ஸம்ப்ரதாயத்தில் மற்ற முறைகளும் வழக்கிலுள்ளன. லகுவான முறையைப் பின்பற்றுபவரே அதிகம்.

ப்ரபஞ்ச ஸாரஸாரஸங்கிரஹத்தில் உலோக யந்த்ரத்திலேயே ஆவாஹனம் முதலியவற்றுடன் தர்பணம் செய்யும் முறை காணப்படுகிறது. இதன் பின்னரே ஸபர்யை தொடங்குகிறது.

ஸபர்யைக்கெனத் தனி இடம் (மண்டபம்) அமைத்துக் கொள்வது அவசியமாகிறது. துவார தேவதை பூஜை, ஆசமனம், தத்வாசமநம், ஸ்ரீ சிரஸில் குரு பாதுகா மந்திரத்தால் குருத்ரயத்தை வணங்கி மறுபடி இடது புஜத்தில் குருவையும் வலது புஜத்தில் கணபதியையும் வணங்கி, மணியை ஒலித்து ஸங்கல்பத்துடன் பூஜையைத் தொடங்குவர்.

ஸ்ரீ வித்யா பூஜையிலும் இங்கும் தேவதையின் எதிரே அமர்ந்து வழிபடுவதாகவே பாவனை. வழக்கில் உபாஸகன், தேவதையைக் கிழக்குநோக்குவதாக வைத்து தேவதையின் வலப்புறத்தில் வடக்கு நோக்கி அமர்ந்து வழிபடுவதே நடைமுறையாகும். ஸ்ரீ வித்யா வழிபாடாயின் வழிபடுவருக்கும் தேவிக்கும் நடுவிலுள்ள திக்கு மேற்கென்பது पूज्य पूजकयोर्मध्यं प्रतीची என்ற பாவனையால் அமையும் திசையமைப்பு. தேவியின் பின்புறம் கிழக்காகும். ஷடங்கதேவதை ஆவரண தேவதை முதலியவற்றில் இந்த திசை நிர்ணயம் பின்பற்றப் பட வேண்டும் புருஷ

தேவதையாயின் पूज्यपूजकयोः मध्यं प्राचीஎன்ற பாவனையில் ஷடங்க தேவதை முதலியவற்றின் ஸ்தானம் மாறும்.

यदाशाभिमुखो मन्त्री त्रिपुरां परिपूजयेत्। देवीपश्चात्तदा प्राची प्रतीची त्रिपुरापुरः। पूज्यपूजकयोर्मध्यं प्रतीची (कुलार्णवे)। पुंदेवताके श्रीविद्यतिरिक्ते पूज्यपूजकयोर्मध्यं प्राची। श्रौतस्मार्त - कर्मसु - सूर्यो यत उदेति सा प्राची। என்பது நியமம்

ஆஸன பூஜை, தீப பூஜை, பூத சுத்தி, ஆத்ம பிராண ப்ரதிஷ்டை விக்ன உத்ஸாரணம், சிகாபந்தனம் என்ற பூர்வாங்கம் முடிந்ததும் தேவதா சக்தியை உடலெங்கும் பதிப்பதாகிய நியாஸங்கள் தொடர்கின்றன. மோதிர விரலின் முதல் கணுவின் மீது கட்டை விரல் நுனி பதித்து மோதிர விரலால் குறிப்பிட்ட அங்கங்களைத் தொடுவது நியாஸம். 30 வகை நியாஸங்கள் தரப்பட்டுள்ளன.

ஒவ்வொரு நியாஸத்தின் இறுதியிலும் அந்த நியாஸத்தில் தொடப்பட்ட பகுதிகளை ஸமஷ்டியாகத் தொடுவது வியாபகம். வலத்திலிருந்து இடமாக அதே வரிசையில் தொடுவர். மாத்ருகா நியாஸம், கணேச நியாஸம், மந்திர நியாஸம் விக்ந நியாஸம், மூல மந்திர வர்ண நியாஸம், ஆவரண தேவதா நியாஸம் எனச் சிலவற்றை மட்டும் செய்து மூல மந்திர ஜபாங்க நியாஸம் செய்து பூஜையைத் தொடங்குவர்.

ஸபர்யையில் கலசபூஜை விரிவடைகிறது. வர்த்த நீகலசம், ஸாமான்யார்க்க்யபாத்ரம், விசேஷார்க்க்ய பாத்ரம், சுத்தி பாத்ரம், குருபாத்ரம் ஆத்ம பாத்ரம் என்ற ஆறு அமைக்கப்படுகிறது. வர்த்தனீ என்று வாயகன்ற மண்பானைக்குப் பெயர். மண் பாத்திரத்திற்குப் பதிலாக தங்கம் வெள்ளி பித்தளை தாமிரம் என்ற உலோக பாத்திரம் கொள்வர். வர்த்தனியில் பூஜை நேரத்தில் தேவைப்படுகிற நீர் நிரப்பப்படும். அஷ்டகந்தம் அல்லது பச்சைக் கற்பூரம் ஏலம் லவங்கம் ஜாதிக்காய் சந்தனம் புஷ்பம் இவற்றின் நறுமணம் கொண்ட நீர் இது. ஸாமான்யார்க்கிய பாத்திரமாக சங்கு பயன்படுகிறது. அதனை அவ்வப்போது வர்த்தனி ஜலத்தால் நிரப்பலாம். இடத்தை விட்டசைப்பதில்லை. இதனை அடுத்து விசேஷார்க்ய பாத்திரம். அதில் தேன் குங்குமப்பூ முதலியவை

கலந்த பால் அர்க்கியத்திற்காக நிரப்பப்படுகிறது. அதில் இஞ்சித்துண்டம் வைக்கப்படும். அதனால் தர்பணம் கொடுக்கப் பெறுகிறது.

வாமாசாரத்தில் பங்கு பெறுகிற பஞ்ச மகாரங்களின் பிரதிநிதியாக பால் இஞ்சித்துண்டு தேன் முதலியவற்றைக் கொள்வதாகச் சொல்வர். ஸாத்விகமான ஸமயாசார பூஜையில் அவற்றின் பிரதிநிதி என்ற நினைவு உசிதமல்ல என்று குருநாதர் கூறுவார். மதுபர்கம் போன்றது இது. இஞ்சித்துண்டிற்கு மாற்றாகச் சிறு உத்தரணி வைத்துக் கொள்வதுண்டு. பிந்து (சொட்டு)க் கணக்கில் அர்க்கியம் விட இஞ்சித்துண்டோ உத்தரணியோ உபகரணம்.

இந்த பாத்திரங்கள் அனைத்தையும் தன் எதிரில் தனித்தனி பீடத்தில் வைக்க வேண்டும். ஒரே பீடத்தில் வைத்தாலும் அததனுடைய ஆதாரமாக ரேகாத்மகமான (கோடு வடிவில்) யந்திர மயமான பீடம் வரையப்படுகிறது. பீடத்தை அக்கினி மண்டலமாகவும், அதன்மேல் வைக்கின்ற பாத்திரத்தை ஸுர்ய மண்டலமாகவும் அதில் நிரப்புகின்ற திரவத்தைச் சந்திர மண்டலமாகவும் பாவனை செய்வர்.

பகவானை ஸபரியை ஏற்க வரும்படி கோருவதற்கு முன் தன்னைத் தூயவனாக்கிக் கொள்ள புண்யாஷ்டக ஹோமம் செய்யப்படுகிறது. தான் எண்ணியதும் பேசியதும் செய்ததும் - நல்லதோ கெட்டதோ எதுவாயினும் அது பிரும்மார்பணமாகி விடட்டும் என்று அனைத்தையும் என்றும் விறகின்றி கனன்று எரிகின்ற குண்டலினீ எனும் அக்னியில் ஹோமம் செய்கிறான். அந்நெருப்பில் தன்னையும் துவட்டித்தான் பிரும்ம நிலை பெற்றதை உணர்கிறான்.

உள்ளத்தில் குடி கொண்டுள்ள பகவானுக்கு அங்கேயே மானஸிகமாக ஐந்து உபசாரங்களையும் செய்து, திரி கண்டா முத்திரையில் அஷ்ட கந்தத்தில் நனைத்த பூவைத் தாங்கி, பரமனை குண்டலினி சக்தியால் பிரம்மந்தரத்திற்கு இட்டுச்சென்று, மூக்கின் வழியே வெளியேறச் செய்து ஒளி வடிவில் வருகிறவரை திரிகண்ட முத்ரையில் உள்ள பூவில் இறக்கிக் கைலாக்காக அழைத்து வந்து வரவேற்று

யந்திரத்திலோ விக்ரகத்திலோ சைதன்ய விக்ரஹமாக அமரச் செய்து ஆஸனம் முதலிய உபசாரங்கள் செய்தபின் ஆவரண பூஜை செய்வர்.

ஸ்ரீ மஹாகணபதியின் யந்திரம் - நடுவில் பிந்து அதனைச் சுற்றி முக்கோணம், ஷட்கோணம், அஷ்டதளம் பூபுரம் என்று அமைந்தது. உபாஸகனது உள்ளத்திலிருந்து வந்த கணபதி பிந்துவில் அமர்ந்துள்ளார். அவரைச் சுற்றி ஷடங்க தேவதைகள் உள்ளனர். திரிகோணத்திற்கும் பிந்துவிற்குமிடையே மேற்புரத்தில் திவ்ய ஸித்தமானவ குருக்களுடன் உபாஸகனது பரமேஷ்டி குரு பரமகுரு குரு என்ற குருத்ரயம், திரிகோணத்தின் வெளியே ரமா - ரமேசர்கள், உமா - மஹேசர்கள் - ரதி - மன்மதர்கள், மஹீ - வராஹர்கள் என்ற நான்கு தம்பதியர் என முதலாவரணத்தில் இவர்கள் வழிபடப் பெறுகின்றனர்.

இரண்டாவது ஆவரணத்தில் ருத்தி ஆமோதர்கள் முதலிய ஆறு விக்நேசர்களும் ஆறு கோணங்களில் வழிபடப் பெறுகின்றனர். பகவானின் வலத்திலும் இடப் புறத்திலும் சங்க பத்மநிதிகள் தம் சக்திகளுடன் வழிபடப் பெறுகின்றனர். (இவர்களது வழிபாட்டிடத்தைப் பற்றி கருத்து வேற்றுமை உண்டு. தன் குரு வழியே ஏற்றது).

மூன்றாவது ஆவரணத்தில் ஷட்கோணத்தின் இரு கோணங்களுக்கிடையே ஷடங்க தேவதைகளும் நான்காவது ஆவரணத்தில் பிராம்மீ முதலிய எட்டு மாதாக்களும் ஐந்தாவதில் திக்பாலர்களும் வழிபடப் பெறுகின்றனர். எல்லா ஆவரண தேவதைகளும் பகவானை நோக்கி அமர்ந்துள்ளதாகவும், தான் அவர்களது எதிரில் அமர்ந்து வழிபடுவதாகவும் பாவனை செய்ய வேண்டும்.

கணபதியைத் தனித்து ஸபர்யை முறையில் இவ்வாறு வழிபடுகின்றனர். பஞ்சாயதன முறையில் கணபதியை நடுவிலும் விஷ்ணு சிவன் ஸுர்யன் தேவி என்ற நால்வரைச் சுற்றியும் வைத்துப் பூஜை செய்வதுண்டு. இது தாந்திரிக முறையில் சேராது. வைதிக தாந்திரிக மிச்ர முறையில் இது இடம் பெறுகிறது.

ஆவரண பூஜை முடிந்ததும் தூப தீப - நைவேத்ய - நீராஜன - மந்திர புஷ்பாதி உபசாரங்களை நிறைவு செய்து, பலி தந்து ஸுவாஸினீ - வடுக பூஜை. தன்னைப் போல் கணபதி ஸபர்யை செய்பவர்கள் வந்திருந்தால் அவர்களுடன் பகவானின் அருட் பிரஸாதத்தை ஏற்று ஸபர்யையை நிறைவு செய்வர்.

இந்த ஸபர்யை முறை வைதிகம் தாந்திரிகம் வாமம் தக்ஷிணம் என்று எந்த வகையிலும் பிரித்தறியாதபடி கலந்துள்ளது. வடதேசத்து பூஜை முறைகளை தென் தேசத்தினர் ஏற்று தம் ஸமுதாசாரத்திற்குப் பங்கமின்றி இணைத்த முறை என்று சொல்வதுண்டு. பகவானது வழிபாட்டில் முழுவதும் லயித்து திரிகரண சுத்தியுடன் அவரது அருள் பெறக் கையாண்ட நடைமுறை. சிரத்தையும் பாவனையும் இதில் இடம் பெறுகின்றன. மந்திரமும் தந்திரமும் யந்திரமும் முத்திரைகளும் வழிபாட்டு முறைகளும், கொண்டு ஒரே நோக்குடன் எண்ணங்களால் சிதறுமல் மனம் ஒருமித்து பகவத் ஸேவையில் ஈடுபட இது நல்ல வாய்ப்பு.

சிவபூஜை முதலியவற்றைச் சிரத்தையுடன் செய்பவர், ஆறு குளங்களில் நீராடுவர். கெட்ட செயல்களும் கெட்ட சிந்தனைகளும் பாபமாக உருவெடுத்து மனத்தை மறுபடி கெட்ட செயலில் அனிச்சையாக ஈடுபடச் செய்கின்றன. நீராடும் போது உள்ளும் புறமும் தூய்மை பெற பாபம் விலக, நல்மனம் பெற தீர்த்தத்திலுள்ள தேவதையே வேண்டுவர். அகமர்ஷண ஸூக்தம் (பாபத்தைத் துடைத்தெறிவது) முதலிய ஸூக்த ஜபம் செய்வதன் லக்ஷ்யமிது. அதையே பூத சுத்தி என்ற தாந்திரிக முறை செய்கிறது. நீராடியதும் விரஜா ஹோமம் செய்தெடுத்த விபூதியைத் திரயம்பகமந்திர மனனத்துடன் தரிப்பர். பிராணாபாந வ்யா நோதான ஸமானா மே ஶுத்யந்தாம் ஜ்யோதிரஹம் விரஜா விபாப்மா பூயாஸம் என்றவாறு உடல் மனம் ஆத்மா என்ற முக்கூட்டில் இணைந்த ஒவ்வொரு தத்துவத் தூய்மை பெற்றுப்பாபம் நீங்க விரஜா ஹோமம் செய்யப்படுகிறது. பூத சுத்தியும் ஆத்ம பிராண ப்ரதிஷ்டையும் இதே லக்ஷ்யம் கொண்டவை. பூஜைக்கு அமர்ந்ததும் ப்ரஜநநே ப்ரம்ஹா திஷ்டது. அக்நிர்மே வாசி ச்ரித: என்ற இரண்டு மந்திரங்களால் உடலையும் உள்ளத்தையும் தேவதைகளின்

இருப்பிடமாக்கிக் கொள்வர். இதே பாவனையில்தான் மந்திரவர்ண ந்யாஸங்கள் முதலியவை அமைகின்றன. மந்திர நிகண்டுப்படி, ஒவ்வோர் அக்ஷரமும் ஒரு தேவதையைக் குறிக்கும். அதனால் வைதிகமாகவோ தாந்திரிகமாகவோ கலந்தோ எப்படி வழிபட்டாலும் சிரத்தையும் பாவனையும் கொண்டு வழிபட நம் உள்ளம் இறைவனிருப்பிடமாக அமையும்.

மூலசக்தி கஜாஸ்ய ஸ்நபனம், கணேச மாத்ருகா நியாஸம் முதலியவை உடலையும் உள்ளத்தையும் இறைவன் உறையும் கோவிலாக்க உதவுபவை தான்.

ஹோம விதானத்தில் அக்னியின் பேரொளியில் பரிவாரங்களுடன் பவனி வருகிற பகவானைக் கண்டு உபாஸகனது பொருளானவற்றை தன் பொருளல்ல - பகவானுடையதே என்ற உண்மை நோக்குடன் ஸமர்பணம் செய்கிற வாய்ப்பு விளக்கப்பட்டுள்ளது.

நல்ல குருவின் வழிகாட்டலும் சாதன நிறைவும் பெற்றவன் மட்டும் தான் ஸபர்யையில் ஈடுபட முடியும். மந்திர ஜபமும் செய்ய முடியும். ஆனால் இப்பிறவியில் இதற்கான வாய்ப்புகளை பெறுதவர் பலர். அவர்களுக்கென அமைந்தவையே துதிகள். துதிகளை இயற்றியவர் நித்ய குருவரர்கள். அழிவில்லாதவர். ஔவையும் அகத்தியரும் அருளாளர்கள். இறைவனது அருள் பாய்ந்தோடி நம் உள்ளத்தில் நிறைய அவர்களது துதிகளை வாயாரப்பாடி வழி வகுக்கிறோம் வாய் பாடப்பாட திறந்த வாயினுள் புகுந்து அருள் இதயத்துள் தடம் பதிக்கிறது. மந்திர தந்திர வழிபாட்டைச் செய்ய இயலாதவர், நாமத்தையே மந்திரமாக்கி வழிபாட்டை எளிதில் செய்ய முடியும்.

### உபாஸகன் தெரிந்து கொள்ள வேண்டியவை

பஞ்சாயதன பூஜை இரண்டு விதம். பதார்த்தானுஸமயம், காண்டானுஸமயம் என. எல்லோருக்கும் சேர்ந்து பாத்யம் அர்க்க்யம் முதலியவைகளை அளிப்பது பதார்த்தானு ஸமயம். ஒருவருக்கு ஆஸனம் முதலிய எல்லா உபசாரங்களையும் செய்து

முடித்து பின் அடுத்தவருக்குச் செய்வது காண்டானு ஸமயம். இதில் தேவதையின் வரிசை மாறக் கூடாது. மானஸிக பூஜையிலும் இந்த முறை உண்டு. ஒன்றுக்கு மேற்பட்ட தேவதைகளின் பூஜைகளிலும் இந்த நியமம் உண்டு.

மணி சங்கு கலசம் தீபம் முதலிய பூஜா ஸாதனங்களைப் பலகை முதலிய ஆதாரத்தின்மேல் வைப்பது அவசியம் தர்ப்பமும் ஆதாரமாகும்.

திதி வாரம் முதலிய காலமும் தேசமும் சொல்லி பூஜைக்கான ஸங்கல்பம் செய்வது அவசியம். ஜபத்திற்கும் இந்த ஸங்கல்பம் அவசியம். தேசம் காலம் தனது நோக்கம் இவற்றைக் கூறி நியமத்துடன் இப்பணியை நிறைவேற்றவிருக்கிறேன் என்று உறுதி கூறுவதே ஸங்கல்பம். உறுதியுடன் செயல்பட இது உதவும். அக்ஷதையுடன் ஸங்கல்பித்தால் இந்த அக்ஷதையை வடகிழக்கில் விடுவர்.

யந்திரமோ விக்ரகமோ வைத்துப் பூஜை செய்வதாயின் முறைப்படி ஜலத்திலும் தான்யத்திலும் அதிவாஸம் செய்வித்து சுத்தி செய்து பிராணப் ப்ரதிஷ்டை செய்து சுத்தமான இடத்தில் வைத்துத் தூய்மை கெடாமல் பாதுகாப்பது அவசியம். அதனுள் சைதன்யம் இயங்குகிறது என்பதால் கவனமும் மர்யாதையும் அவசியம். நல்ல பாவனையும் ஆழ்ந்த பக்தியும் கொண்டு பூஜித்தால் ப்ராண ப்ரதிஷ்டையின்றியே பாவனா பலத்தால் சைதன்யம் துலங்குவது உண்டு.

ஜபத்திற்கு அங்கமாக பூஜை, பூஜைக்கு அங்கமாக ஜபம், ஜபமும் பூஜையையும் சேர்ந்தே முக்கியம் என்றவாறு நோக்கத்திற்கேற்ப பூஜை மாறும்.

ஹோமம் ஹோமத்திற்கேற்ற பலவித ஹவிஸ் (கொழுக்கட்டை அப்பம் அருகம்புல் முதலியவை) இவற்றுடன் உபசாரங்களுக்கான ஸாதனமும் பொருளும் நிறைவுடன் கொண்டு விரத நியமங்களுடன் பூஜை செய்வது உத்தமம். பூ அக்ஷதை இவற்றால் எல்லா உபசாரங்களும் செய்வதும் அதமம் - விரிவாகப் பூஜை செய்ய முடியாத நேரத்திலும் இடத்திலும் சூழ்நிலையிலும் பாவனை

குறையாமல் கிடைத்ததைக் கொண்டு லகுவான பூஜையும் சிறந்ததே.

நோயுற்றவன் ஸூர்யனின் கிரணங்கள் மேல்பட உடலைத் தூய ஆடை உடுத்தி மூலமந்திரம் மட்டும் சொல்லிப் பூஜை செய்யலாம். ஸூதகதம் முதலியவற்றால் தூய்மை குறைந்த நிலையில் தியானித்து மாநஸ பூஜை செய்யலாம். சூழ்நிலையில் பதட்டம் மிகுந்து நிலை கொள்ளாத போது ஜலத்தாலேயே எல்லா உபசாரம் செய்யலாம். கல்வியறிவோ பொது அறிவோ இல்லாதவனும் பாலனும் கைகூப்பி வணங்கினாலே போதும்.

ஸபர்யையில் மிக முக்கியமானவை. ருஷி முதலிய நியாஸங்கள், கர நியாஸம், அங்க நியாஸம், கரதாளம், திக்பந்தம் தியானம், பூஜை, ஜபம் என்பவை.

தேவதையின் வஸ்த்ரம், மாலை இவற்றை தினமும் மாற்ற வேண்டும். பட்டாடையாயின் மூன்று மாதம் வரை வைக்கலாம். அழுக்காகி விட்டால் உடன் அகற்ற வேண்டும். நிவேதனம் செய்ததும் உடன் பலிக்காக சிறிது வைத்து மற்றதை உடன் அகற்ற வேண்டும். ஆறிச் சில்லிடாமல், கை பொறுக்காத சூட்டில் இல்லாமல் வெதுவெதுப்புடன் பக்குவ உணவு நிவேதனத்திற்குரியது. மானஸிக பூஜையில் நிர்மாலிய தோஷம் இல்லை. ஒரு தடவை உபயோகித்தது நிர்மாலியம் - அகற்றப்பட வேண்டியது. துளஸி பில்வம் இவை நிர்மாலிய தோஷம் இல்லாதவை. உருச்சிதைந்தால் அவையும் நிர்மாலியமே.

ஆஸனமாகக் கொள்ள - மான்தோல் ஞானம் தரும். புலித்தோல் முக்தி தரும். கம்பிளி துயர் நீக்கும். கல்தரை நோய் தரும். துயரம் நீடிக்கும். புல்லும் இலையும் புகழ் குலைக்கும். மனத்தைச் சிதறச் செய்யும். எந்த ஆஸனத்தின் மீதும் பருத்தியிலான வஸ்த்ரம் மூடி அதன் மேல் அமர்வது நல்லது.

விஷ்ணுவிற்கு மஞ்சள் நிறத்திலும் சிவனுக்கு வெள்ளையிலும் தேவி ஸூர்யன் விநாயகர் இவர்களுக்கு செந்நிறத்திலும் ஆடையும் ஆஸனமும் நல்லது.

வாசனைப் பொருள் மணமிக்க பூ இலை முதலியவற்றை ஊற வைத்து எடுத்த நீர் (பன்னீர்) அல்லது ஆகியவற்றின் பொடி சந்தனம் முதலியவற்றை அரைத் தெடுத்த விழுது, சந்தனக்கட்டை காரகில் தேவதாரு முதலியவற்றை எரித்து எடுத்த தைலம், பச்சிலை முதலியவற்றைப் பிழிந்தெடுத்த சாறு, கஸ்தூரி ஜவ்வாது புனுகு அரகஜா கோரோசனை போன்ற பிராணிகளிடம் எடுத்தவை. இவை பூஜையில் பயன்படுபவை.

ஸூர்யனுக்கு பில்வமும், விஷ்ணுவிற்கு முல்லையும் கணேசருக்குத் துளசியும், சிவனுக்குத் தாழம்பூவும் தவிர்ப்பர். பூக் கொணருகையில் பூஜைக்குரியதை கையில் தாங்கி எவரையும் வணங்கக் கூடாது. நிர்மாலியமாகி விடும்.

தேன்மெழுகுவத்தியின் நடுவே திரியுள்ள தீபம் நல்லதென்பர். ஆனால் கொழுப்பு முதலிய செயற்கை மெழுகுவத்திகள் ஏற்றதல்ல.

தானே பூஜிப்பது நல்லது. தனக்காகப் புத்திரர் முதலானோரைக் கொண்டு செய்வது மத்யமம். கடும் இயலாமையில் மற்றவருக்குத் தக்ஷிணை தந்து அவர் மூலம் செய்யலாம்.

அந்தந்த இடத்தில் அந்த அந்த உபசாரத்திற்கேற்ப முத்திரைகள் செய்வது அவசியம். குருமுகமாக முத்திரை முறை தெரிந்து கொள்ள வேண்டும். முத்திரை முறை சிலரது வழக்கில் மாறும். எல்லா முத்திரையும் தெரியாவிடில் வந்தன - தேநு - யோநி முத்திரைகளைக் கொண்டே செய்யலாம் என குருநாதர் கூறுவார்.

**ஸ்வஸ்திகம் :-** 5 புள்ளிகளின் 5 வரிசைக் கோலமிது. வெளிப்புள்ளிகளை இணைத்து சதுரமாக வரையவும். நடு மூன்று புள்ளிகளை இணைத்து தெற்கு-வடக்காகவும் கிழக்கு மேற்காகவும் (குறுக்காக) கோடு வரையவும். அதன் கிழக்கு முனையை நான்காவது புள்ளியில் தெற்கில் திருப்பி அந்த நான்காவது புள்ளியில் மறுபடி கிழக்கில் திருப்பி சதுரத்தின் கிழக்குத் கோட்டில் இணைக்கவும். இவ்வாறே தெற்கு முனையை நான்காவது புள்ளியில் மேற்கில் திருப்பி நான்காவது புள்ளியில் சதுரத்தின்

தெற்குக் கோட்டில் இணைக்கவும் மேற்கு முனையை வடக்கில் திருப்பி மடித்து மேற்கு சதுரக் கோட்டிலும் வடக்கு முனையை கிழக்கில் திருப்பி மடித்து சதுரத்தின் வடக்குக் கோட்டிலும் இணைக்கவும். வட கிழக்கிலும் தென் மேற்கிலும் உள்ள கட்டத்தில் அரிசிமாவும் தென் கிழக்கிலும் வடமேற்கிலும் உள்ள கட்டத்தில் மஞ்சள் தூளும் தூவ ஸ்வஸ்திகம் அமையும். தீபம் வைத்தும் கணபதியை அமைத்தும் பூஜை செய்ய ஏற்றது. (பிரபஞ்சஸாரஸாரங்க்ரஹம்).

கணேச முத்திரை :- மூக்கை ஒட்டி வலது தோளைத் திருப்பி, கையை நீட்டி விரல்களை நீட்டிக் குவித்து நடுவிரலுக்கும் ஆட்காட்டிக்கும் எதிரே கட்டை விரலைப் பதிக்க உபாஸகன் தன் முகத்திலிருந்து துதிக்கை தொங்குவதாகப் பாவிப்பது கணேச முத்திரை (சாரதாதிலக உரை). இவ்வாறு ஆழ்ந்த பாவனையால் புசுண்டி முனிவர், உண்மையில் துதிக்கை தோன்றியதால் கணேசராகவே ஆனார் என்பர். भुवि शुण्डा यस्य भूशुण्डिः भुशुण्डिः) இந்த முத்ரை ஸ்ரீவித்யா ஸபர்யையில் பலிதர ஏற்றது. கணபதிக்கு பலி (ஹோமத்தில் மிகுந்தஹவிஸ், நிவேதனத்தில் எடுத்து வைத்தது) தரும் போது காட்டப்படுகிறது. கணபதி வழிபாட்டிலும் ஏற்றது.



# श्रीविघ्नेश्वरस्तुतिमञ्जरी

## चतुर्थो भागः

## विषयानुक्रमणिका

# ஸ்ரீவிக்நேச்வரஸ்துதி மஞ்சரீ

## நான்காம்பாகம்

## பொருளடக்கம்

॥ श्रीः ॥

# श्रीविघ्नेश्वरस्तुतिमञ्जरी

## ஸ்ரீ விக்நேச்வர ஸ்துதி மஞ்ஜரீ

### चतुर्थो भागः நான்காம் பாகம்

श्री गुरुभ्यो नमः ॥

वन्दे गुरुपदद्वन्द्वमवाङ्मनसगोचरम् ।
रक्तशुक्लप्रभामिश्रमतर्क्यं त्रैपुरं महः ॥

दयमानदीर्घनयनां देशिकरूपेण दर्शिताभ्युदयाम् ।
वामकुचनिहितवीणां वरदां सङ्गीतमातरं वन्दे ॥

दयिन्या श्रीमात्रा दहरकुहरे सूत्रधरया
समादिष्टा वाचामधिपतिषु काप्यन्यतमिका ।
मदाराध्यश्रीमद्गुरुचरणनिर्णेजनजलैः
पवित्रे जिह्वाग्रे नटति मम देवी करुणया ॥

श्रुतिस्मृतिपुराणानामालयं करुणालयम् ।
नमामि भगवत्पादशङ्करं लोकशङ्करम् ॥

अपारकरुणामूर्तिं ज्ञानदं शान्तरूपिणम् ।
श्रीचन्द्रशेखरगुरुं प्रणतोऽस्मि मुदाऽन्वहम् ॥

परित्यज्य मौनं वटाधःस्थितिं च व्रजन्भारतस्य प्रदेशात्प्रदेशम् ।
मधुस्यन्दिवाचा जनान्धर्ममार्गे नयन्श्रीजयेन्द्रो गुरुर्भाति चित्ते ॥

तव तत्त्वं न जानामि तदमेयं धिया मम ।
अनीदृशस्त्वं प्रथितस्तादृशे ते गुरो नमः ॥

# ॥ श्रीगणपतिषोडशनामस्तोत्रम् ॥

## ஸ்ரீ கணபதி ஷோடசநாம ஸ்தோத்திரம்

सुमुखश्चैकदन्तश्च कपिलो गजकर्णकः ।
लम्बोदरश्च विकटो विघ्नराजो विनायकः ॥

धूमकेतुर्गणाध्यक्षो भालचन्द्रो गजाननः ।
वक्रतुण्डश्शूर्पकर्णो हेरम्बः स्कन्दपूर्वजः ॥

षोडशैतानि नामानि यः पठेच्छृणुयादपि ।
विद्यारम्भे विवाहे च प्रवेशे निर्गमे तथा ।
सङ्ग्रामे सर्वकार्येषु विघ्नस्तस्य न जायते ॥

ஸுமுகஶ் சைகதந்தஶ் ச கபிலோ கஜகர்ணக:
லம்போதரஶ்ச விகடோ விக்ந்ராஜோ விநாயக:

தூமகேதுர் கணாத்த்யக்ஷ: பாலசந்த்ரோ கஜாநந:
வக்ரதுண்டஶ் ஶூர்பகர்ணோ ஹேரம்ப: ஸ்கந்தபூர்வஜ:

ஷோடஶைதாநி நாமாநி ய: படேத் ஶ்ருணுயாதபி
வித்யாரம்ப்பே விவாஹே ச ப்ரவேஶே நிர்கமே ததா
ஸங்க்ராமே ஸர்வகார்யேஷு விக்ந்ஸ் தஸ்ய ந ஜாயதே.

*1. ஸுமுகர், 2. ஏகதந்தர், 3. கபிலர், 4. கஜகர்ணகர், 5. லம்போதரர், 6. விகடர், 7. விக்னராஜர், 8. விநாயகர், 9. தூமகேது, 10. கணாத்த்யக்ஷர், 11. பாலசந்த்ரர், 12. கஜானனர், 13. வக்ரதுண்டர், 14. சூர்ப்பகர்ணர். 15. ஹேரம்பர், 16. ஸ்கந்த பூர்வஜர், என்று 16 பெயர்கள் வாய்ந்தவர் ஸ்ரீ மஹாகணபதி. கல்வியைத்தொடங்கும்பொழுதும், திருமணத்திலும், புதுமனை புகும்போதும், பயணத்திலும், போரிலும், எல்லா நற்செயல்களிலும் இந்தப் பதினாறு பெயர்களை நினைத்துச் செயலாற்றுகிறவனுக்கு எவ்வகையான தடையும் தலை காட்டாது.*

ओं श्रीमहागणपतये नमः

वेदस्तुतिः – வேதஸ்துதி

ॐ गणानां त्वा गणपतिं हवामहे कविं कवीनामुपमश्रवस्तमम्।
ज्येष्ठराजं ब्रह्मणां ब्रह्मणस्पत आ नः शृण्वन्नूतिभिः सीद सादनम्॥
(ऋग्वे २-२३-१; वाजसनेयसं २३-२९; तैत्तिरीय २-३-१४-३)

*பிரம்ஹணஸ்பதியே! தேவர் மனிதர் முதலிய பல்வேறு இனத்தவரின் கணங்களுக்குத் தலைவரும், கவிகளில் சிறந்த கவியும், உவமையாகக் காட்டத்தக்க உணவுச் செழிப்பு (புகழ்) உள்ளவரும் மூத்த தேவர்களான மும்மூர்த்திகளுக்கு முன்னவராக விளங்குபவரும், வேதமந்திரங்களின் உட்பொருளுமான உம்மை. அழைக்கிறோம். எம் வேண்டுகோளை ஏற்று இவ்வேள்வியில் வேள்விப்பாதுகாப்பிற்குரியவைகளுடன் வந்தமர்வீராக! (வேதம் அதன் உட்பொருள், வேதத்தின் உட்பொருளை உணர்கிற ஞானி, வேதவழியில் அமைகிற வழிபாட்டு முறைகள் இவை அனைத்தும் பிரம்ஹ எனப்படும். அதன் தலைவரும் பாதுகாப்பாளரும் பிரம்ஹணஸ்பதி. (இது விக்னேசுவரருக்கு வேதம் தந்த பெயர். ஆழ்ந்து பரந்து உலகைக் காண்பவன் கவி)*

तत्पुरुषाय विद्महे वक्रतुण्डाय धीमहि।
तन्नो दन्तिः प्रचोदयात्। (तैत्तिरीय आरण्यक प्र १०, अनुवाक १)

*அந்தப்பெருமானைக் கண்டுணர்வோம். வளைந்த துதிக்கை கொண்டவரைத் தியானிப்போம். சிறந்த தந்தம் படைத்தவர் நம்மை நல் வழியில் தூண்டட்டும்.*

गणानां त्वा गणपतिं हवामहे प्रियाणां त्वा प्रियपतिं हवामहे
निधीनां त्वा निधिपतिं हवामहे वसो मम।
आहमजानि गर्भधमात्वमजासि गर्भधम्।
(शुक्ल यजुर्वेद अध्याय २३, मन्त्र २९)

*கணங்களின் கணங்களுக்குத்தலைவரான உம்மை அழைக்கிறோம். அன்புக்குரியவர்களுக்குள் பேரன்புக் குரியவரை அழைக்கிறோம். பெருஞ் செல்வக்குவியல்களின் காப்பாளரை*

அழைக்கிறோம். எல்லோருள்ளத்திலும் அமர்ந்துள்ளவரே! எனக்கும் காப்பாளராவீர். நான் உமது பிருகிருதியில் (உலகமூலப்பொருளில்) பிரதிபிம்பிப்பவன். நான் உம்மை பிம்பமாக என் மூலக்கருவாகத் தாங்கி நிற்பேன்.

नमो गणेभ्यो गणपतिभ्यश्च वो नमो नमो
व्रातेभ्यो व्रातपतिभ्यश्च वो नमो नमो
विरूपेभ्यो विश्वरूपेभ्यश्च वो नमः।
(शुक्लयजुर्वेद अध्याय १६, मन्त्र २५, कृष्णयजुर्वेद ४-४)

தேவர்கள் முதலான கணங்களுக்கும், அந்த கணத்தைக் காப்பவர்களுக்கும் நமஸ்காரம். பல்வேறு மக்கள் சமுதாயத்திற்கும், சமுதாயத்தைக் காப்பவர்களுக்கும் நமஸ்காரம். அவர்களிடையே காண்கிற அறிஞர்களுக்கும் அவர்களின் தலைவர்களுக்கும் நமஸ்காரம். (அனைவரும் நீரே! நீரே அவர்களுக்குரிய வணக்கங்களுக்கு உரியவர்)

## ॥ गणेशसूक्तम् ॥ கணேசஸூக்தம்

आ तू न इन्द्र क्षुमन्तं चित्रं ग्राभं सं गृभाय। महाहस्ती दक्षिणेन॥ १॥

இறைவ! பெருந்துதிக்கையுள்ள நீர் பாராட்டுக்குரியதும் விரும்பத்தக்கதும் (கரும்புடன் கூடியதும்) ஏற்கத்தக்கதுமான செல்வத்தை இப்போதே எமக்கென வலதுகையில் ஏந்தி எம்முன் தோன்றுவீர்.

विद्मा हि त्वा तुविकूर्मिं तुविदेष्णं तुवीमघम्। तुविमात्रमवोभिः॥ २॥

பல பணிகளால் உதவுபவரும். நிறைய வழங்குபவரும் பெருஞ் செல்வமிக்கவரும் பேராற்றல் மிக்கவருமாக உம்மை அறிவோம்.

नहि त्वा शूर देवा न मर्तासो दित्सन्तम्। भीमं न गां वारयन्ते॥ ३॥

இறைவ! நீர் செல்வம் வழங்கவிருப்பதை தேவரோ மனிதரோ தடைசெய்யார். முரட்டு எருதைப்போன்ற உம்மைத் தடை செய்ய இயலாதல்லவா?

एतो न्विन्द्रं स्तवामेशानं वस्वः स्वराजम्। न राधसा मर्धिषन्नः ॥ ४ ॥

மக்களே! பெருஞ் செல்வத்திற்கு அதிபரும், தன்னியல்பாக வே பெருமைமிக்கவருமான இறைவனைத் துதிக்க வருவீர். இறைவனருள் பெற்ற நம்மைச் செல்வத்தால் மற்றொரு செல்வந்தன் துன்புறுத்தக் கூடாதல்லவா? (இறையருளால் செல்வந்தர்களான நம்மை யொத்த செல்வந்தர்களும் மேலும் செல்வம் பெற இறைவனைத்துதிப்போம்).

प्रस्तोषदुप गासिषच्छ्रवत्साम गीयमानम्। अभि राधसा जुगुरत्॥ ५ ॥

நமது துதிகீதத்தைக் கேட்ட இறைவன் மகிழ்ந்து கூடப் பாடட்டும். நம்மைச் செல்வத்துடன் உள்ள தன்னவராக ஏற்கட்டும்.

आ नो भर दक्षिणेनाभि सव्येन प्र मृश। इन्द्र मा नो वसोर्निर्भाक्॥ ६ ॥

இறைவ! எமக்காக நல்லவற்றைச் சேமிப்பீர். அவற்றை உம் வலதுகையால் தொட்டுத்தருவீர். எம்மைச் செல்வத்திலிருந்தும் பிரிக்காதீர்.

उप क्रमस्वा भर धृषता धृष्णो जनानाम्। अदाशूष्टरस्य वेदः ॥ ७ ॥

இறைவ! செல்வத்தை வழங்க முன்வருவீர். மக்களின் செல்வத்தைப் பறித்து திருப்பித்தரச் சிறிதும் இணங்காதவனது செல்வத்தை உறுதி மிக்கவரான நீர் மன உறுதியுடன் பறிப்பீர்.

इन्द्र य उ नु ते अस्ति वाजो विप्रेभिः सनित्वः। अस्माभिः सु तं सनुहि॥ ८ ॥

இறைவ! நல்லோர்களுக்குப் பகிர்ந்தளிக்கவென உம்மிடம் உள்ள உணவை, எம்மால் வேண்டப்பட்டவராக, எமக்கு அளிப்பீர்.

सद्योजुवस्ते वाजा अस्मभ्यं विश्वश्चन्द्राः। वशैश्च मक्षू जरन्ते॥ ९ ॥

அனைவரது மனத்திற்கும் நிலவுபோல் நிறைவு தருகிற உம்மிடமுள்ள உணவுப்பொருள்கள் விரைவுடன் எம்மை வந்தடையட்டும். எம்மக்கள் உம்மை ஆர்வத்துடன் துதிக்கின்றனர்.

ருக்வேதம் (மண்டலம் 8-81)

गणानां त्वा गणपतिं हवामहे कविं कवीनामुपमश्रवस्तमम्।
ज्येष्ठराजं ब्रह्मणां ब्रह्मणस्पत आ नः शृण्वन्नूतिभिः सीद सादनम्॥ १० ॥

*பிரம்ஹணஸ்பதியே! தேவர் மனிதர் முதலிய பல்வேறு இனத்தவரின் கணங்களுக்குத் தலைவரும் கவிகளில் சிறந்த கவியும், உவமையாகக் காட்டத்தக்க உணவுச் செழிப்பு (புகழ்) உள்ளவரும். மூத்த தேவர்களான மும்மூர்த்திகளுக்கும் முன்னவராக விளங்குபவரும், வேதமந்திரங்களின் உட்பொருளுமான உம்மை அழைக்கிறோம். எம் வேண்டுகோளை ஏற்று இவ்வேள்வியில் வேள்விப்பாதுகாப்பிற்குரியவைகளுடன் வந்தமர்வீராக. (ருக் 2-23)*

नि षु सीद गणपते गणेषु त्वामाहुर्विप्रतमं कवीनाम्।
न ऋते त्वत्क्रियते किं चनारे महामर्कं मघवञ्चित्रमर्च॥ ११ ॥

*கணங்களின் தலைவரே! உம்மைத் துதிக்கின்ற எம்மிடையே வந்தமர்வீர். உம்மைக் கவிகளுள் சிறந்த பேரறிஞராகக் கூறுவர். உமது அருளின்றி எப்பணியும் அருகிலோ தூரத்திலோ தொடங்கப் பெறுவதில்லை. ஆற்றல் மிக்கவரே! எமது பெரும் வேண்டுகோளை ஏற்பீராக.*

अभिख्यानो मघवन्नाधमानान्त्सखे बोधि वसुपते सखीनाम्।
रणं कृधि रणकृत्सत्यशुष्माऽभक्ते चिदा भजा राये अस्मान्॥ १२ ॥

*செல்வமிக்கவரே! வேண்டிநிற்கிற எம்மைப் புகழும் ஒளியும் பெறச் செய்வீர். நண்பரே! செல்வத்தின் அதிபதியே! எமது துதியை ஏற்பீர். எதிரியுடன் போரிடுபவரே! உண்மையான வலிவுடன் கூடிய நீர் போரிட்டு எதிரியை வெல்வீர். தகுதியற்ற நிலையிலும் எங்களைச் செல்வம் பெறச் செய்வீர். (ருக் வேதம் 10.112)*

## ब्रह्मणस्पतिसूक्तम् - ப்ரம்ஹணஸ்பதி ஸூக்தம்

सोमानं स्वरणं कृणुहि ब्रह्मणस्पते। कक्षीवन्तं य औशिजः॥ १ ॥

*(ப்ரம்ஹ - பரம்பொருள், வேதம் தவம், வாக்கு, அந்தணர், ஆத்மா, பிரும்மா, உணவு, வேள்வி, என்ற பலபொருள்*

*கொண்டது. வேதம், தவம், வாக்கு, அந்தணர், உலகம், உணவு, வேள்வி இவற்றின் காப்பாளரானதால் மஹா கணபதியை ப்ரம்ஹணஸ்பதி என வேதம் கூறுகிறது)*

*பிரம்ஹணஸ்பதியே! உம்மைக் குறித்து வேள்விக்கான ஹோமப்பொருளைப் பிழிந்தெடுக்கின்றவரை, உசிஜரின் குமாரரான கக்ஷீவானைப் போல் தேவர்களிடையே மிக்க பெருமை பெறுபவராக ஆக்குவீர்.*

**यो रेवान्यो अमीवहा वसुवित्पुष्टिवर्धनः । स नः सिषक्तु यस्तुरः ॥ २ ॥**

*செல்வம் மிக்கவரும், நோய் நீக்குபவரும், பொருட் செல்வத்தைத் தேடிப் பெறுபவரும், புஷ்டியைத் தருபவரும் விரைவில் பயன் தருபவருமான பிரம்ஹணஸ்பதி நம்மை ஏற்று அருள்புரியட்டும்.*

**मा नः शंसो अररुषो धूर्तिः प्रणङ्मर्त्यस्य । रक्षा णो ब्रह्मणस्पते ॥ ३ ॥**

*பிரம்ஹணஸ்பதியே! எளிதில் தளரக்கூடிய மனிதனைத் துன்புறுத்த வருகிற எதிரியின் மிரளச் செய்கிற பேச்சுவன்மை எங்களைப் பாதிக்காமல் எம்மைக் காப்பீர்.*

**स घा वीरो न रिष्यति यमिन्द्रो ब्रह्मणस्पतिः । सोमो हिनोति मर्त्यम् ॥ ४ ॥**

*இந்திரனும் பிரம்ஹணஸ்பதியும் ஸோமரும் காப்பாற்றி வளர்க்கின்ற மனிதனே குறைவற்றவனாக ஆவான்.*

**त्वं तं ब्रह्मणस्पते सोम इन्द्रश्च मर्त्यम् । दक्षिणा पात्वंहसः ॥ ५ ॥**

*பிரம்ஹணஸ்பதியே! தெய்வப்பணி புரிகின்றவனை நீரும் இந்திரனும் ஸோமனும் தக்ஷிணா என்ற தேவதையும் பாபத்திலிருந்தும் மீட்டுக் காப்பீர்களாக! (ருக்வேதம் 1-18)*

**उत्तिष्ठ ब्रह्मणस्पते देवयन्तस्त्वेमहे ।**
**उप प्र यन्तु मरुतः सुदानव इन्द्र प्राशूर्भवा सचा ॥ ६ ॥**

*பிரம்ஹணஸ்பதியே! நீர் உமது இடமிருந்து புறப்படுவீர். தேவரின் அருகாமையை விரும்புகிற நாங்கள் உம்மை வேண்டுகிறோம். நன்கு வாரி வழங்குகிற மருத் எனும் தேவதைகளும், உம்முடன் சேர்ந்து வரட்டும். இந்திரனே! ஸோமரஸம் பருக நீரும் கூடவருவீர்.*

त्वामिद्धि सहसस्पुत्र मर्त्य उपब्रूते धने हिते।
सुवीर्यं मरुत आ स्वश्व्यं दधीत यो व आचके॥ ७॥

*உடல் உறத்தைப் பாதுகாப்பவரே! (பிரம்ஹண ஸ்பதியே) செல்வம் எதிரியால் பறிக்கப்படும்போது உம்மையே மனிதன் வேண்டுகிறான். மருத்தேவர்களே! செல்வம் வேண்டி பிரம்ஹணஸ்பதியுடன் உங்களைத் துதிக்கும்போது குதிரை முதலியதடங்கிய செழித்த செல்வத்தை மனிதன் பெறட்டும்.*

प्रैतु ब्रह्मणस्पतिः प्र देव्येतु सूनृता।
अच्छा वीरं नर्यं पंक्तिराधसं देवा यज्ञं नयन्तु नः॥ ८॥

*பிரம்ஹணஸ்பதியும். பிரியமும் ஸத்யமுமே பேசச் செய்கிற வாக்கின் தேவியும் எங்களை அடையட்டும். இவர்கள் எமது எதிரிகளைத் தூரவிலகச் செய்யட்டும். மனிதர்களுக்கு இதமானதும், முறைப்படி அமைந்துமான வேள்வியில் எம்மை ஈடுபடுத்தட்டும்.*

यो वाघते ददाति सूनरं वसु स धत्ते अक्षिति श्रवः।
तस्मा इळां सुवीरामा यजामहे सुप्रतूर्तिमनेहसम्॥ ९॥

*வேள்வி புரிவதில் உதவுகிற ருத்விக்கிற்கு எளிதில் எடுத்துச் செல்லக் கூடியதைத் தக்ஷிணையாகக் தருபவன், அழியா உணவுச் செல்வம் பெறுகிறான். அவன் பொருட்டு நல்ல வீரர்களுடன் எதிரியை எதிர்ப்பவளும் பிறரால் தகர்க்க முடியாதவளுமான இளா என்ற தேவியை வேள்வி மூலம் வழிபடுவோம்.*

प्र नूनं ब्रह्मणस्पतिर्मन्त्रं वदत्युक्थ्यम्।
यस्मिन्निन्द्रो वरुणो मित्रो अर्यमा देवा ओकांसि चक्रिरे॥ १०॥

*இந்திரனும் வருணனும் மித்திரனும் அர்யமாவும் மற்றதேவர்களும் இடம் பெறும்படி அமைந்த உக்த்யம் என்ற வேள்விமுறைக்கான மந்திரத்தை ஹோமம் செய்பவரின் வாயில் அமர்ந்து பிரம்ஹணஸ்பதியே உரக்கச் சொல்கிறார்.*

तमिद्वोचेमा विदथेषु शंभुवं मन्त्रं देवा अनेहसम्।
इमां च वाचं प्रतिहर्यथा नरो विश्वेद्वामा वो अश्नवत्॥ ११॥

தேவர்களே! அதே மந்திரத்தைத் தான் வேள்வியில் துணை புரிகிற நாங்கள் சொல்கிறோம். அது மங்களத்தைத் தோற்றுவிக்கும். துயர் தராதது. வழிகாட்டுகிற தேவர்களே! இந்த மந்திரவாக்கை ஏற்றுக் கொள்ளுவீர். நீங்கள் விரும்பினால் எல்லா நல்ல மந்திரவாக்குகளும் உங்களைச் சூழட்டும்.

को देवयन्तमश्नवज्जनं को वृक्तबर्हिषम्।
प्रप्र दाश्वान्पस्त्याभिरस्थितान्तर्वावत्क्षयं दधे॥ १२॥

தேவர்களின் அருகாமையை விரும்புகிற இம் மனிதனை பிரம்ஹணஸ்பதியைத் தவிர வேறு எவர் சூழ்ந்து நிற்பார்? அவருக்காகத் தர்ப்பை முதலானவற்றைக் கொய்து வந்தவனை வேறு எந்த தேவர் சூழ்ந்து நிற்பார்? வேள்வியில் அவிஸைத் தருபவனாக. எல்லாப் பொருள்களும் நிரம்பியவனாக. வேள்வியில் உதவுகிற ருத்விக்குகளுடன் வேள்விக்கூடத்தை நோக்கிக் கிளம்பியவனாக யஜமானன் (வேள்விபுரிபவன்) தன்னிருப்பிடம் அடைந்துள்ளான்.

उप क्षत्रं पृञ्चीत हन्ति राजभिर्भये चित्सुक्षितिं दधे।
नास्य वर्ता न तरुता महाधने नार्भे अस्ति वज्रिणः॥ १३॥

பிரம்ஹணஸ்பதி எல்லா வலிவையும் கூட்டி, வருணன் முதலான தேவருடன், எதிரிகளை அழித்து. பயம் தருகிற போர்க்களத்தில் உறுதியுடன் நிற்கிறார். பெரும் போரிலும் சிறுபோரிலும், வஜ்ரம் முதலிய ஆயுதம் பூண்டு பிறரது தூண்டுதலை எதிர்பாராமல் தாமே தம்மை அண்டியவனைக் காக்க முற்படுகிறார். இவரை மீற எவருமில்லை. (ருக்வேதம் 1-40)

गणानां त्वा गणपतिं हवामहे कविं कवीनामुपमश्रवस्तमम्।
ज्येष्ठराजं ब्रह्मणां ब्रह्मणस्पत आ नः शृण्वन्नूतिभिः सीद सादनम्॥ १४॥

பிரம்ஹணஸ்பதியே! தேவர் முதலான கணங்களுக்கும் தமது தனித்த கணங்களுக்கும் பதியும், ஆழப்பரக்கக் காண்கிற கவிகளுக்குள்ளே கவியும், பெரும் உவமைக்குரிய புகழ் (அன்னம்) உள்ளவரும், பெரியோர் என மிகமிகப் பாராட்டதக்கவர்களின் நடுவே பெரியோனாகத் திகழ்பவரும், வேதமந்திரங்களின் உரிமையாளருமான உம்மை

இவ்வேள்வியில் தங்கள் அருகாமை பெற அழைக்கிறோம். எங்கள் துதிகளைச் செவிசாய்த்து ஏற்றுக் காப்புக்குரியவற்றுடன் இந்த வேள்விச் சாலையைவந்தடைவீராக!

देवाश्चित्ते असुर्य प्रचेतसो बृहस्पते यज्ञियं भागमानशुः।
उस्रा इव सूर्यो ज्योतिषा महो विश्वेषामिज्जनिता ब्रह्मणामसि॥ १५॥

பணியில் இடையூறு விளைவிக்கிற அசுரர்களை மாய்ப்பவரே! மந்திரவாக்குகளின் காப்பாளரே! பேரறிவுமிக்க உம்மைச் சார்ந்த தேவர்கள், வேள்வியில் உரியபங்கை ஏற்றனர். சூரியன் தன்னொளி கொண்டு ஒளிக்கதிர்களைப் படைப்பதைப்போல். அனைத்து மந்திரங்களையும் நீரே படைக்கிறீர்.

आ विबाध्या परिरापस्तमांसि च ज्योतिष्मन्तं रथमृतस्य तिष्ठसि।
बृहस्पते भीममित्रदम्भनं रक्षोहणं गोत्रभिदं स्वर्विदम्॥ १६॥

பிருஹஸ்பதியே! (வேதமந்திரவாக்குகளின் காப்பாளரே!) பாபவடிவினரான அரக்கரையும் (அவதூறு கூறுபவரையும்) அறியாமையிருட்டையும் தன் ஒளியால் வென்று. ஒளிமிக்கதும். வேள்விக்கு அழைத்துச் செல்வதும், எதிரிக்குப் பயம் தருவதும். அரக்கரை அழிப்பதும், மேகத்தைப் பிளந்து செல்வதும் வானுலகம் நோக்கிச் செல்வதுமான தேரில் ஏறி அமர்ந்துள்ளீர்.

नीतिभिर्नयसि त्रायसे जनं यस्तुभ्यं दाशान्न तमंहो अश्नवत्।
ब्रह्मद्विषस्तपनो मन्युमीरसि बृहस्पते महि तत्ते महित्वनम्॥ १७॥

பிருஹஸ்பதியே! நல்வழியில் அழைத்துச் செல்கிறீர். மக்களைத் துயருறாமல் காக்கிறீர். உம்மை வழிபடுபவன் பாபமோ ஏழ்மையோ அடைவதில்லை. மந்திரங்களை வெறுப்பவனை வாட்டுகிறீர். கோபத்தை அகற்றுகிறீர். உமது பெருமை அத்தகையது.

न तमंहो न दुरितं कुतश्चन नारातयस्तितिरुर्न द्वयाविनः।
विश्वा इदस्माद् ध्वरसो वि बाधसे यं सुगोपा रक्षसि ब्रह्मणस्पते॥ १८॥

பிரம்ஹணஸ்பதியே! நல்ல காப்பாளர் நீர். உம்மால் காக்கப்பெறுபவன் துயருறுவதில்லை. துயருக்குக் காரணமான

பாபச்செயலை அவன் செய்வதில்லை. அவனை எவரும் துன்புறுத்துவதில்லை. மனத்தில் ஒன்றும், செயலில் வேறும் கொண்ட வஞ்சகர் இவனைப் பாதிப்பதில்லை. அதற்காகத் துன்புறுத்துகிற படைகள் அனைத்தையும் நீர் எதிர்க்கிறீர்.

त्वं नो गोपाः पथिकृद्विचक्षणस्तव व्रताय मतिभिर्जरामहे।
बृहस्पते यो नो अभि ह्वरो दधे स्वा तं मर्मर्तु दुच्छुना हरस्वती॥ १९॥

பிருஹஸ்பதியே! நீரே எமது காப்பாளரும் வழிகாட்டியும். நீர் பேரறிஞர். உமக்கான இப்பணியில் உம்மைத் துதித்து வழிபடுகிறோம். எங்களைக் கெட்டவழியில் வஞ்சிப்பவனது அறிவு கெட்டவழியை விட்டகலட்டும்.

उत वा यो नो मर्चयादनागसोऽरातीवा मर्तः सानुको वृकः।
बृहस्पते अप तं वर्तया पथः सुगं नो अस्यै देववीतये कृधि॥ २०॥

பிருஹஸ்பதியே! எதிர்த்து நின்று, கை ஓங்கி எம் பொருளைப் பறித்து எம்மைத் துன்புறுத்துபவனை நல்வழி செல்லாது திருப்புவீர். எமக்கு வேள்விபுரிவதற்கான நல் வழியைக் காட்டுவீர்.

त्रातारं त्वा तनूनां हवामहेऽवस्पर्तरधिवक्तारमस्मयुम्।
बृहस्पते देवनिदो नि बर्हय मा दुरेवा उत्तरं सुम्नमुन्नशन्॥ २१॥

துன்பத்திலிருந்து மீளச் செய்து, குடும்பத்தைக் காத்து எங்களைப் பரிவுடன் அறிமுகப்படுத்தி, எங்களை விரும்பிக் காக்கின்ற உம்மை இவ்வேள்வியில் அழைக்கின்றோம். தெய்வநிந்தை புரிபவரை மாய்த்துக் கெட்ட புத்தியுள்ளவரை உயர் நிலை பெறாதபடி செய்வீர்.

त्वया वयं सुवृधा ब्रह्मणस्पते स्पार्हा वसु मनुष्या ददीमहि।
या नो दूरे तळितो या अरातयोऽभि सन्ति जम्भया ता अनप्नसः॥ २२॥

பிரம்ஹணஸ்பதியே! உம்மால் நாங்கள் நல் வளர்ச்சி பெறுகிறோம். விரும்புதற்குரிய செல்வத்தை நல்லோர் களிடமிருந்து பெறுவோம். அருகிலும் தூரத்திலும் துன்புறுத்த வருபவர்களை செயலாற்றமுடியாதபடி தடை செய்வீர்.

त्वया वयमुत्तमं धीमहे वयो बृहस्पते पप्रिणा सस्निना युजा।
मा नो दुःशंसो अभिदिप्सुरीशत प्र सुशंसा मतिभिस्तारिषीमहि॥ २३ ॥

*பிருஹஸ்பதியே! விரும்புவதையளிப்பவரும், தூய துணையுமான உம் துணை கொண்டு, உயர்ந்த போஷணையைப் பெறுகிறோம். எங்களை எவரும் வலிவால் அடக்க முடியாமற் செய்வீர். நற்புகழுடன் எங்களை நல்வாழ்வு பெறச் செய்வீர்.*

अनानुदो वृषभो जग्मिराहवं निष्टप्ता शत्रुं पृतनासु सासहिः।
असि सत्य ऋणया ब्रह्मणस्पत उग्रस्य चिद्दमिता वीळुहर्षिणः॥ २४ ॥

*பிரம்ஹணஸ்பதியே! எமக்குத் தொடர்ந்து விரும்பியதைத் தருபவர் வேறு எவருமில்லை. நீரே விருப்பத்தைத் தருபவர். போரில் எதிரியை எதிர்த்து அடக்குகிற நிலைத்த வீர்யமுள்ளவர். கடனைக் கரைப்பவர். கொடுங்கோலனையும், திமிருள்ளவனையும் நாஸ்திகனையும் நீர் அடக்குபவர்.*

अदेवेन मनसा रिषण्यति शासा मुग्रो मन्यमानो जिघांसति।
बृहस्पते मा प्रणक्तस्य नो वधो नि कर्म मन्युं दुरेवस्य शर्धतः॥ २५ ॥

*தெய்விகப்பண்பற்று எம்மைத் துன்புறுத்துகிற தற்புகழ்ச்சி கொள்கிற பாபி, எங்கள் எதிர்பார்வைகளைக் குலைக்க முற்படும்போது, அவர்களது ஆயுதம் எங்களை அணுகாது செய்வீர். கெட்டவனும் வலிவு மிக்கவனும் கெட்டநோக்குடன் மோத வரும்போது அவனது கோபமும் அறிவும் செயலும் உம்மருளால் பயனற்றுப் போகச் செய்வீர்.*

भरेषु हव्यो नमसोपसद्यो गन्ता वाजेषु सनिता धनंधनम्।
विश्वा इदर्यो अभिदिप्स्वो३ मृधो बृहस्पतिर्वि ववर्हा रथां इव॥ २६ ॥

*அந்த பிருஹஸ்பதி போர்க்காலத்தில் வீரர்களால் தற்காப்பிற்காகக் கூப்பிடத்தக்கவர். வணக்கத்துடன் வழிபடத்தக்கவர், போரில் முன் நிற்பவர், பொருளைப் பங்கிட்டுத்தருபவர், நம் எஜமானர், எதிர்க்கவருகிற படையனைத்தையும் தேர்களையும் தளரச் செய்பவர்.*

तेजिष्ठया तपनी रक्षसस्तप ये त्वा निदे दधिरे दृष्टवीर्यम्।
आविस्तत्कृष्व यदसत्त उक्थ्यं बृहस्पते वि परिरापो अर्दय॥ २७ ॥

பிருஹஸ்பதியே! மிகவும் வாட்டுகிற ஆயுதத்தால் அரக்கர்களை வாட்டுவீர்! அந்த அரக்கர்கள் போர்களில் அளவற்ற வீரத்தைக் காட்டிய உம்மை நிந்தித்தனர். உமது பாராட்டத்தக்க முன்னிருந்த வீரத்தை மறுபடி வெளிப்படுத்துவீர். அந்த வீரத்தால் உம்மை நிந்திக்கிற அரக்கர்களை வாட்டுவீர்.

**बृहस्पते अति यदर्यो अर्हाद् द्युमद्विभाति क्रतुमज्जनेषु।**
**यद्दीदयच्छवस ऋतप्रजात तदस्मासु द्रविणं धेहि चित्रम्॥ २८॥**

உண்மையிலிருந்து உதித்தவரே! பிருஹஸ்பதியே! சிறந்த அந்தணன் எல்லா விருப்பங்களையும் விட்டு, பிரும்ம தேஜஸை மட்டும் மதிக்கவேண்டும். அந்தணர்களில் ஒளிமிக்க பேரறிவு துலங்குகிற பிரும்மதேஜஸ் தானும் ஒளியுடன் பிரகாசித்து, தனக்கு ஆசிரயமானவனையும் ஒளிரச் செய்கிறது. அந்த பிரும்ம தேஜஸ் எனும் செல்வத்தை எம்மிடம் நிலைக்கச் செய்வீர்.

**मा नः स्तेनेभ्यो ये अभि द्रुहस्पदे निरामिणो रिपवोऽन्नेषु जागृधुः।**
**आ देवानामोहते वि व्रयो हृदि बृहस्पते न परः साम्नो विदुः॥ २९॥**

பிருஹஸ்பதியே! பிறரது உடமைகளைப் பறிப்பவரும் துரோகிகளுடன் உறவாடுபவரும் ஹிம்ஸையில் ஈடுபடுபவரும் தெய்வப்பணியில் நாட்டமில்லா தவருமானவரிடம் எம்மைச் சேர்க்காதீர். உயர்ந்த வேதமந்திரமான ரக்ஷோக்ந (அரக்கர்களையழிக்கிற) ஸாம மந்திரமறியாதவருடன் அந்த மந்திரமே நீர் தான் என உணர்ந்த எம்மைச் சேர்க்காதீர்.

**विश्वेभ्यो हि त्वा भुवनेभ्यस्परि त्वष्टाजनत्साम्नः साम्नः कविः।**
**स ऋणचिदृणया ब्रह्मणस्पतिर्द्रुहो हन्ता मह ऋतस्य धर्तरि॥ ३०॥**

பிரம்ஹணஸ்பதியே! உலகைப் படைத்த பிரஜாபதி உயிரினமனைத்திற்கும் மேலானவராக உம்மை வெளியிட்டார். நீரே எல்லா ஸாமங்களின் உட்பொருளையும் உணர்ந்தவர். அந்த நீர் பெரும் வேள்வியைப் பொறுப்புடன் ஏற்றுள்ள யஜமானனுக்குக் கடன்பட்டவரானீர். அவன் செய்துள்ள பாபம் என்ற கடனை அவனிடமிருந்து அகற்றுவீர். அவனது பணிகளில் துரோக எண்ணத்துடன் குறுக்கிடுபவரை அழிப்பவரும் நீரே.

तव श्रिये व्यजिहीत पर्वतो गवां गोत्रमुदसृजो यदङ्गिरः।
इन्द्रेण युजा तमसा परीवृतं बृहस्पते निरपामौब्जो अर्णवम्॥ ३१॥

ஆங்கிரஸராகத் தோன்றிய பிருஹஸ்பதியே! பசுக்களுக்கு வாழ்வளிக்கிற வலிவுள்ள மலை உம்மை அண்டுவதற்காக வாயிலைத் திறந்து வைத்துள்ளது. நீர் பசுக்களை வெளிக்கொணர்ந்ததும் இந்திரனைத் துணை கொண்டு இருள் சூழ்ந்திருந்த அடர்ந்த நீர்க்கடல் போன்றிருந்த மேகத்தை கீழ்நோக்கிக் கவிழ்த்து மழை பொழியச்செய்தீர்.

ब्रह्मणस्पते त्वमस्य यन्ता सूक्तस्य बोधि तनयं च जिन्व।
विश्वं तद्भद्रं यदवन्ति देवा बृहद्वदेम विदथे सुवीराः॥ ३२॥

பிரம்ஹணஸ்பதியே! இந்த உலகைக் கட்டுப் படுத்துகிற நீர் நாங்கள் பாடுகிற இந்த ஸூக்தத்தைக் கேட்பீர். எம் ஸந்ததியைக் காப்பீர். உம்மால் காக்கப்பெறுகிற உலகம் மங்கள வாழ்வுபெறும். நற்சந்ததிகளுடன் கூடி வேள்வியில் உம்மைப் பெரிதும் துதிக்கிறோம். (ருக்வேதம் 2.23)

सेमामविड्ढि प्रभृतिं य ईशिषेऽया विधेम नवया महा गिरा।
यथा नो मीढ्वान् त्स्तवते सखा तव बृहस्पते सीषधः सोत नो मतिम्॥ ३३॥

பிருஹஸ்பதியே! உலகின் ஈசனான நீர், எமது இந்தத்துதியைப் பெறுவீர். நாங்களும் உம்மை இந்தப் புதியத் துதியால் வழிபடுகிறோம். எம்மிடையே உம்மைத் துதிப்பவன் உமக்கு நண்பனாகிறான். நீர் அவனது விருப்பத்தை நிறைவேற்றுவீர்.

यो नन्त्वान्यनमन्न्योजसोतादर्दर्मन्युना शम्बराणि वि।
प्राच्यावयदच्युता ब्रह्मणस्पतिरा चाविशद्वसुमन्तं वि पर्वतम्॥ ३४॥

இவர் அடக்கவேண்டியவர்களைத் தம் வலிவால் அடக்குகிறார். மற்றும் மேகங்களை மழை கொட்டும்படி ஊடுருவி மேகத்தில் தேங்கியுள்ள நீரையும் கொட்டச்செய்கிறார். பசுச் செல்வம் மிக்க மலையில் (பலன் என்ற அசுரன் பாதையைத்தடை செய்ய வைத்திருந்த பாறையையும் அகற்றிப்) பசுக்களைக் கொணர்ந்தார்.

तद्देवानां देवतमाय कर्त्वमश्रथ्नन्दृळ्हाव्रदन्त वीळिता ।
उद्गा आजदभिनद् ब्रह्मणा वलमगूहत्तमो व्यचक्षयत्स्वः ॥ ३५ ॥

*தேவர்களில் மிக உயர்ந்த தேவனுன இவரது மற்ருெரு அருஞ் செயல் - திடமான மலைகளைச் சிதறச்செய்து, ஆழப்பதிந்து தடையாக இருந்தவற்றைத் மெதுவாக்கி பலன் என்ற அசுரன் கொண்டு சென்ற பசுக்களை மீட்டார். தன் மந்திர பலத்தால் தடையாக நின்ற பலனை அடக்கினுர். அவன் விளைவித்த இருட்டைப் போக்கி. சூர்ய ஒளி பரவச் செய்தார்.*

अश्मास्यमवतं ब्रह्मणस्पतिर्मधुधारमभि यमोजसातृणत् ।
तमेव विश्वे पपिरे स्वर्दृशो बहु साकं सिसिचुरुत्समुद्रिणम् ॥ ३६ ॥

*பிரம்ஹணஸ்பதி பாறைபோல் இறுகிக் கிடந்த மேகத்தை இனிய நீர்த்தாரைகளாக்கி மழையாகப் பெய்யவைத்தார். சூரியனின் கிரணங்கள் அவற்றைப் பருகும்படி செய்து நீருண்ட மேகமாக்கி மறுபடி நிறைய பெய்யச் செய்தார்.*

सना ता काचिद्भुवना भवीत्वा माद्भिः शरद्भिर्दुरो वरन्त वः ।
अयतन्ता चरतो अन्यदन्यदिद्या चकार वयुना ब्रह्मणस्पतिः ॥ ३७ ॥

*வேள்வி புரிபவர்களே! உங்களுக்காகத் தொடர்ந்து இவ்வாறு மாதந்தோறும் ஆண்டுதோறும் இறைவனின் பேராற்றல் நீரின் வழியைத் திறந்து விடுகின்றன. பிரம்ஹணஸ்பதி தான் இந்த திட்டங்களை வகுக்கிறுர். சிறிதும் தன்முயற்சியின்றி பூமியும் வானும் மேலும் கீழுமாக இப்படிப் பரிமாறிக் கொள்கின்றன.*

अभिनक्षन्तो अभि ये तमानशुर्निधिं पणीनां परमं गुहाहितम् ।
ते विद्वांसः प्रतिचक्ष्यानृता पुन र्यत उ आयन् तदुदीयुरा विशम् ॥ ३८ ॥

*(பசுமந்தையைப் பணிகள் என்ற அசுரர்கள் அபகரித்துச் சென்ற போது, ஸரமை என்ற தேவருலகத்து நாய்மூலம் அசுரரிருக்குமிடமறிந்து) பிரம்ஹணஸ்பதியால் படைக்கப்பட்ட ஆங்கிரஸர்கள் பணிகளால் குகையில் பசுமந்தை மறைக்கப்பட்டள்ளதை உணர்ந்து அங்கு அசுரரது மாயையை வென்று, உட் சென்ருர்கள்.*

ऋतावानः प्रतिचक्ष्यानृता पुनरात आ तस्थुः कवयो महस्पथः।
ते बाहुभ्यां धमितमग्निमश्मनि नकिः षो अस्त्यरणो जहुर्हि तम्॥ ३९॥

உண்மையறிவும் பரந்த ஆழ்ந்த அறிவாற்றலும் கொண்ட ஆங்கிரஸர்கள் மாயையை உணர்ந்து, வென்று பசுக்களுடன் திரும்ப முற்பட்டு, தம் கைகளைக் கடைந்து எடுத்தநெருப்பை அசுரர் மறைவிடத்திலிட்டுக் கொளுத்தினர்.

ऋतज्येन क्षिप्रेण ब्रह्मणस्पतिर्यत्र वष्टि प्र तदश्नोति धन्वना।
तस्य साध्वीरिषवो याभिरस्यति नृचक्षसो दृशये कर्णयोनयः॥ ४०॥

பிரம்ஹணஸ்பதிக்கு உண்மையே நாண். அவரது வேகமிக்க வில்லிலிருந்து விருப்பத்தை நிறைவுறச் செய்கிற அவரது அம்புகள் கிளம்பி அரக்கர்களை அழிக்கிறது. பிரம்ஹணஸ்பதியின் பெருமையை உணரச் செய்கிற மந்திரங்களே அந்த அம்புகள்.

स संनयः स विनयः पुरोहितः स सुष्टुतः स युधि ब्रह्मणस्पतिः।
चाक्ष्मो यद्वाजं भरते मती धनादित्सूर्यस्तपति तप्यतुर्वृथा॥ ४१॥

பிரம்ஹணஸ்பதியே தேவர்களின் முன்னோடியான வழிகாட்டி. கூடாததைக் கூட்டிவைப்பவர். கூடியதைப் பிரிப்பவர். நன்கு துதிக்கப்பெற்றுப் போர்நெருக்கடியில் உதவுகிறார். எல்லாவற்றையும் காண்பவராக. (தாங்குபவராக) வழிபடுபவருக்காக உணவையும் செல்வத்தையும் மழையாகப் பெய்கிறார். சூரியனாக ஒளியுடன் பிரகாசிக்கிறார். (அவர் தந்த உணவும் செல்வமும் வேள்வியில் பயன்பட அவற்றை ஏற்று மகிழ்ந்து மழை யாகத் திருப்பித்தருகிறார்.)

विभु प्रभु प्रथमं मेहनावतो बृहस्पतेः सुविदत्राणि राध्या।
इमा सातानि वेन्यस्य वाजिनो येन जना उभये भुञ्जते विशः॥ ४२॥

அவர் அளிக்கிற செல்வம் முதலியவை எங்கும் பரவுபவை. மிகப்பெரிய ஆளுமை கொண்டவை. முக்கியமானவை. எளிதில் கிட்டுபவை. இவை அனைத்தும் அவர் அருளியவை. வேள்வியால் வழிபடும் மனிதரும் வேள்வியில் வழிபடப்பெறுகிற தேவரும் இதனால் மகிழ்ந்து சுகம் பெறுகின்றனர்.

योऽवरे वृजने विश्वथा विभुर्महामु रण्वः शवसा ववक्षिथ।
स देवो देवान्प्रति पप्रथे पृथु विश्वेदु ता परिभूर्ब्रह्मणस्पतिः ॥ ४३ ॥

எங்கும் நீக்கமற நிரம்பித் துதிக்கப்பெறுகிற பிரம்ஹணஸ்பதி எளியவனையும் வலியவனையும் தன்வலிவால் தாங்குகிறார். வள்ளல் தன்மை மிக்க அவர், தேவர்களின் பிரதிநிதியாகப் புகழ்பெறுகிறார். அதன்காரணமாக எல்லா உயிரினங்களின் மேலாளராக விளங்குகிறார்.

विश्वं सत्यं मघवाना युवोरिदापश्चन प्र मिनन्ति व्रतं वाम्।
अच्छेन्द्राब्रह्मणस्पती हविर्नोऽन्नं युजेव वाजिना जिगातम् ॥ ४४ ॥

இந்திரனே! பிரம்ஹணஸ்பதியே! பெருஞ் செல்வம் கொண்ட உங்களிருவர் பற்றிய இந்தத்துதி உண்மையைக் கூறுவதே. எந்த உயிரினமும் உமது செயலாற்றலைத்தடை செய்ய இயலாதவை. தேரில் பூட்டிய இருகுதிரைகள் புல்லை நோக்கி வருவதுபோல் நீங்களிருவரும் எம்மை நோக்கி வருவீர்.

उताशिष्ठा अनु शृण्वन्ति वह्नयः सभेयो विप्रो भरते मती धना।
वीळुद्वेषा अनु वश ऋणमाददिः स ह वाजी समिथे ब्रह्मणस्पतिः ॥ ४५ ॥

பிரம்ஹணஸ்பதியின் வேகமிக்க குதிரைகள் துதிகேட்டு வேள்விக் கூடத்திற்கு அவரைக் கொணர்கின்றன. சபைக் கேற்ற அறிஞரான அந்தணன் செழிப்பு மிக்க ஹவிஸை இறைவனுக்கு அளிக்கிறான். இடையூறுகளை அகற்றிய இறைவன் அதனை ஏற்கட்டும்.

ब्रह्मणस्पतेरभवद्यथावशं सत्यो मन्युर्महि कर्मा करिष्यतः।
यो गा उदाजत्स दिवे वि चाभजन्महीव रीतिः शवसासरत्पृथक् ॥ ४६ ॥

பெருஞ் செயலாற்றுகிற பிரம்ஹணஸ்பதியின் மந்திரங்கள் வீணாகாதவை. பணிகள் கொண்டு சென்ற பசுக்களை மீட்டு அவற்றைத் தேவர்களிடம் கொண்டு சேர்த்தது. அந்தப் பசுமந்தை தனித் தனியே தம் தம் இடத்திற்கு வந்து சேர்ந்தது.

ब्रह्मणस्पते सुयमस्य विश्वहा रायः स्याम रथ्यो३ वयस्वतः।
वीरेषु वीराँ उप पृङ्ग्धि नस्त्वं यदीशानो ब्रह्मणा वेषि मे हवम् ॥ ४७ ॥

*பிரம்ஹணஸ்பதியே! காப்பதற்கும் கட்டுபாட்டுடன் பயன்படுத்துவதற்கும் உரிய உணவுக்கும் செல்வத்திற்கும் அதிபதிகளாவோம். எங்களது நற்புதல்வர்களுக்கு நற்புதல்வர்களைத் தருவீர். பேராளுமை மிக்க நீர் என்னுடைய துதியை விரும்பி ஏற்பீர்.*

ब्रह्मणस्पते त्वमस्य यन्ता सूक्तस्य बोधि तनयं च जिन्व।
विश्वं तद्भद्रं यदवन्ति देवा बृहद्वदेम विदथे सुवीराः ॥ ४८ ॥

*பிரம்ஹணஸ்பதியே! நீரே இவ்வுலகைக் கட்டுப் படுத்துபவர். இந்தத்துதியை ஏற்பீர். எங்கள் மக்களையும் இதில் ஈடுபடுத்துவீர். தேவர்கள் விரும்புகிற மேன்மையை அளிப்பீர். நாங்கள் நன் மக்களுடன் உம்மை வேள்விகளில் துதிப்போமாக*
*(ருக்வேதம் 2.24)*

इन्धानो अग्निं वनवद्वनुष्यतः कृतब्रह्मा शूशुवद्रातहव्य इत्।
जातेन जातमति स प्रसर्सृते यंयं युजं कृणुते ब्रह्मणस्पतिः ॥ ४९ ॥

*பிரம்ஹணஸ்பதியின் பொருட்டு வேள்வித்தீயை வளர்ப்பவன், இடையூறு செய்பவர்களை அகற்றி, இறைவனைத் துதித்து அக்கினியில் அவிசை இட்டு தான் வளர்ந்து புத்திரனுடனும் அவனுக்குப் பிறந்தவனுடனுமாக பல்லாண்டுகள் வாழ்கிறான். பிரம்ஹணஸ்பதியோ அவனை நண்பனாக ஏற்றுத் தனக்கு சமமாக்கிக் கொள்கிறார்.*

वीरेभिर्वीरान्वनवद्वनुष्यतो गोभी रयिं पप्रथद्बोधति त्मना।
तोकं च तस्य तनयं च वर्धते यंयं युजं कृणुते ब्रह्मणस्पतिः ॥ ५० ॥

*வீரர்களான தம் சந்ததியினரைக் கொண்டு தன் எதிரிவீரர்களை அழித்து. பசுக்களும் செல்வமும் நிரம்பச் செழிக்கிறான். சுய அறிவால் எல்லாவற்றையும் அறிகிறான். அவனது புதல்வனும் தன் சந்ததியுடன் வளர பிரம்ஹணஸ்பதி அருள்புரிகிறார்.*

सिंधुर्न क्षोदः शिमीवाँ ऋघायतो वृषेव वध्रीरभि वष्ट्योजसा।
अग्नेरिव प्रसितिर्नाह वर्तवे यंयं युजं कृणुते ब्रह्मणस्पतिः ॥ ५१ ॥

ஆறு தன்னைக் கட்டுப்படுத்துகிற கரையை உடைப்பது போல் பிரம்ஹணஸ்பதியை வழிபடுபவன் தன் எதிரிகளைத் தன் வலிவால் உடைத்து, காயடித்த எருதுகளை பொலிகாளை அடக்குவதுபோல் அடக்குகிறான். தீயின் ஜ்வாலை போல் அணுக முடியாதவனாகிறான்.

तस्मा अर्षन्ति दिव्या असश्चतः ससत्वभिः प्रथमो गोषु गच्छति।
अनिभृष्टतविषिर्हन्त्योजसा यंयं युजं कृणुते ब्रह्मणस्पतिः ॥ ५२ ॥

பிரம்ஹணஸ்பதியை வழிபடுபவனுக்கு வானிலிருந்து தடையின்றி மழை பொழிகின்றது. அவன் நல்ல உதவியாளர்களுடன் முன் நின்று செல்வச் செழிப்பைப் பெறுகிறான். குன்றாத வலிவுடன் தன் வலிவால் எதிரியை அடக்குகிறான்.

तस्मा इद्विश्वे धुनयन्त सिंधवोऽच्छिद्रा शर्म दधिरे पुरूणि।
देवानां सुम्ने सुभगः स एधते यंयं युजं कृणुते ब्रह्मणस्पतिः ॥ ५३ ॥

இவனுக்காகவே அனைத்து ஆறுகளும் எக்காலும் பெருகும். குறையற்ற நிலைத்த சுகங்கள் கிட்டும். தெய்வ அருளால் பெற்ற சுகத்துடன் வாழ்வான். (ருக்வேதம் 2.25)

ऋजुरिच्छंसो वनवद्वनुष्यतो देवयन्निददेवयन्तमभ्यसत्।
सुप्रावीरिद्वनवत्पृत्सु दुष्टरं यज्वेदयज्योर्वि भजाति भोजनम्॥ ५४ ॥

பிரம்ஹணஸ்பதியை நேர்மையுடன் வழிபடுபவன். எதிரிகளை அடக்குவான். இறைவனை வழிபடாதவனை வெல்வான். நன்கு இறைவனைத் திருப்தி செய்விப்பவன் போரில் பிறரால் வெல்லப்படமாட்டான். இறைவனை வழிபடாதவனின் செல்வத்தையும் இவனே பங்காகப் பெறுவான்.

यजस्व वीर प्र विहि मनायतो भद्रं मनः कृणुष्व वृत्रतूर्ये।
हविष्कृणुष्व सुभगो यथाससि ब्रह्मणस्पतेरव आ वृणीमहे॥ ५५ ॥

ஆதலால் வீரனே! இறைவனைத்துதிப்பாய். வழிபடுவாய். இடையூறு செய்பவரை எதிர்த்து நிற்பாய். எதிரியுடன் போரிடும்போது மனத்தைத் திடப்படுத்தி மங்களத்தைக்

*கருதுவாய். பிரம்ஹணஸ்பதியைக் குறித்து வேள்வியில் ஹவிஸ் அளிப்பாய். அதனுல் நற்செல்வம் பெறுவாய். உனக்காக வேள்விபுரியும் நாங்கள் இறைவனே உன்னைக் காக்க வேண்டுகிருேம்.*

स इज्जनेन स विशा स जन्मना स पुत्रैर्वाजं भरते धना नृभिः।
देवानां यः पितरमाविवासति श्रद्धामना हविषा ब्रह्मणस्पतिम् ॥ ५६ ॥

*தேவர்களின் தந்தையான பிரம்ஹணஸ்பதியை சிரத்தையுடன் வழிபடுபவன், உயிரினமனைத்திற்கும் தன் மக்களுக்கும் உற்ருர் உறவினருக்கும் போதுமான உணவுப் பெருக்கைப் பெறுவான். மற்ற மக்களுடன் கூடிவாழத்தக்க செல்வம் பெறுவான்.*

यो अस्मै हव्यैर्घृतवद्भिरविधत्प्र तं प्राचा नयति ब्रह्मणस्पतिः।
उरुष्यतीमंहसो रक्षती रिषोहोश्चिदस्मा उरुचक्रिरद्भुतः ॥ ५७ ॥

*பிரம்ஹணஸ்பதிக்கு வேள்வியில் நெய் தளும்புகிற அவிஸைத் தருபவனே இறைவன் நேர்மையுள்ள வழியில் உயர்ந்த பலனைப் பெறச் செய்கிருர். தீச்செயலிலிருந்து காப்பாற்றுகிருர். ஏழ்மையிலிருந்து மீளச் செய்கிருர். விந்தை புரிகிற இறைவன் பேருதவி செய்கிருர். (ருக்வேதம் 2.26)*

तमु ज्येष्ठं नमसा हविर्भिः सुशेवं ब्रह्मणस्पतिं गृणीषे।
इन्द्रं श्लोको महि दैव्यः सिषक्तु यो ब्रह्मणो देवकृतस्य राजा ॥ ५८ ॥

*மிக மிகப் பாராட்டுதலுக்குரிய, ஆனந்தமயரான பிரம்ஹணஸ்பதியை வணங்கி வேள்வித்தீயில் அவிசு தந்துத் துதி செய்கிறேன். அந்தப் பெருமானுக்கு அவருக்குரிய மந்திரம் சொல்லப்படட்டும். அவர் தேவர்களால் வணங்கப்பெற்ற வேதங்களின் அரசர்.*

इयं वां ब्रह्मणस्पते सुवृक्तिर्ब्रह्मेन्द्राय वज्रिणे अकारि।
अविष्टं धियो जिगृतं पुरंधीर्जजस्तमर्यो वनुषामरातीः ॥ ५९ ॥

*பிரம்ஹணஸ்பதியே! வஜ்ரமேந்திய இந்திரனுக்கும் உமக்கும் இந்த மந்திரவடிவிலுள்ள துதி என்னுல் செய்யப்பட்டது. நீங்கள் என் அறிவையும் பணிகளையும்*

*காப்பீர். இன்னம் பல துதிகளையும் தொடர்ந்து கேட்பீர். எமக்கு இடையூறு விளைவிப்பவர்களை அகற்றுவீர். (ருக்வேதம் 7.97)*

चत्तो इतश्चत्तामुतः सर्वा भ्रूणान्यारुषी।
अराय्यं ब्रह्मणस्पते तीक्ष्णशृंगो दृषन्निहि॥ ६० ॥

*அந்த துர்பிக்ஷதேவதையான அலக்ஷ்மீ இவ்வுலகிலோ (இம்மையிலோ) மறு உலகிலோ (மறுமையிலோ) துன்புறுத்தக்கூடாது. கருவிலிருப்பவைகளையும் வெளிப் பட்டவைகளையும் முளையோடு அழிப்பவள். பொருளை வழங்கவும் அவள் இடையூறு. பேரொளிபெற்ற தேவரே! அவளை இங்கிருந்து வெளியேற்றிய பின் உம்மிடத்திற்குச் செல்வீர்.*

अदो यद्दारु प्लवते सिंधोः पारे अपूरुषम्।
तदा रभस्व दुर्हणो तेन गच्छ परस्तरम्॥ ६१ ॥

*ஏ அலக்ஷ்மியே! மனிதஸஞ்சாரமற்ற இடத்தில் வெகுதூரத்தில் கடலில் மிதக்கிற காய்ந்த மரத்தை உன்னிருப் பிடமாக்கிகொள். அதில் ஏறி வேறு தீவிற்குச் செல் (ருக்வேதம் 10-155)*

अग्निर्येन विराजति सूर्यो येन विराजति।
विराज्येन विराजति तेनास्मान् ब्रह्मणस्पते विराज समिधं कुरु॥ ६२ ॥

*பிரம்ஹணஸ்பதியே! அக்கினி எந்த ஒளிபெற்று பிரகாசிக்கிறரோ சூரியன் எந்த ஒளிபெற்று பிரகாசிக்கிறரோ, உலகைப்படைத்தவர் எந்த ஒளியால் விளங்குகிறரோ, அந்த ஒளியை எமக்கு அருளி, வல்லவனுக்குவீர். (ருக் - கில-27)*

---

गणनाथमीडे

हस्तैर्दधानमिभदन्तमथाक्षसूत्रं पाशं सृणिं करमुखे नवमोदकं च।
जायान्वितं वरविभूषमहस्कराभं एकाधिक त्रिकमनुं गणनाथमीडे॥

पाशाङ्कुशे च करयोर्वरदाभये च सन्धारयन्त मतुलाभरणान्विताङ्गम्।
बालार्कभानुमरुणं वसनं दधानं द्वित्र्यक्षरप्रणयिनं गजवक्त्रमीडे॥

## ब्रह्मणस्पतिसूक्तम् ப்ரம்ஹணஸ்பதி ஸூக்தம்

ब्रह्मणस्पते त्वमस्य यन्ता। सूक्तस्य बोधि तनयं च जिन्व।
विश्वं तद्भद्रं यदवन्ति देवाः। बृहद्वदेम विदथे सुवीराः॥ १॥

*பிரம்ஹணஸ்பதியே! நீரே இவ்வுலகைக் கட்டுப்பாட்டுடன் காப்பவர். என் துதியைக் கேட்பீர். என் மக்களைக் காப்பீர். தேவர்களும் காக்கின்ற மங்களத்தைப்பெற நாங்கள் வேள்வியில் இந்த பெருந்துதியைச் செய்கிறோம்.*

स ईं सत्येभिः सखिभिः शुचद्भिः। गोधायसं वि धनसैरतर्दत्।
ब्रह्मणस्पति वृषभिर्वराहैः। घर्मस्वेदेभिर्द्रविणं व्यानट्॥ २॥

*அந்த பிரம்ஹணஸ்பதி நல்ல உண்மையையே பேசுகிற தூய நடத்தையுள்ள வள்ளல்களாகிய நண்பர்களுடன் பூமியை ஆள்கிற அரசனுயினும் இடையூருகி எதிர்த்து அழிப்பார். பூமியில் வெப்பத்தால் ஏற்பட்ட புழுக்கத்தால் ஆவியான நீர் சுமக்கிற மேகத்தின் மூலம் செழிப்பை அவரே அளிக்கிறார்.*

ब्रह्मणस्पतेरभवद्यथा वशम्। सत्यो मन्यु र्महिकर्मा करिष्यतः।
यो गा उदाजत्स दिवे वि चा भजत्। महीव रीतिः शवसा सरत्पृथक्॥ ३॥

*உலகனைத்தையும் தன் வசத்தில் கொண்டு உலகின் பேராளுமையைக் காட்டுகிற இறைவனின் கோபம் வீணாகாதது. வெயிற்காலத்தில் பூமியின் நீரை வானிற்கு ஏற்றி அதை மறுபடி பாகம் பிரித்துப் பூமிக்குத் தருபவர். அவரது இந்த பெரும் உலகாளுமை அவரது வலிமையால் தானே பரவி நிற்கிறது..*

इन्धानो अग्निं वनवद्वनुष्यतः। कृत ब्रह्मा शूशुवद्रातहव्य इत्।
जातेन जातमति सृत्प्रसृं सते। यं यं युजं कृणुते ब्रह्मणस्पतिः॥ ४॥

*பிரம்ஹணஸ்பதி தன்னை வேள்வியால் வழிபடச் செய்கிறார். வேள்விபுரிபவன் தனக்கு இடையூருக இருப்பவரை அழிக்கிறான். மந்திரத்தால் தூய்மை பெற்று அவிஸ் அளித்துத் தானே செழிக்கிறான். தன் ஸந்ததியினரை வளரச்செய்கிறான். (தன் எதிரிகளின் வாழ்வை விடச் சிறந்து வாழ்கிறான்.)*

ब्रह्मणस्पते सुयमस्य विश्वहा। रायः स्याम रथ्यो विवस्वतः।
वीरेषु वीराँ उपपृङ्ग्धि नस्त्वम्। यदीशानो ब्रह्मणा वेषि मे हवम्॥ ५॥

*பிரம்ஹணஸ்பதியே! பேராளுமையுடன் உலகை கட்டுப்படுத்தி, எதிரிகளை மாய்த்து உம் அருளால் செழிப்புடன் வாழ்வோம். எமது மக்களை மற்ற மக்களுடன் கூடச் செய்வீர். ஈசனான நீர் இந்த மந்திரத்துதியைப்பெறுவீர்.*

स इज्जनेन स विशा स जन्मना। स पुत्रै र्वाजं भरते धनानृभिः।
देवानां यः पितरमाविवासति। श्रद्धामना हविषा ब्रह्मणस्पतिम्॥ ६॥

*தேவர்களின் தந்தையான பிரம்ஹணஸ்பதியை சிரத்தையுடன் மனத்தில் கொண்டு, அவிஸ்ஸால் நிறைவு பெறச்செய்பவன், தன் மக்களுடன் உணவு நிறைவுடன் வாழ்வான். அவனை அண்டியவர்களும் சகோதரர்களும் மக்களும் மற்றவர்களும் கூடிச் செல்வச் செழிப்புடன் வாழ்வான். (தைத்திரீய பிராம்ஹணம் 2.8.5)*

उत्तिष्ठ ब्रह्मणस्पते। देवयन्तस्त्वे महे।
उप प्रयन्तु मरुतस्सु दानवः। इन्द्र प्राशूर्भवा सचा॥ ७॥

*பிரம்ஹணஸ்பதியே! நீர் உமது இடமிருந்து புறப்படுவீர். தேவரின் அருகாமையை விரும்புகிற நாங்கள் உம்மை வேண்டுகிறோம். நன்கு வாரிவழங்குகிற மருத் எனும் தேவதைகளும் உம்முடன் வரட்டும். இந்திரனே! ஸோமரஸம் பருக நீரும் உடன் வருவீர்.*

प्रैतु ब्रह्मणस्पतिः। प्रदेव्येतु सूनृता।
अच्छा वीरं नर्यं पंक्तिराधसम्। देवा यज्ञं नयन्तु नः॥ ८॥

*பிரம்ஹணஸ்பதியும் பிரியமும் ஸத்யமுமே உருவான வாக்தேவியும் எங்களை அடையட்டும். இவர்கள் எம் எதிரிகளை விரட்டட்டும். மனிதருக்கு இதமானதும் முறைப்படி அமைந்ததுமான வேள்விப்பணியில் எம்மை ஈடுபடுத்தட்டும்.*

*(தை.ஆர.4.2)*

## श्रीवल्लभेशोपनिषत् ஸ்ரீவல்லபேஶோபநிஷத்

### ओं सहनाववतु इति शान्तिः

### प्रथमोऽध्यायः *முதல் அத்தியாயம்*

अथ भगवन्तं मरीचिं काश्यपः पप्रच्छ। का वा वल्लभा। को वा वल्लभेशः। मरीचिरवदत्। सर्वलोकनायिका ब्रह्मशक्तिः वैनायकी माया सिद्धलक्ष्मीः वल्लभा। तत्पतिः परमात्मा वल्लभेशः। कथं गणपतिरिति। ब्रह्मविष्णुरुद्रादीनां अन्नादिब्रह्मणां महदादितत्त्वानां गणानां पतिः गणपतिः। केन गजानन इति। नराकारा माया गजाकारः पुरुषः। प्रकृतिपुरुषाभेदाकृतिधरो गजाननः।

*பகவான் மரீசியை (அவரது புதல்வர்) கசியபர் ''வல்லபா என்பவள் யார்? வல்லபையின் ஈசன் யார்?'' எனக்கேட்க, மரீசி சொன்னார். ''அனைத்து உலகையும் ஆள்கிற பரம்பொருளின் சக்தியே வல்லபா - விநாயகரின் மாயை, ஸித்தலக்ஷ்மி என்பவள். அவளது பதியான பரமாத்மாவே வல்லபேசர்.*

*அவர் கணபதி என்பது எங்ஙனம்? பிரும்மா விஷ்ணு ருத்திரன் என்று ஒரு கணம், அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம் என்ற கோசங்களின் ஆத்மாக்கள் என ஒரு கணம், மஹத் முதலிய பிரகிருதியிலிருந்து விரிந்த தத்துவங்கள் என்ற கணம், இவ்வாறு பிரிந்த பல கணங்களின் பதியானதால் கணபதி.*

*அவர் ஏன் கஜானனர் (யானைமுகமுள்ளவர்) ஆனார்? பிரகிருதி மாயையாகி மனிதவடிவமும் புருஷன் யானை வடிவமும் பெற்றதும் பிரகிருதியும் புருஷனும் இணைந்த வேறுபாடற்ற நிலை தான் கஜானனர்.*

कथं दशभुज इति। सदात्मनः सूक्ष्मभूतान्यजायन्त। शब्दस्पर्शरूपरसगन्धात्मकानि सूक्ष्मभूतगणानि स्वस्वगुणोपेतसूक्ष्म भूतसमूहदेहजातानि स्थूलसूक्ष्मकारणात्मकानि विश्वानि। अतः पञ्चभूतमयानि विश्वानि। त्रिविधात्मकं विश्वं जगत्। तत्सृष्ट्वा तदनुप्रविश्य सच्च त्यच्चाभवत्। तयोर्योगेन सत्यब्रह्मजगद्ब्रह्माभेदैकाकृतिधरो वल्लभेशः।

कण्ठाधो जगन्मयः। तुरीयं ब्रह्म मूर्धा। द्वयोरभेदः पञ्चमं ब्रह्म। पञ्चमं व्याकृतमव्याकृतमिदं प्रविश्य अन्तर्याम्यभवत्।

*பத்துகையுள்ளவரானது எதனுல்? ஸத்தான ஒரே மூலப்பொருளிலிருந்து ஸூக்ஷ்மமான ஐந்து பூதங்கள் தோன்றின. அவை ஸூக்ஷ்ம நிலேயில் ஒலி, தொடு உணர்ச்சி, நிறம், சுவை, மணம் என்ற சிறப்பம்சங்களுடனிருந்தன. தன் தன் குணங்கள் ஒன்றிணைந்து அவையே ஸ்தூல நிலே பெற்றன. இவை இரண்டிற்கும் காரணமான வாஸநாமய சரீரமும் பூதங்களாலானதே. பஞ்ச பூதங்களாலான உலகம் ஸ்தூலம் ஸூக்ஷ்மம் காரணம் என மூன்று நிலேகளேயடைந்தது. அதனேப்படைத்த ஆத்மா அதனுள் புகுந்து வியாபித்து ஸத்தாகவும் த்யத்தாகவும் (நிலேத்ததாகவும் நிலேயற்றதாகவும்) ஆயிற்று. அவ்விரண்டும் கூடி ஸத்யமான பரம்பொருளும் உலகமும் வேறுபடாத உருப் பெற்றவரே வல்லபேசர். கழுத்துக்குக் கீழே உலகம். ஸ்தூல - ஸூக்ஷ்ம - காரண நிலேக்கு அப்பாற்பட்ட துரீயமான பிரும்மம் தலேயாகும். இவ்விரண்டும் வேறுபாடற்ற நிலே துரீயாதீதமான பரம்பொருள். இந்த ஐந்தாவது நிலேயான பிரும்மமே உருப்பெற்றதும் உருப்பெறாததுமாகக் கலந்த இதனுள் நுழைந்து அந்தர்யாமியாயிற்று.*

व्योम्नः पुष्टिपतिं वायोर्मनसश्च रतिपतिं अग्नेर्गिरिजापतिं अद्भ्यो रमापतिं अन्नात् भूमिपतिं सशक्तिमसृजत्। सशक्तिकानां पञ्चानां अभेदाकृतिमयत्वात् दशबाहुकः। वराहस्य चिह्नं गदा। भूमेः व्रीह्यग्रं, विष्णोः चक्रं, श्रियः पद्मं, रुद्रस्य रुजा, गौर्याः पाशं, रतेः उत्पलं, मारस्य इक्षुकार्मुकं, पुष्टेः बीजापूरं, पुष्टिपतेः विषाणं, एवं दशायुधधरः। दशानां अभेदाकृतिमयः कण्ठाधः वल्लभेशः, दशबाहुकः। गजाकारः तुरीयो मूर्धा। तच्चिह्नं शुण्डा। नानाविधरत्नपूरितरत्नघटः तदायुधं, एकादशायुधराजितैकादशकरः वल्लभेशः।

*ஐந்து மூலபூதங்களில் ஆகாயத்திலிருந்து புஷ்டிபதியையும், வாயுவிடமிருந்தும் மனத்திலிருந்தும் ரதிபதியையும், அக்னிதத்துவத்திலிருந்து கிரிஜாபதியையும், ஜலதத்*

துவத்திலிருந்து ரமாபதியையும், அன்னமெனும் பூமியிலிருந்து பூமிபதியையும் அவரவர் சக்திகளான முறையே புஷ்டி, ரதி, கிரிஜா, ரமா, பூமி இவர்களுடன் படைத்தார். சக்திகளுடன் கூடிய இவ்வைவரின் ஸமஷ்டி வடிவமானதால் பத்துகைகள் உள்ளவரானார். வராஹரின் (பூமிபதியின்) அடையாளம் கதை. பூமிக்கு நெற்கதிர். விஷ்ணு (ரமாபதி) விற்குச் சக்கிரம், ரமாவிற்குத் தாமரை, ருத்திரனுக்கு (கௌரீ பதிக்கு) சூலம், கௌரிக்குப் பாசம், ரதிக்கு நீலோத்பலம், ரதிபதியான மன்மதனுக்கு கரும்புவில். புஷ்டிக்கு மாதுளை, புஷ்டிபதிக்குத் தந்தம், இவ்வாறு பத்து ஆயுதங்கள் ஏந்தியவர். இந்த பத்தும் கூடி இணைந்து வேறுபாடற்ற வடிவம். கழுத்தின் கீழ் வல்லபேசர், பத்துகையுள்ளவர். யானைவடிவிலான தலை துரீயர். அவரது அடையாளம் துதிக்கை. பல்வகை ரத்னங்கள் நிறைந்த குடம் அவரது ஆயுதம். பதினோறு ஆயுதங்கள் ஏந்திய பதினொருகைகள் உள்ளவர் வல்லபேசர்.

केन रक्तवर्ण इति। वर्णेषु आद्यं लोहितं, अयं देवेष्वाद्यत्वात् रक्तवर्णोऽभवत्। केन त्रिणेत्र इति। प्रपञ्चत्रयसाक्षित्वात् त्रिणेत्रः। केन चन्द्रचूड इति। त्रिविधात्मकं जगत् मृतं, तुरीयं अमृतात्मकं, अमृतं चन्द्ररूपकं, तुरीयब्रह्ममस्तकत्वात् चन्द्रचूडः। कथं चिन्तामणिद्वीप पतिरिति। अविद्यात्मकं जगत्, विद्यात्मकं तुरीयं, चित्तप्रकाशकत्वात् चिन्तामणिः। तुरीयस्थितिगत्वात् चिन्तामणिद्वीपपतिरिति। कथं विश्वोत्पत्तिविपत्ति-संस्थितिकर इति। स्वगुणेभ्यः ब्रह्मविष्णुरुद्रान् सृष्ट्वा सृष्ट्यादीनि तेभ्यो दत्वा तैः कारयति। कथं विघ्नराज इति। जगन्मयः प्रतिबन्धात्मकः सद्भावधरः कालः विघ्नः। तन्नियामकोयं विघ्नराज इति॥

ஏன் செந்நிறமுள்ளவரானார்? நிறங்களில் முதலில் தோன்றியது சிகப்பு. இவர் தேவர்களில் முதல்வர், அதனால் செந்நிற முள்ளவரானார்.

ஏன் முக்கண்ணரானார்? ஸ்தூலம் ஸூக்ஷ்மம், காரணம் என்ற மூன்று பிரபஞ்சத்திற்கும் சாட்சியானதால் முக்கண்ணரானார்.

*சந்திரனைச் சூடியவராக ஏன் ஆனார்? ஸ்தூலம் ஸூக்ஷ்மம் காரணம் என்ற மூன்று உலகமும் உயிரற்றது. (மிருதம்) நான் காவது சாகாதது. (அமிருதம்). அமிருதம் சந்திரனை வடிவாகக் கொண்டது. துரீயமான பிரும்மமே மத்தகமானதால் இவர் சந்திரசூடர்.*

*சிந்தாமணித் துவீபத்தின் பதியானது ஏன்? உலகம் அஜ்ஞானத்தின் வடிவம். துரீயம் ஜ்ஞானத்தின் வடிவம். அது சித்தத்தில் ஞானமாக நின்று ஒளியூட்டுவதால் சிந்தாமணி. துரீய நிலையில் எப்போதும் இருப்பதால் சிந்தாமணித் தீவின் அதிபதி.*

*உலகின் படைப்பையும் இருப்பையும் ஒடுக்கத்தையும் செய்பவர் என்பது ஏன்? தன் சிறப்பம்சமாக பிரும்மா விஷ்ணு ருத்திரர் இவர்களைப்படைத்து படைப்பையும் இருப்பையும் ஒடுக்கத்தையும் அவர்களிடத்தில் பொறுப்பாக அளித்து, அவர்கள் மூலம் நிறைவேற்றுகிறார்.*

*விக்கிநராஜர் எதனால்? உலகமாகி நின்று தடைசெய்கிற உருப்பெற்ற காலமே விக்னம் என்பது. அதனைக் கட்டுப்படுத்துகிற இவர் — விக்நராஜர்.*

## द्वितीयोऽध्यायः இரண்டாம் அத்தியாயம்

काश्यपः पप्रच्छ। कथं मे भगिनीपतिरिति। मरीचिराह। ओं तत् सत् इति ब्रह्म त्रिविधं सत्यं ज्ञानमनन्तमिति। चतुर्विधं जगदाधारभूतं, पञ्चमं प्रणवात्मकं, तत्पदं निर्गुणं ज्ञानात्मकं अनन्तं, असिपदं सत् ब्रह्म विभावरहितं स्वसंवेद्यात्मकं, ओंकारं ब्रह्मैव। विशुद्धसत्वमायायाः समष्टिव्यष्टिव्यक्त्यभेदमास्थाय तुरीयपदगो भूत्वा चिन्तामणिद्वीपपतिर भवत्। तच्छक्तिः विशुद्धसत्वप्रधाना माया सिद्धलक्ष्मीः। सा च मे तपसा वल्लभेति नाम्ना मे सुता अभवत्। चिन्तामणिद्वीपपतिः अयं गणपतिमूर्तिधरो भूत्वा विधिना मे पुत्रीं गृहीत्वा वल्लभेशोऽभवत्। ओं ब्रह्मैव वल्लभेश इति।

காசியபர் கேட்டார் - எப்படி என் சகோதரியின் கணவரானுர்? மரீசி சொன்னுர் - ஓம் தத் ஸத் என்றிருந்த பிரும்மம் ஸத்யம் ஜ்ஞானம் அநந்தம் என மூன்று நிலைபெற்றது. உலகிற்கு ஆதாரமாக நான்கு நிலை பெற்றது. ஜாக்ரத், ஸ்வப்நம், ஸுஷுப்தி, துரீயம் என. ஐந்தாவது. பிரணவமாயிற்று. குணமற்ற பேரறிவே வடிவான அழிவற்ற அது(தத்) பரம்பொருள். ஸத்தான மாறுதலற்ற வெளிப்புறக்காட்சி காணுத சித்தத்தால் மட்டும் உணரக் கூடியது (அஸி) ஆத்மா. ஓங்காரம் பிரும்மமே. நிர்குணமான அதுவே சுத்தஸத்வ குணமான மாயை துணைகொண்டு ஸமஷ்டி (தொகை) வியஷ்டி (தனியிருப்பு) என்ற மாறுபாடு கொள்ளாமல் துரீய நிலையில் இருந்து கொண்டு சிந்தாமணித் துவீபத்தின் தலைவராகத் தோன்றினுர்.

அந்த சிந்தாமணி துவீபத்தின் பதியின் சக்தி சுத்தஸத்வகுண மிக்க மாயை, ஸித்தலக்ஷ்மீ என்ற பெயருள்ளது. அவள் என் தவத்தின் பயனுக வல்லபா என்ற பெயரில் என் பெண் ஆனுள். சிந்தாமணி துவீபபதியும் கணபதி வடிவமெடுத்து முறைப்படி என் பெண்ணை மணந்து வல்லபேசரானுர். பிரணவ ஸ்வரூபமான பிரும்மமே வல்லபேசர்.

अयं ब्रह्माण्डे कान् कान् भक्तान् अन्वगृह्णात्। मरीचिराह। चतुर्विध - पुरुषार्थसंयोगाभेदमयं पञ्चमं ब्रह्मभूयं, ब्रह्मभूयपदगो वल्लभेशः। ब्रह्मभूयस्य चत्वारो द्वाराः। धर्मार्थकाममोक्षा इति। धर्मस्य देवता विष्णुः। अर्थस्य रुद्रः। कामस्य शक्तिः। मोक्षस्य सूर्यः। धर्मद्वाररक्षकौ रमानारायणौ। अर्थद्वाररक्षकौ उमामहेश्वरौ। कामद्वारपालकौ रतिकन्दर्पौ। मोक्षद्वारपालकौ महीवराहौ। यज्ञस्कन्दपुष्टीशब्रह्माणः चतुर्णां प्रत्यधिदेवताः। ब्रह्माण्डे चैषां दर्शनं दत्वा अन्वगृह्णादिति। भण्डासुरवधे देव्या वरान् दत्वा विघ्नयन्त्रभेदनार्थं तस्य स्मरणात् आविर्भूय विघ्नयंत्रं भित्वा ललितामन्वगृह्णात् कामेश्वरीं कामदेवताम्। विष्णुतपसा तुष्टः रुद्रनेत्राग्निदग्धां लक्ष्मीं बिल्वेन वृक्षेण उज्जीवयित्वा विष्णवे दत्वा तं अन्वगृह्णात्। पार्वतीतपसा तुष्टः शिवेन सह पार्वतीं संयोज्य तयोः वरानदात्। दक्षिणामूर्तितपसा तुष्टः पार्वतीं तेन समयोजयत्। सरस्वतीं

ब्रह्मणा च। रुद्रनेत्राग्निदग्धं कामं जीवयित्वा रत्या समयोजयत्। भूमिमपि वराहेण। प्रभां सूर्येण। पुष्टिपतितपसा तुष्टः दर्शनं दत्वा सारूप्यमदात्। यज्ञमूर्तितपसा तुष्टः दर्शनं दत्वा ब्रह्मणस्पतियज्ञं स्वप्रियकरं चक्रे। स्कन्दतपसा तुष्टः तारकभेदकशक्तिमदात्। तेन सह वल्लीं समयोजयत्। एवं नाना देवान् मुनीन् वा अन्वगृह्णादिति॥

இவர் பிரும்மாண்டத்தில் எந்த எந்த பக்தருக்கு அருள் புரிந்தார்.? மரீசிசொன்னுர் - நான்குவித புருஷார்த்தங்களாகப் பிரியு முன்னிருந்த நிலை ஐந்தாவதான பிரும்மநிலை. அந்நிலைக்கு நான்கு வழிகள். தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என. தர்மத்தின் தேவதை விஷ்ணு. அர்த்தத்திற்கு ருத்திரர். காமத்திற்கு சக்தி, மோக்ஷத்திற்கு சூரியன்*. தர்மத்தின் வாயிலைக் காப்பவர் ரமாதேவியும் நாராயணனும். அர்த்தத்தின் வாயிலைக் காப்பவர் உமையும் மஹேச்வரனும். காமத்தின் வாயிற்காப்போர் ரதியும் மன்மதனும். மோக்ஷத்தின் வாயிற்காப்போர் பூமியும் வராஹரும். இந்நால்வருக்கும் யஜ்ஞர், ஸ்கந்தர், புஷ்டிபதி, பிரும்மா என்ற நால்வர் பிரத்யதிதேவதைகள். பிரும்மாண்டத்தில் இவர்களுக்குத் தரிசனம் தந்து அனுக்கிரகம் செய்தார்.

பண்டாஸுர ஸம்ஹாரம் நடந்த போது தேவி விரும்பியதைத் தந்தார். விக்நயந்திரத்தை உடைக்க அவரைத் தேவி நினைத்ததையொட்டி உடன் தோன்றி விக்நயந்திரத்தை உடைத்து லலிதா என்ற காமேசுவரிக்கு - காமனின் தேவதைக்கு - உதவினுர். விஷ்ணுவின் தவத்தால் மகிழ்ந்து, ருத்திரனின் கண் நெருப்பால் எரிந்த லக்ஷ்மியை வில்வமரத்தால் உயிரூட்டி, விஷ்ணுவிடம் தந்தருளினுர். பார்வதியின் தவத்தில் மகிழ்ந்து சிவனுடன் பார்வதியைச் சேர்த்து வைத்து வரம் தந்தருளினுர். தக்ஷிணாமூர்த்தியின் தவத்தில் மகிழ்ந்து பார்வதியுடன் கூட்டுவித்தார். ஸரஸ்வதியை பிரும்மாவுடன் சேர்ப்பித்தார். ருத்திரனின்

---

* பஞ்சதேவதாராதனையில் விக்நேசுவரரை முக்கிய தேவதையாக நடுவில் வைத்து வழிபடும்போது நான்கு புருஷார்த்தங்களின் தேவதைகளான ஸூரியன், சிவன், விஷ்ணு, சக்தி நான்கு புறங்களிலும் அமர்ந்திருக்க நடுவில் ஐந்தாமவராக துரீயாதீதராக விநாயகர் என்பது வழக்கு.

கண்நெருப்பால் எரிந்த மன்மதனை உயிர்ப்பித்து ரதியுடன் சேர்ப்பித்தார். பூமியை வராஹருடனும், பிரபா தேவியை ஸூர்யனுடனும் சேர்ப்பித்தார். புஷ்டிபதியின் தவத்தை மெச்சித் தரிசனம் தந்து தன்னுடன் உருவ ஒற்றுமை பெறச் செய்தார். யஜ்ஞ மூர்த்தியின் தவத்தில் மகிழ்ந்து தரிசனம் தந்து பிரம்ஹணஸ்பதிவேள்வியைத் தனக்கு பிரியமானதாக்கினார். கந்தனின் தவத்தில் மகிழ்ந்து தாரகனைத் துளைக்கிற சக்தியாயுதத்தைத் தந்தார். அவருடன் வள்ளியைச் சேரவைத்தார். இவ்வாறு பல தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் உதவினார்.

## तृतीयोऽध्यायः மூன்றாம் அத்தியாயம்

काश्यप उवाच। आत्मविद्यां अनुब्रूहीति। तं होवाच मरीचिः।
गणको ऋषिरस्यास्तु देवता वल्लभेश्वरः।
निचृद्गायत्रीछन्दोऽस्य गं बीजं सर्वकारणम्।
शक्तिःस्यात्प्रणवस्तुर्यः स्वाहा वै कीलकं स्मृतम्।
गामित्यादिदीर्घषट्कः षड्बीजसंयुतः क्रमात्।
षडङ्गश्चेति कथितानि योज्याश्चाकारादिषु।

காசியபர் ஆத்மவித்யையாகிய மஹா கணபதி மந்திரத்தை உபதேசிக்கும்படி வேண்டினார். மரீசி அதனை உபதேசித்தார்.

மஹாகணபதி மந்திரத்திற்கு கணகர் ருஷி. வல்லபேசுவரர் தேவதை. நிச்ருத் காயத்ரீ சந்தஸ். எல்லாவற்றிற்கும் காரண ஒலியான கம் (गं) என்பது பீஜம். நான்காவது பிரணவமான க்லௌம்' (ग्लौं) சக்தி. ஸ்வாஹா என்பது கீலகம். गां गीं गूं गैं गौं गः என்ற ஆறுடன் ओं श्रीं ह्रीं क्लीं ग्लौं गं என்ற கணபதி பீஜம் ஆறையும் வரிசையாகச் சேர்த்து ஷடங்கநியாஸம்.

ध्यानम्

बीजापूरगदेक्षुकार्मुकरुजाचक्राब्जपाशोत्पल-
व्रीहयग्रस्वविषाणरत्नकलशप्रोद्यत्कराम्भोरुहः।

ध्येयो वल्लभया सपद्मकरया श्लिष्टो ज्वलद्भूषया
विश्वोत्पत्तिविपत्तिसंस्थितिकरो विघ्नेश्वरोऽभीष्टदः ॥

तारः श्रीशक्तिकन्दर्पमहीविघ्नेशबीजकाः ।
गणपतेश्च संबुद्धिः वरदद्वितयं ततः ॥

ततः सर्वजनं मे च वशमानयसंयुतः ।
स्वाहया च महामन्त्रो ह्यष्टाविंशतिवर्णकः ॥

चतुर्थं वरवरदसंयुतो मन्त्र उत्तमः ।
कामेशीवरदश्चैव प्रीतिदश्चेति कथ्यते ॥

एवं भेदद्वयेनैव मन्त्रोऽयं परिकीर्तितः ।
संबुद्ध्यन्तमहामन्त्रः ब्रह्मभूयादिसाधकः ॥
अन्यः कामप्रदः प्रोक्तः कामिनां शक्तिमार्गतः ।

தியானம் - மாதுளை, கதை, கரும்புவில், சூலம், சக்கிரம், தாமரை, பாசம், நீலோத்பலம், நெற்கதிர், தந்தம், ரத்னகலசம், இவைகளை ஏந்திய தாமரை போன்ற கைகளும் துதிக்கையும் உள்ளவர், தாமரை ஏந்திய கைகளுடன் ஒளி மிக்க ஆபரணம் பூண்ட வல்லபா தேவியால் அணைக்கப்பட்டவர், உலகின் உற்பத்தி, இருப்பு, லயம் என்ற மூன்றையும் செய்பவர், வேண்டியதை வழங்குபவர். இத்தகைய விக்கினேசுவரர் தியானிக்கத்தக்கவர்.'

ओं श्रीं ह्रीं क्लीं ग्लौं गं गणपते वरद वरद सर्वजनं मे वशमानय स्वाहा என்ற மந்திரம் 28 அட்சரங்கள் கொண்டது. பிரும்ம நிலை தரும். பிரும்மதேஜஸ் வளர்க்கும். மற்றொருமந்திரம் गणपतये वरवरद என்ற மாற்றத்துடன் உண்டு. காமேசுவரிக்கு வரமளித்தது இது. சக்திவழிபாட்டில் பெரிதும் உதவக்கூடியது.

काश्यप उवाच—
नानाकामसिद्ध्यै मन्त्रानस्य ब्रूहीति ॥

मरीचिराह—

श्रीविद्यागणनाथस्य योगः कामप्रपूरकः।
कएईलह्रीं षड्बीजाः प्रथमः खण्ड उच्यते॥

हसकहलह्रीं गणपते च वरदद्वितयम्।
द्वितीयखण्डश्चेति सकलह्रीं ततः परम्॥

सर्वजनं मे वशमानय स्वाहा महामनुः।
त्रिचत्वारिंशद्वर्णमनुः तद्यन्त्रे पूज्य उच्यते॥

*பல்வேறு விருப்பங்களை நிறைவேற்றுகிற மந்திரங்கள் பற்றிக் காசியபர் கேட்க மரீசி உபதேசித்தார்.*

*ஸ்ரீ வித்யா கணநாத மந்திரம் -* कएईल ह्रीं ओं श्रीं ह्रीं क्लीं ग्लौं गं *என்பது முதல் கண்டம்.* हसकहल ह्रीं गणपते वरद वरद *என்பது 2வது கண்டம்.* सकलह्रीं सर्वजनं मे वशमानय स्वाहा *என்பது மூன்றாவது கண்டம். 43 எழுத்துக்களுள்ள இந்தமந்திரம் ஸ்ரீ வித்யா யந்திரத்தில் வழிபடவேண்டியது.*

गायत्रीगणनाथस्य संयोगो ब्रह्मदायकः।
भुक्तिमुक्तिप्रदो ब्रह्मतेजःपुंजः प्रमोददः॥

गायत्र्याः प्रथमः पादः प्रणवेन समन्वितः।
वल्लभेशस्य षड्बीजैः प्रथमः खण्ड उच्यते॥

ततो द्वितीयपादस्तु संबुद्धिवरदद्वयम्।
द्वितीयखण्ड इति च तृतीयचरणस्ततः॥

वल्लभेशशिष्टभागः तृतीयः खण्ड उच्यते।
त्रिपञ्चाशद्वर्णमंत्रः ब्रह्मतेजःप्रदायकः॥

भर्गविद्येति कथिता विद्येयं वेदमार्गिभिः।
एकाक्षरषडर्णाभ्यां पुटिता पूर्वपृष्ठयोः॥

गायत्री त्रिपदा देवी भर्गविद्याऽपरा स्मृता।

*காயத்ரீ கணநாத மந்திரம்* ओं तत्सवितुर्वरेण्यं(णियं), ओं श्रीं ह्रीं क्लीं ग्लौं गं *என்பது முதல் கண்டம்.* भर्गो देवस्य धीमहि

गणपते वरद वरद என இரண்டாம் கண்டம். धियो यो नः प्रचोदयात् सर्वजनं मे वशमानय स्वाहा என்பது மூன்றும் கண்டம். 53 எழுத்துக்கள் கொண்ட மந்திரமது. காயத்ரியும் கணபதிமந்திரமும் சேர்ந்தது. பிரும்மதேஜஸ், போகம் மோக்ஷம், ஆனந்தம் தரும். இது பர்க்கவித்யை எனப்படும்.

மற்றுமொருமுறை - गं ओं श्रीं ह्रीं क्लीं ग्लौं गं - காயத்ரீ, गं ओं श्रीं ह्रीं क्लीं ग्लौं गं என்பது.

बालागणेशसंयोगः श्रीविद्याकामदायकः ॥

प्रथमं वाग्भवं पश्चात् षड्बीजाः कामबीजकम् ।
संबुद्धिश्च गणपतेः वरदद्वितयं ततः ॥

सौः पश्चात् शिष्टमन्त्रस्स्याद्बालागणपतेर्मनुः ।
नीलकण्ठस्य त्र्यक्षर्याः योगेनैव विषान्तकः ॥

वशमानय स्थानेषु विषं नाशय चोच्यते ।
तारो ज्योंसः सःज्यों सूर्यवस्वर्णश्च ॥

ततः परं षड्बीजाश्च गणेशस्य संबुद्धिः ।
वरदद्वयं ज्यों सः सर्वरोगान् हरहर सः ज्यों स्वाहया मनुः ॥

सर्वरोगहरो मन्त्रः गणेशस्य प्रविस्तृतः ।
अघोरगणनाथस्य संयोगः शत्रुनाशकः ॥

कृत्याभिचारशमनः सर्वाभीष्टप्रदायकः ।
ओं गं गः प्रथमस्फुरादि च वमान्तकम् ॥

षड्बीजा वरदान्तं च साध्यं च स्वाहया मनुः ।
खण्डत्रयेषु गणपतेः ऐंब्लूं योज्य ससाधकम् ॥

विद्यां देहीति स्वाहया च सर्वविद्याप्रदायकः ।
वश्यादिषट्कर्मसिद्ध्यै तत्तत्बीजेन साध्यतः ॥

जपात्तत्तत्सिद्धिदाता वल्लभेशो घृणानिधिः ।
सर्वसंपत् समृध्यै च श्रीधराशक्तिबीजकान् ॥

खण्डत्रयेषु संयोज्य संपदं देहि साध्यकम्।
संयोज्य च जपः कार्यः संपद्वृद्ध्यै क्रमेण च॥
एवं तस्य मन्त्रभेदाः कथिताः तत्प्रसादतः॥

பாலா கணேசமந்திரம் - ऐं ओं श्रीं ह्रीं क्लीं ग्लौं गं क्लीं गणपते वरद वरद सौः सर्वजनं मे वशमानय स्वाहा *என்பது செல்வமும் கல்வியும் இஷ்ட பூர்த்தியும் தரவல்லது.*

நீலகண்டகணேச மந்திரம் - ओं प्रों ओं श्रीं ह्रीं क्लीं ग्लौं गं नूं (त्रीं) गणपते वरद वरद, ठः (ठं) विषं नाशय स्वाहा *என்று அமைந்தது. விஷபீடை நீக்கும்.*

ஸூர்ய - கணேசமந்திரம் - ओं ज्यों सः सः ज्यों ओं घृणिः सूर्य आदित्य ओं ओं श्रीं ह्रीं क्लीं ग्लौं गं गणपते वरद वरद ज्यों सः सर्वरोगान् हर हर सः ज्यों स्वाहा *என. நோய் நீங்க நல்லது.*

அகோரகணநாதமந்திரம் - *செய்வினை அபிசாரம் நீங்க, விரும்பியதைப் பெற, எதிரியை அடக்க ஏற்றது.* ओं गं गः ओं ह्रीं स्फुर स्फुर प्रस्फुर प्रस्फुर घोर घोरतनुरूप चट चट प्रचट प्रचट कह कह वम वम ओं श्रीं ह्रीं क्लीं ग्लौं गं गणपते वरद वरद बन्ध बन्ध घातय घातय हुं फट् स्वाहा *என்பது*

வித்யாநாயகமந்திரம் - ऐं ब्लूं ओं श्रीं ह्रीं क्लीं ग्लौं गं ऐं ब्लूं गणपते वरद वरद ऐं ब्लूं अस्मै (मम) विद्यां देहि स्वाहा *என்பது கல்வியைத் தரும்.*

*வசியம் முதலிய ஆறு கர்மங்களிலும் அததற்குள்ள பீஜாக்ஷரத்துடன் விரும்பியதை வேண்ட கருணைநிதியான வல்லபேசர் அருள் புரிவார்.*

*ஸம்பத்துகள் கூட* श्रीं ग्लौं ह्रीं *என்ற பீஜங்களை மூன்று கண்டங்களிலும் சேர்த்து* संपदं देहि *என்று வேண்ட செல்வம் பெருகும். இப்படிப் பல்வேறு மந்திரங்கள் உபதேசிக்கப்பட்டுள்ளன.*

## तुरीयोऽध्यायः நான்காம் அத்தியாயம்

काश्यप उवाच। तदाराधनविधिं मह्यं ब्रूहीति। तं होवाच गाणेशो मरीचिः। शैव वैष्णव सौर शाक्त गाणेशैरप्युपास्योयं वल्लभेशः॥ सिन्दूररक्तचन्दनगणेशाक्षगणपदचिह्नानि। तेषां धारणं कृत्वा जप्योऽयं पूजनीयश्च। उषःकालो गणेशस्यातिप्रियंकरः। अपराह्णार्धरात्रिकालं विना अन्यकालेषु जपः कार्यः। यजनं च कवचहृदयावृतिस्तुति सहस्रनामजपानि। मन्त्रसिद्धिसाधकहोमतर्पणमार्जनान्यपि तस्य तोषदानि॥ गणेशाग्नौ होमः एको वा ऋङ्मन्त्राभ्यां कार्यः। शतसहस्रसंख्याक्रमेण वा काले, सहस्रजप एव वरः। स्वदन्तार्कमूलविग्रहे यन्त्रे शोणादिशिलायां च यजनं शस्यते। अभिषेकाय शोणशिला। लोकगणसिद्ध्यै यन्त्रं, देवताविग्रहसिद्ध्यै बिम्बं, पुरुषसूक्त ब्रह्मणस्पतिसूक्त ऋङ्मन्त्रेषु चैकेन नित्यं यजनं, शुक्रवारचतुर्थ्यौ प्रियंकरौ।

*காசியபர் கணபதியின் வழிபாட்டு முறை பற்றிக் கேட்க கணேசபக்தரான மரீசி கூறுகிறார்.*

*சைவர், வைஷ்ணவர், ஸௌரர், சாக்தர், காணேசர் என்றனைவராலும் வல்லபேசர் வழிபடத்தக்கவர். ஸிந்தூரம் செஞ்சந்தனம், கணேச அக்ஷமாலை கணேசரின் திருவடிச் சின்னங்கள் இவைகளைத்தரித்து ஜபமும் வழிபாடும் செய்யத்தக்கது. விடியற்காலை கணபதிக்கு மிகவும் பிரிய மளிப்பது. பிற்பகல், நள்ளிரவு தவிர மற்ற வேளைகளில் ஜபம் செய்யலாம். கவசம் ஹ்ருதயம் ஆவரண ஸ்தோத்ரம், ஸஹஸ்ரநாமஸ்துதி மந்திரஜபம் இவை அவருக்கான வழிபாடு. மந்திரஸித்தியைத் தருகிற ஹோமம் தர்பணம் மற்றும் மார்ஜனம் திருப்தி தருபவை. கணேசாக்னியில் வேதருக்காலும் மந்திரத்தாலும் ஒரு தடவை ஹோமமோ, நேரும்போது நூறுதடவை அல்லது ஆயிரம் தடவை ஹோமமோ நல்லது. ஆயிரம் தடவை ஜபம் செய்வது நல்லது.*

*யானை தந்தத்தால் அல்லது வெள்ளெருக்குவேர் இவற்றாலான விக்ரஹம், யந்திரம், சோணாநதியில்*

கிடைக்கின்ற சோணபத்ர சிலை இவற்றில் வழிபடலாம். அபிஷேகத்திற்கு சோண பத்ர சிலை, மக்கள் கூட்டமாகச்சேர யந்திரம், தேவதையின் மூர்த்தி மனத்தில் பதிய விக்ரகம், புருஷஸூக்தம், பிரம்ஹணஸ்பதி ஸூக்தம், ருக்மந்திரங்களில் ஒன்றால் தினமும் வழிபடுதல், வெள்ளிக்கிழமை, சதுர்த்தி திதிகளில் வழிபாடு இவை பிரீதியளிப்பவை.

बिन्दुत्रिकोणषट्कोणाष्टदलषोडशदलवृत्तत्रयभूपुरत्रययुतो यंत्रः। बिन्दौ तारो बीजं, त्रिकोणान्तः चत्वारो बीजाः। षट्कोणेषु षड्बीजाः। गामित्यादयः सन्धिषु। दळेषु शिष्टवर्णाः। अग्रेषु गायत्री। षोडशदळेषु ऋङ्मन्त्राः। मातृकाबीजपाशाङ्कुशा वृत्तेषु। भूपुरेषु यन्त्राङ्गानि। रमा-रमेशोमामहेशरतिकन्दर्पमहीवराहाः प्रथमावृतिदेवताः। आमोदप्रमोद-सुमुखदुर्मुखाविघ्नविघ्नकर्तारः द्वितीयावृतेः। अङ्गदेवतास्तृतीयस्य॥ तुरीयस्य मातरः, पञ्चमस्य दिगीशाः। तीव्राज्वालिन्याद्याः पीठशक्तयः॥ शूराद्याः द्वारदेवताः। आवाहनासनाद्युपचारैः कार्यं नित्यार्चनम्।

பிந்து, திரிகோணம், ஷட்கோணம், அஷ்டதளம், ஷோடசதளம், மூன்று விருத்தங்கள், மூன்று பூபுரங்கள் இவை கொண்டது யந்திரம். பிந்துவில் ओं गं திரிகோணத்தில் श्रीं ह्रीं क्लीं ग्लौं என்ற நான்கு பீஜங்கள். ஷட்கோணத்தில் ஆறு பீஜங்கள், இடையே ஸந்திகளில் காம் கீம் முதலிய ஆறு, எட்டு தளங்களின் நடுவே மந்திரத்தின் மற்ற வர்ணங்கள். தளங்களின் நுனிகளில் கணேச காயத்ரீ, பதினாறு தளங்களில் கணாநாம் த்வா என்ற ருக்மந்திரங்கள். விருத்தங்களில் மாத்ருகாக்ஷரங்கள். பாசாக்ஷரம் அங்குசாக்ஷரம். பூபுரங்களில் யந்திரங்களுக்கு அங்கமான அக்ஷரங்கள். முதலாவரணத்தில் ரமா - ரமாபதி, உமா - மஹேசர், ரதி-மன்மதர், பூமி - வராஹர் என்ற நான்கு தம்பதிகள், ஆமோதர், பிரமோதர், ஸுமுகர், துர்முகர், அவிக்நர், விக்நகர்தா இவர்கள் இரண்டாவது ஆவரணத்தில். ஷடங்கதேவதைகள் மூன்றாவது ஆவரணத்தில். பிராம்ஹீ முதலிய எட்டு மாதாக்கள் நான்காவது ஆவரணத்தில். திக்பதிகள் ஐந்தாவதில். தீவ்ரா ஜ்வாலினி முதலிய பீட சக்திகள், சூரர் முதலிய துவாரதேவதைகள். இவர்களுடன்,

மஹாகணபதியை ஆஸனம் முதலிய உபசாரங்களால் தினமும் வழிபடவேண்டும்[1].

गणेशार्चनपरः सर्वविघ्नैः प्रमुच्यते। सर्वसिद्धिं लभते। धर्मार्थकाममोक्षब्रह्मभूयानि लभते इति। य इमां वल्लभेशोपनिषदमधीते स सर्वविघ्नात् प्रमुच्यते। सर्वाभीष्टं लभते। ब्रह्म प्राप्नोति। ब्रह्म प्राप्नोतीत्युपनिषत्॥

கணேசரை வழிபடுபவர் இடையூறுகளகற்றப் பெறுவர். எல்லா சித்திகளையும் பெறுவர், தர்மம் அர்த்தம் காமம் மோக்ஷம் பிரும்மபாவம் பெறுவர். வல்லபேசரின் உபநிஷத்தைப் படிப்பவர் இடையூறு நீங்கப்பெறுவர். விரும்பியதைப் பெறுவர், பிரும்ம நிலைபெறுவர். பிரும்மநிலை பெறுவர். இவ்வாறு உபநிஷத் சொல்கிறது.

(1. மாத்ருகாக்ஷரங்கள் अं आं इं ईं என்று தொடங்கி लं क्षं வரை. பாசாக்ஷரம் - आं என்பது. அங்குசாக்ஷரம் क्रों என்பது. ஷடங்கதேவதைகள் - ஹ்ருதயம், ஶிரஸ், ஶிகா, கவசம், நேத்ரம் அஸ்திரம் கணேசமந்திரத்தின் பீஜாக்ஷரங்களுடன். (ओं गां, श्रीं गीं ह्रीं गूं क्लीं गैं ग्लौं गौं गं गः என). எட்டு மாதாக்கள் பிராம்ஹீ, மாஹேசுவரீ, கௌமாரீ, வைஷ்ணவீ, வாராஹீ, மாஹேந்திரீ, சாமுண்டா மஹாலக்ஷ்மீ என. திக்பதிகள் இந்திரன், அக்னி, யமன், நிர்ருதி, வருணன், வாயு, ஸோமன் (குபேரன்), ஈசானன் என. தீவ்ரா, ஜ்வாலினீ, நந்தா. போகதா காமரூபிணீ, உக்ரா, தேஜோவதீ, ஸத்யா, விக்க்நநாசினீ என. துவாரதேவதைகள் - 8. சூரர், மஹா சூரர், பலர், ப்ரபலர், மஹாவீரர், வீரர் ஜயர், விஜயர் என.)

---

उच्छिष्टगणेश रक्ष

रक्ताभमब्जनिलयं सृणिपाशदन्तान् हस्तेषु मोदकशराव मथावहन्तम्।
एकाधिक त्रिदशकाक्षरगं त्रिणेत्रं उच्छिष्टविघ्ननृपतिं प्रणमामि मत्तम्॥
अङ्गा ङ्गनाभगमुखाकलिताग्रशुण्डं पाशाङ्कुशांश्च चषकं पिशितं धरन्तम्।
आलिङ्गितोरुवनितं वरलोहिताङ्गं षट्त्रिंशदक्षरमयं गणनाथमीडे॥

# गणेशपूर्वतापिन्युनिषत्

## கணேசபூர்வதாபினீ உபநிஷத்

## (वरद पूर्वतापिनी) (வரத பூர்வதாபினீ)

### प्रथमोपनिषत् - முதல் உபநிஷத்

ॐ नमो वरदाय विघ्नहर्त्रे॥ अथातो ब्रह्मोपनिषदं व्याख्यास्यामः। ब्रह्मा देवानां सवितुः कवीनामृषिर्विप्राणां महिषो मृगाणाम्। धाता वसूनां सुरभिः सृजानां नमो ब्रह्मणेऽथर्वपुत्राय मीढुषे॥ धाता देवानां प्रथमं हि चेतो मनो वनानीव मनसाऽकल्पयद्यः। नमो ब्रह्मणे ब्रह्मपुत्राय तुभ्यं ज्येष्ठायाथर्वपुत्राय धन्विने॥ १॥

*வேண்டுவதை வழங்குபவரும் தடைகளை நீக்குபவருமான பெருமானுக்கு நமஸ்காரம். கணேசர் என்ற பரம்பொருள் பற்றிய உபநிடதக்கருத்துகளை விளக்குவோம். தேவர்களுக்குள்ளே பிரும்மாவாக, கவிகளுக்கு (பரந்த நோக்குள்ளவர்களுக்கு) இடையே ஸூர்யனாக, அந்தணர்களுக்குள் ருஷியாக, விலங்குகளுக்கிடையே சிங்கமாக, வஸுக்களிடையே தாதாவாக, பால்தருகிற பிராணிகளிடையே காமதேனுப் பசுவாக (சிறப்பு மிக்கதாக விளங்கும்) பிரும்மத்திற்கு நமஸ்காரம். பிரும்மத்தின் முதல்படைப்பான உலகைப்படைக்க விருக்கின்ற பிரும்மாவிற்கும் நமஸ்காரம். பிரும்மா முன்னதாக தேவதாசக்தி துலங்குகிற இந்திரியங்களைப் படைக்குமுன் சித்தத்தையும் மனத்தையும் படைத்தார். அவருக்கு நமஸ்காரம். அவரது புத்திரராகிய அதர்வருஷிக்கும் தந்வி என்ற (வில்லேந்திய) அவரது புதல்வருக்கும் நமஸ்காரம்.*

ॐ प्रजापतिः प्रजा असृजत। ताः सृष्टा अब्रुवन् कथमन्नाद्या अभवन्निति। स त्रेधा व्यभजद्भूर्भुवः स्वरिति। स तपोऽतप्यत। स ब्रह्मा स विष्णुः स शिवः स प्रजापतिः सेन्द्रः सोऽग्निः समभवत्। स तूष्णीं मनसा ध्यायन् कथमिमेऽन्नाद्याः स्युरिति। सोऽपश्यदा त्मनाऽऽत्मानं गजरूपधरं देवं शशिवर्णं चतुर्भुजं यतो वा इमानि भूतानि

जायन्ते यतो वायन्ति यत्रैव यन्ति च। तदेतदक्षरं परं ब्रह्म। एतस्माज्जायते प्राणो मनः सर्वेन्द्रियाणि च। खं वायुरापो ज्योतिः पृथिवी विश्वस्य धारिणी। पुरुष एवेदं विश्वं तपो ब्रह्म परामृतमिति॥ २॥

*பிரஜாபதி (உலகைப்படைத்தவர்) மக்களைப்படைத்தார். படைக்கப்பெற்ற மக்கள் "நாங்கள் எப்படி உணவைப்பெறுவோம்" என அவரிடம் கேட்டனர். அவர் உலகை பூ: (பூலோகம்) புவ: (புவர் லோகம்) ஸுவ: (ஸுவர்லோகம்) என மூன்றாகப்பிரித்தார். தியானத்தில் அமர்ந்த அவர், தானே மும்மூர்த்திகளாக, பிரஜாபதியாக இந்திரனாக அக்கினியாக ஆனார். மக்களை உணவு பெறச் செய்வது எப்படி எனச் சிந்தித்தார். தியானத்தில் தன்னுள்ளே பரமாத்மாவை யானைமுகத்துடன் சந்திரனின் ஒளிகொண்டு நான்குகைகளுடன் கண்டார். அவரிடமிருந்தே உலகம் தோன்றுவதும் வாழ்வதும் மறைவதும் கண்டார். இது தான் தேய்வுறாத பரம்பொருள். இதிலிருந்து தான் பிராணனும் மனமும் எல்லாப்பொறிகளும், ஆகாயம் வாயு ஜலம் நெருப்பு உலகை உருவாக்குகிற பூமி என்ற பூதங்களும் தோன்றுகின்றன. பரம்பொருள் தானே உலகமாகியுள்ளார். அவரே உலகம் தோன்றச் சிந்தித்தவர், அழியும் உலகமாகத் தோன்றிய பின்னரும் பரம்பொருள், அழியா மூலப்பொருளானவர். (2)*

सोऽस्तुवत नमो ब्रह्मणे नमो ब्राह्मणेभ्यो नमो वेदेभ्यो नमो देवेभ्यो नम ऋषिभ्यो नमः कुल्येभ्यः प्रकुल्येभ्यो नमः सवित्रे प्रसवित्रे नमो भोज्याय प्रकृष्टाय कपर्दिने चक्राय चक्रधरायान्नायान्नपतये शिवाय सदाशिवाय तुर्याय तुरीयाय भूर्भुवःस्वःपते रायस्पते वाजिपते गोपते ऋग्यजुःसामाथर्वाङ्गिरःपते नमो ब्रह्मपुत्रायेति॥ ३॥

*அவர் பிரும்மத்தைத் துதித்தார். பிரும்மத்திற்கு நமஸ்காரம். பிரும்மத்தை உணர்ந்தவருக்கு நமஸ்காரம். வேதங்களுக்கும் அவற்றால் உணர்த்தப்படுகிற தேவர்களுக்கும் அவர்களைக் காண்கிற ருஷிகளுக்கும், அவர்களது குலத்தில் தோன்றிய வர்களுக்கும், குலங்களில் சிறந்தவர்களுக்கும் நமஸ்காரம். உலகைத் தோற்றுவிக்கிற சூர்யன், அவரது ஒளியால்*

*சத்துமிக்கதான உணவுதானியம், சடையுள்ள சூரியமண்டலத்திலுள்ள படைப்புப்பணிபுரிகிற சிவபெருமான், ஸுதர்சன சக்கிரம், சக்கிரமேந்திய நாராயணன், உணவு, உணவைத்தருபவர், வாழவைக்கிற சிவபெருமான், அனுக்கிரஹப் பணிபுரிகிற ஸதாசிவர், இவர்கள் வடிவிலிருப்பவர். விழிப்பு கனவு தூக்கம் என்ற மூன்று நிலைகளுக்கப்பாற்பட்ட துரீய நிலையில் உணரப் பெறுபவர், ஸ்தூலம் ஸூக்ஷ்மம் காரணம் என்ற மூன்று சரீரங்களுக்கப் பாற்பட்டவராயிருப்பவர், பூலோகம் புவர்லோகம், ஸுவர்லோகம் என்ற மூவுலகிற்கும் பதி, செல்வத்தின் அதிபதி, அன்னம் வழங்குபவரின் பதி, பசுக்களின் பதி, ருக், யஜுஸ், ஸாமம், அதர்வம் என்ற நான்குவேதங்களின் பதி, பிரும்மாவின் தியானத்தில் வெளிப்பட்ட அந்த கஜானனர் இவர்களுக்கு நமஸ்காரம் (3)*

सोऽब्रवीद्वरदोऽस्म्यहमिति। स प्रजापतिरब्रवीत्कथमिमेऽन्नाद्याः स्युरिति। स होवाच ब्रह्मपुत्रस्तपस्तेपे सिद्धक्षेत्रे महायशाः। स सर्वस्य वक्ता सर्वस्य ज्ञातासीति। स होवाच तपस्यन्तं सिद्धारण्ये भृगुपुत्रं पृच्छध्वमिति। ते प्रत्याययुः। स होवाच किमेतदिति। ते होचुः कथं वयमन्नाद्या भवाम इति। स तूष्णीं मनसा ध्यायन् कथमिमेऽन्नाद्याः स्युरिति। स एतमानुष्टुभं मन्त्रराजमपश्यत्। यदिदं किञ्च सर्वमसृजत। तस्मात्सर्वमानुष्टुभमित्याचक्षते यदिदं किञ्च। अनुष्टुभा वा इमानि भूतानि जायन्ते। अनुष्टुभा जातानि जीवन्त्यनुष्टुभं प्रयन्त्यभिसंविशन्ति। तस्यैषा भवति-अनुष्टुप्प्रथमा भवत्यनुष्टुबुत्तमा भवति। वाग्वा अनुष्टुब्वाचैव प्रयन्ति वाचैवोद्यन्ति। परमा वा एषा छन्दसां यदनुष्टुप्। सर्वमनुष्टुप्। एतं मन्त्रराजं यः पश्यति स पश्यति। स भुक्तिं मुक्तिं च विन्दति। तेन सर्वज्ञानं भवति। तदेतन्निदर्शनं भवति - एको देवः प्रापको यो वसूनां श्रिया जुष्टः सर्वतोभद्र एषः। मायादेवो बलगहनो ब्रह्मारातीस्तं देवमीडे दक्षिणास्यम्। आ तू न इन्द्र क्षुमन्तं चित्रं ग्राभं सङ्गृभाय। महाहस्ती दक्षिणेन।। इति सहस्रकृत्वस्तुष्टाव।। ४।।

துதியை ஏற்ற கணேசப் பெருமான் 'வேண்டுவதைத் தருபவன் நான்' எனக் கூறினுர். பிரஜாபதி ''இம்மக்கள் எப்படி உணவைப் பெறுவர்'' எனக் கேட்டார். அவர் சொன்னுர். கங்காதீரத்தில் ஸித்தக்ஷேத்திரத்தில் ஒரு அந்தணன் தவம் புரிகிருர். பெரும்புகழுள்ளவர். அவர் எல்லாமறிந்தவர், அந்த பிருகுவின் புதல்வரான சுக்ரரிடம் மக்கள் இது பற்றிக்கேட்டுத் தெரிந்து கொள்ளட்டும்'' என்ருர். மக்கள் பார்க்கவரை அவ்வாறே அணுகி உணவைப் பெறுவதெப்படி என வினவினர். பார்க்கவர் உணவு பெறும் வகைபற்றித் தியானத்தில் அமர்ந்து கண்டார். வக்ரதுண்டரின் அனுஷ்டுப் சந்தஸில் அமைந்த சிறந்த மந்திரமே இதற்கு உபாயமெனக் கண்டார். இந்த மந்திரத்தின் உதவிகொண்டே உலகம் படைக் கப்பட்டது. உலகம் தோன்றுவதும் வாழ்வதும் மறைவதும் இதன் வலிவால் தான் நடைபெறுகிறது. ஒலியின் முதல் வெளிப்பாடு அனுஷ்டுப் சந்தஸ்தான். இதுவே சிறந்த சந்தஸூம் ஆகும். ஒலியின் வெளிப்பாடு வாக்கு ஆகும். வாக்கு அனுஷ்டுப் சந்தஸ் தான். வாக்கால் தான் உலகம் விளக்கம் பெறுவதும் நிலைப்பதும் மறைவதும். அதனுல் சந்தஸ்களில் இது சிறந்தது. கணேசரது மந்திரமும் இதில் அமைந்தது. மந்திர ராஜத்தை கண்டவனே பார்ப்பான். அவன் உலகபோகத்தையும் முக்தியையும் ஒருங்கே பெறுவான். முற்றிலும் அறிந்தவனுவான். அதனைவிளக்குகிற மந்திரங்கள் இரண்டு ('ஏகோ தேவ:' என்றும் ஆதுந: என்றும்) ''அவர் ஒருவரே தேவன். அவரே செல்வச் செழிப்பைத்தருபவர். சீரும் சிறப்பும் மிக்கவர். எங்கும் எதிலும் மங்களமானவர். மாயையால் விந்தைப்பொருளாக உணரப்பெறுபவர். ஆழம் உணரப்பெருத வலிவு மிக்கவர், அவரே பரம்பொருள். அந்த வலது புறம் சாய்ந்த முகமுடைய (வலத்தில் துதிக்கையுள்ள) தேவனைத் துதிக்கிறேன்.'' ''தேவர் பெருமானே! நாங்கள் அளிக்கின்ற கரும்பாக இனிக்கிறதும் (கரும்புடன் கூடியதும்) பலவகைப்பட்டதும் ஏற்றுக்கொள்ளுமளவு (வேள்வித்தீயில்) தரப்பெறுவதுமான அவிஸ்ஸை பெரும் துதிக்கையுள்ள நீர் ஏற்பீர்.'' இந்த இருமந்திரங்களாலும் ஆயிரம் தடவைதுதித்தார்.

अथापश्यन्महादेवं श्रिया जुष्टं मदोत्कटम्। सनकादिमहायोगिवेदविद्भिरुपासितम्॥ द्रुहिणादिमदेवेशषट्पदालिविराजितम्॥ लसत्कर्णं महादेवं गजरूपधरं शिवम्॥ स होवाच वरदोऽस्मीति। स तूष्णीं मनसा वव्रे। स तथेति होवाच। तदेष श्लोकः — स संस्तुतो दैवतदेवसूनुः सुतं भृगोर्वाक्यमुवाच तुष्टः। अवेहि मां भार्गव वक्रतुण्डमनाथनाथं त्रिगुणात्मकं शिवम्॥ अथ तस्य षडङ्गानि प्रादुर्बभूवुः। स होवाच जपध्वं आनुष्टुभं मन्त्रराजं षट्पदं सषडक्षरम्। इति यो जपति स भूतिमान् भवतीति यूयमन्नाद्या भवेयुरिति। तदेतन्निदर्शनम् — गणानां त्वा गणनाथं सुरेन्द्रं कविं कवीनामतिमेधविग्रहम्। ज्येष्ठराजं वृषभं केतुमेकं सा नः शृण्वन्नूतिभिः सीद शश्वत्॥ ५॥

*துதியை ஏற்றுச் சீரும் சிறப்பும் மிக்கவராக, மதத்தால் தன் நிலை அடங்காதவராக, ஸநகாதியோகியர் புடைசூழ, பிரும் மாமுதலிய பெருந்தேவர்கள் வண்டுபோல் மொய்க்க, பெரும் காதும் யானைவடிவும் கொண்ட சிவனே உருவான பெருந்தேவன் அங்கு தோன்றினார். அவர் வேண்டுவதைத் தருபவன் நான் எனத் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டார். பார்க்கவமுனிவர் மனத்தளவில் வேண்டிக் கொண்டதும் அப்படியே ஆகட்டும் எனப் பெருமான் கூறினார். ''பார்க்கவரே! எளியவர்களுக்கு அருந்துணையும் முக்குணவடிவான சிவப்பொருளுமான வக்ரதுண்டர் (வலத்தில் வளைந்த துதிக்கையுள்ளவர்) நானே! என்றார். அவரது மந்திரம் ஆறுபதங்களும் ஆறு அக்ஷரங்களும் கொண்டது. இதனை இவ்வாறு ஜபிப்பவர் சீரும் சிறப்பும் உணவு நிறைவும் பெறுவர். அதற்கான தியான - வடிவம் ''கணபதியே! - நீர் தேவர் முதலான கணங்களுக்குக் கணநாதர், தேவர் தலைவர், கவிகளுக்குள் கவி, சிறந்த மேதை வடிவானவர். தேவர்களின் முதிய அரசர், மூலப்பொருள் வழங்குபவர். தனித்துச் சிறந்தவர், இத்தகைய நீர் எமது துதிகளைக் கேட்டுப் பெரும் சிறப்புகளுடன் கூடவந்தமர்ந்தருள் வீர்'' (5)*

ते होचुः कथमानुष्टुभं मन्त्रराजमभिजानीम इति। स एतमानुष्टुभ षट्पदं मन्त्रराजं कथयाञ्चके। स साम भवति। ऋग्वै गायत्री यजुरुष्णिगनुष्टुप् साम। स आदित्यो भवति। ऋग्वै वसुर्यजू रुद्राः सामादित्या इति। स षट्पदो भवति। साम वै षट्पदः। ससागरां सप्तद्वीपां सपर्वतां वसुन्धरां तत्साम्नः प्रथमं पादं जानीयाद्रायस्पोषस्य दातेति। तेन सप्तद्वीपाधिपो भवति भूःपतित्वं च गच्छति। यक्षगन्धर्वाप्सरोगणसेवितमन्तरिक्षं द्वितीयं पादं जानीयान्निधिदातेति। तेन धनदादिकाष्ठापतिर्भवति भुवःपतित्वं च गच्छति। वसुरुद्रादित्यैः सर्वैर्दैवैः सेवितं दिवं तत्साम्नस्तृतीयं पादं जानीयादन्नदो मत इति। तेन देवाधिपत्यं स्वःपतित्वं च गच्छति। ऋग्यजुस्सामाथर्वाङ्गिरो गणसेवितं ब्रह्मलोकं तुर्यं पादं जानीयाद्रक्षोहण इति। तेन देवाधिपत्यं ब्रह्माधिपत्यं च गच्छति। वासुदेवादि चतुर्व्यूहसेवितं विष्णुलोकं तत्साम्नः पञ्चमं पादं जानीयाद्बलगहन इति। तेन सर्वदेवाधिपत्यं विष्णुलोकाधिपत्यं च गच्छति। ब्रह्मस्वरूपं निरञ्जनं परमव्योम्निकं तत्साम्नः षष्ठं पादं जानीयात्। तेन वक्रतुण्डाय हुमिति यो जानीयात्सोऽमृतत्वं च गच्छति। सत्यलोकाधिपत्यं च गच्छति॥ ६॥

*அநுஷ்டுப் சந்தஸில் அமைந்த மந்திரராஜத்தை நாங்கள் உணர்வதெப்படி? என அவர்கள் கேட்க பார்க்கவர் அதனை விளக்கினார். அந்தமந்திரம் ஸாமவேத வடிவம். ருக்வேதம் காயத்ரீ சந்தஸின் உருவம். யஜுஸ் உஷ்ணிக் சந்தஸின் உருவம். ஸாமவேதம் அனுஷ்டுப் சந்தஸின் உருவம். அதனால் அது ஆதித்யனாக ஆகிறது. வஸுக்கள் ருக்வேதமாகவும் ருத்திரர்கள் யஜுர்வேதமாகவும், ஆதித்யர்கள் ஸாமவேதமாகவு முள்ளனர். ஸாமவேதமும் ஆறுபதம் கொண்டது. இந்த மந்திரமும் ஆறு பதம் கொண்டது. மந்திரத்தின் முதல் பாதம் "ராயஸ்போஷஸ்ய தா³தா" என்பது, கடலும் ஏழுதுவீபங்களும் மலைகளும் கொண்ட பூலோகத்தின் உருவகமது. இதனை தியானிப்பவன் ஏழுதுவீபங்களுக்கும் பூமிக்கும் அதிபனாவான். "நிதிதாதா" என்பது இரண்டாம் பாதம். யக்ஷர் கந்தர்வர் அப்ஸரஸ் இவர்களின் கணங்கள் சூழ்ந்துள்ள அந்தரிக்ஷம் (மேல்வானம்)*

இதன் உருவகம். இதனைத் தியானிப்பவன் குபேரன் முதலான திக்பாலர் நிலை பெறுவான். புவர்லோகத்தின் பதியாவான். "அந்நதோ மத:" என்ற மூன்றும் பாதம் வஸு ருத்திரர் ஆதித்யர் என்ற தேவர்கள் சூழ்ந்துள்ள ஸுவர்லோகத்தின் உருவகம். இதனைத் தியானிப்பவன். தேவர் தலைவனாக, ஸ்வர்கத்தின் அதிபனாக ஆவான். "ரக்ஷோஹண:" என்பது நான்காவது பாதம், நான்கு வேதங்கள் சூழ்ந்த பிரும்மலோகத்தின் உருவகம். இதனைத் தியானிப்பவன் தேவருக்கும் பிரும்மாவிற்கும் தலைவராவான். 'பலகஹந:' என்பது ஐந்தாம் பாதம், வாஸுதேவர் ஸங்கர்ஷணர் அநிருத்தர் பிரத்யும்னர் என்ற நான்கு வ்யூஹதேவர்கள் வசிக்கும் விஷ்ணுலோகம் இதன் உருவகம். இதனைத் தியானிப்பவர் விஷ்ணுலோகாதிபராகிறார். வக்ரதுண்டாய ஹும் என்பது ஆறும் பாதம். அப்பழுக்கற்ற தூயப்பெருவெளியான பரம்பொருளின் உருவகம் இது. இதனைத் தியானிப்பவன் அழியாநிலையும் ஸத்ய லோகத்தலைமையும் பெறுவான். (6)

ऋग्यजुःसामाथर्वाश्चत्वारः पादा भवन्ति। रायस्पोषस्य दाता चेति प्रथमः पादो भवति, ऋग्वै प्रथमः पादः। निधिदाताऽन्नदो मत इति द्वितीयः पादः, यजुर्वै द्वितीयः पादः। रक्षोहणो वो बलगहन इति तृतीयः पादः, साम वै तृतीयः पादः। वक्रतुण्डाय हुमिति चतुर्थः पादः। अथर्वश्चतुर्थः पादोऽथर्वश्चतुर्थः पाद इति।

ருக், யஜுஸ், ஸாமம், அதர்வம் என்ற வேதங்களாக இதனை உருவகப்படுத்தலாம். ராயஸ்போஷஸ்ய தாதா ச என்ற முதல்பாதம் ருக்வேதம். நிதிதாதா அந்நதோ மத: என்ற இரண்டாம் பாதம் யஜுர்வேதம். ரக்ஷோஹணோ வோ பலகஹன: என்ற மூன்றும் பாதம் ஸாமவேதம். வக்ரதுண்டாய ஹும் என்ற நான்காம்பாதம் அதர்வவேதம்.

## द्वितीयोपनिषत् இரண்டாம் உபநிஷத்

स होवाच प्रजापतिरग्निर्वै वेदा इदं सर्वं विश्वानि भूतानि विराट् स्वराट् सम्राट् तत्साम्नः प्रथमं पादं जानीयात्। ऋग्यजुःसामाथर्वरूपः

सूर्योऽन्तरादित्ये हिरण्मयः पुरुषस्तत्साम्नो द्वितीयं पादं जानीयात्। य ओषधीनां प्रभविता(वति) तारापतिः सोमस्तत्साम्नस्तृतीयं पादं जानीयात्। यो ब्रह्मा तत्साम्नश्चतुर्थं पादं जानीयात्। यो हरिस्तत्साम्नः पञ्चमं पादं जानीयात्। यः शिवः स परं ब्रह्म तत्साम्नोऽन्त्यं पादं जानीयात्। यो जानीते सोऽमृतत्वं च गच्छति परं ब्रह्मैव भवति।। तस्मादिदमानुष्टुभं साम यत्र क्वचिन्नाचष्टे। यदि दातुमपेक्षते पुत्राय शुश्रूषवे दास्यत्यन्यस्मै शिष्याय वेति ।। १ ।।

*பிரஜாபதி கூறினார் - ஸாமத்தின் முதல்பாதம் - அக்கினி, வேதங்கள், இவ்வுலகம், இதன் ஸ்தூலத்தின் அதிபதி விராட், ஸூக்ஷ்மத்தின் அதிபதி ஸ்வராட், காரணத்தின் அதிபதி ஸம்ராட், இவையாகும். ஸாமத்தின் இரண்டாம் பாதமோ, ருக்-யஜுஸ்- ஸாம - அதர்வவேதவடிவினரான ஸூர்ய மண்டலத்தின் நடுவே உள்ள தங்கமயமான ஸூர்யபுருஷன். மூன்றுவது பாதமோ ஓஷதிச்செடிகளின் நாதனும் நக்ஷத்திரங்களின் நாதனுமான ஸோமன். நான்காம் பாதம் பிரும்மா, ஐந்தாம் பாதம் ஹரி, ஆறும் பாதம் பரம்பொருளான சிவன். இதனை உணர்ந்தவன் அழியாநிலை பெற்றுப் பரம்பொருளாகவே ஆகிவிடுகிறான். அதனால் இந்த ஸாமத்தைப்பற்றி எங்கும் கூறக்கூடாது. கேட்கிற சிரத்தையுள்ள புதல்வனுக்கோ சிஷ்யனுக்கோ கூறலாம்*

तस्य हि षडङ्गानि भवन्ति - ॐ हृदयाय नमः, शिरसे स्वाहा, शिखायै वषट्, कवचाय हुं, नेत्रत्रयाय वौषट्, अस्त्राय फडिति प्रथमं प्रथमेन द्वितीयं द्वितीयेन तृतीयं तृतीयेन चतुर्थं चतुर्थेन पञ्चमं पञ्चमेन षष्ठं षष्ठेन प्रत्यक्षरमुभयतो माया लक्ष्मीश्च भवति। माया वा एषा वैनायकी सर्वमिदं सृजति, सर्वमिदं रक्षति, सर्वमिदं संहरति, तस्मान्मायामेतां शक्तिं वेद। स मृत्युं जयति। स पाप्मानं तरति। स महतीं श्रियमश्नुते। सोऽभिवादी षट्कर्मसंसिद्धो भवत्यमृतत्वं च गच्छति। मीमांसन्ते ब्रह्मवादिनो ह्रस्वा वा दीर्घा वा प्लुता वेति। यदि ह्रस्वा भवति सर्वपाप्मानं तरत्यमृतत्वं च गच्छति। यदि दीर्घा भवति

महतीं श्रियमाप्नुयादमृतत्वं च गच्छति। यदि प्लुता भवति ज्ञानवान् भवत्यमृतत्वं च गच्छति। तदेतदृषिणोक्तं निदर्शनम् — स ईं पाहि य ऋजीषी तरुद्रः स श्रियं लक्ष्मीमौपलामम्बिकां गाम्। षष्ठीं च यामिन्द्रसेनेत्युत आहुस्तां विद्यां ब्रह्मयोनिस्वरूपाम्॥ तामिहायुषे शरणं प्रपद्ये। क्षीरोदार्णवशायिनं कल्पद्रुमाधःस्थितं वरदं व्योमरूपिणं प्रचण्डदण्डदोर्दण्डं वक्रतुण्डस्वरूपिणं पार्श्वाधःस्थितकामधेनुं शिवोमातनयं विभुम्। रुक्माम्बरनिभाकाशं रक्तवर्णं चतुर्भुजम्। कपर्दिनं शिवं शान्तं भक्तानामभयप्रदम्॥ उन्नतप्रपदाङ्गुष्ठं गूढगुल्फं सुपार्ष्णिकम्। पीनजङ्घं गूढजानुं स्थूलोरुं प्रोन्नमत्कटिम्॥ निम्ननाभिं कम्बुकण्ठं लम्बोष्ठं लम्बनासिकम्। सिद्धिबुद्ध्युभयाश्लिष्टं प्रसन्नवदनाम्बुजम्॥ इति संसर्गः ॥ २ ॥

*அதற்கு ஆறு அங்கங்கள் (நியாஸத்திற்காக) உண்டு. ஹ்ருதயாய நம:, சிரஸே ஸ்வாஹா, சிகாயை வஷட், கவசாயஹூம், நேத்ரத்ரயாய வௌஷட், அஸ்த்ராயபட் என. முதல்பாதத்தால் முதலாவது அங்கம் (ஹிருதய நியாஸமும்) இரண்டாவதால் இரண்டாவது அங்கம் (சிரோ நியாஸம்) மூன்றும் பாதத்தால் மூன்றுவது அங்கம் (சிகாந்யாஸம்) நான் காம்பாதத்தால் நான்காவது அங்கம் (கவசநியாஸம்) ஐந்தாவதால் ஐந்தாவது அங்கம் (நேத்ரநியாஸம்) மற்றும் ஆறுவதால் ஆறுவது அங்கம் (அஸ்திரநியாஸம்) செய்யவேண்டும். ஒவ்வொருபாதத்தின் ஒவ்வோர் அக்ஷரத்திற்கு முன்னும் பின்னும் மாயாபீஜமும் லக்ஷ்மீபீஜமும்* ह्रीं श्रीं *அல்லது* ईं श्रीं *சேர்க்கப்பெறவேண்டும்[1]. விநாயகரது மாயை எல்லாவற்றையும் படைத்துக் காத்து மறைக்கிறது. இந்த மாயாசக்தியை உணர்ந்தவர் மரணத்தை வெல்வார். பாபத்தைக் கடக்கிறார். பெரும் செல்வம் பெறுகிறார். தன்னைப்புகழுடன் அறிமுகப்படுத்திக்கொள்கிறார், (*ईं रां श्रीं, ईं यं श्रीं, ईं स्पों श्रीं, ईं षं श्रीं, ईं स्यं श्रीं, ईं दां, श्रीं, ईं तां श्रीं ईं चं श्रीं हृदयाय नमः *என்றவாறு.* ईं *என்பதற்கு மாற்றாக* ह्रीं *என்பது முண்டு.)*

வேள்வி புரிதல் - புரிவித்தல், தானம் வழங்குதல் - தானம் பெறுதல், வேதம் ஓதுதல், - ஓதுவித்தல் என்ற ஆறுநூம் நிறைவுற்றவராக, அழியாநிலைபெறுகிறார். ஈம் என்பதில் உள்ள ஈகாரம் ஹ்ரஸ்வமா, தீர்க்காக்ஷரமா ப்லுதமா என்று பிரும்மத்தை விளக்குபவர் ஆராய்வர். ஹ்ரஸ்வம் பாபத்தைப்போக்கும். அழியா நிலைதரும். தீர்க்கமானால் பெருஞ்செல்வமும் அழியா நிலையும் தரும். ப்லுதமானால் பேரறிவும் அழியாநிலையும் கிடைக்கும். இதற்கு ருஷி தருகிற தியான மூர்த்தியின் உருவகம் பின்வருமாறு. மரங்களைச் சுட்டெரிப்பவரும் கோமயத்து வராட்டியில் தோன்றுபவருமான அக்னியே! நீர் லக்ஷ்மீயை (செல்வத்தை)க் காப்பாற்றுவீர். ஹரியின் நாயகியான ஸ்ரீதேவி, வரதவிநாயகரின் பிரியையான லக்ஷ்மி, மலையில் தோன்றிய அம்பிகை, காமதேனுப்பசு, ஷஷ்டீதேவி, இந்திரஸேனை (இந்திராணி) பிரும்மத்தின் வித்யா சக்தி என்ற பலவடிவங்கள் பெற்றவள். அந்த ஈ என்ற மகாலக்ஷ்மியைச் சரணடைகிறேன். (இவர்கள் மஹாகணபதியைச் சுற்றி நின்று அபிஷேகம் செய்வதாக தியானம் அமைகிறது.) கணேசரோ பாற்கடலில் பள்ளிகொண்டவர், கல்பதருவின் கீழமர்ந்தவர், வேண்டுவதைத் தருபவர், பெருவெளிவடிவினர், தடிபோன்ற வீரம் மிக்க தோளும் கைகளும் உள்ளவர், வளைந்ததுதிக்கையுள்ளவர், தன் விலாப்புறத்தின் கீழே காமதேனு அமர்ந்திருக்க, சிவனும் உமையும் பெற்ற புதல்வர். தங்கநிறத்தாடை அணிந்தவர், செந்நிற முள்ளவர். நான்கு திருக்கைகளுள்ளவர், அமைதியுடன் இருப்பவர், அடியார்களுக்குப் பயம் நீக்குபவர். மேடிட்ட புறங்காலும் கட்டைவிரலுமுள்ளவர், கணுக்கால்பகுதியில் சதையால் மூடப்பட்டவர். பருத்த பின்காலுள்ளவர், பருத்தகணுக்கால் உள்ளவர், தசையால் மறைந்த முழங்காலுள்ளவர், பருத்தத் தொடை உள்ளவர், உயர்ந்து நிமிர்ந்துள்ள இடுப்புப்பகுதியுள்ளவர். ஆழப்பதிந்த தொப்புள் உள்ளவர், சங்குபோன்ற கழுத்து உள்ளவர், தொங்குகிற உதடும் நாக்கும் உள்ளவர், ஸித்திதேவியும் புத்தி தேவியும் இருபுறங்களிலும் அணைத்திருக்கத் தெளிந்த முகத்தாமரையுள்ளவர். இவ்வாறு அவரை தியானிக்கவேண்டும்.

अथ छन्दोदैवतम् अनुष्टुप्छन्दो भवति, द्वात्रिंशदक्षरानुष्टुब् भवति। अनुष्टुभा सर्वमिदं सृष्टमनुष्टुभा सर्वमुपसंहृतम्। शिवोमायुतः परमात्मा वरदो देवता। ते होचुः कथं शिवोमायुत इति। स होवाच भृगुपुत्रः प्रकृतिपुरुषमयो हि स धनद इति, प्रकृतिर्माया पुरुषः शिव इति। सोऽयं विश्वात्मा देवतेति। तदेतन्निदर्शनम् — इन्द्रो मायाभिः पुरुहूत ईडे शर्वो विश्वं मायया स्विद्दधार। सोऽजः शेते मायया स्विद्गुहायां विश्वं न्यस्तं विष्णुरेको विजज्ञे। तदेतन्माया हंसमयी देवानाम्।। सर्वेषां वा एतद्भूतानामाकाशः परायणम्। सर्वाणि ह वा इमानि भूतान्याकाशादेव जायन्ते जातानि जीवन्त्याकाशं प्रयन्त्यभिसंविशन्ति। तस्मादाकाशबीजं शिवो विद्यात्। तदेतन्निदर्शनम् - हंसः शुचिषद्वसुरन्तरिक्षसद्धोता वेदिषदतिथिर्दुरोणसत्। नृषद्वरसदृतसद् व्योमसदब्जा गोजा ऋतजा अद्रिजा ऋतं बृहदिति।। ३ ।।

சந்தஸ் - தேவதை பற்றிய விபரம் - அனுஷ்டுப் சந்தஸ் 32 அக்ஷரங்கள் கொண்டது. அனுஷ்டுப்பிலிருந்தே ஒலி உலகம் வெளியாகி அதனுள்ளேயே மறைகிறது. சிவனும் உமாதேவியும் கூட இருக்கிற வரதரான பரமாத்மாவே தேவதை. ஏன் இப்படி? என அவர்கள் கேட்க பார்க்கவர் கூறுகிறார். செல்வம் தருகிற அவர் பிரகிருதியும் புருஷனுமே வடிவானவர். பிரகிருதி என்பது மாயாசக்தி, புருஷன் என்பது சிவன். அவரே உலகமாக வடிவெடுத்த தேவதை. ''எல்லாம் வல்ல இறைவன் மாயை எனும் தன் பல சக்திகளால் பெரும் விரிவு பெற்றவர் என வேள்விகளைப்புரிபவர் துதிக்கின்றனர். ''அவரே சர்வர் (சிதைத்து உருக்குலைப்பவர்) இவ்வுலகை மாயையால் தாங்குபவர். பிறவாதவர், மாயையால் பிறர் உணர முடியாதபடி எல்லாவற்றினுள்ளும் தங்கியுள்ளார். எங்கும் நீக்கமற நிறைந்துள்ள அவர் ஒருவரே உலகை நன்கு அறிந்தவர். இதுவே தேவர்களின் எல்லா மாயிருக்கும் பரம்பொருளின் மாயை'' என்று இந்த இந்த்ரோ மாயாபி:'' என்ற மந்திரம் விளக்கும். எல்லாப்பொருளுக்கும் ஆகாசமே பேரெல்லை. எல்லாமும் அதில் தோன்றி அதில் வாழ்ந்து அதனுள் மறைந்து ஒய்கின்றன. அந்த ஆகாசத்தின் விதையாகிய மூலப்பொருள்

சிவன். அதன் விளக்கம் ஹம்ஸ: என்று தொடங்கும் மந்திரத்தில். ''இவரே பல்வேறுருகத் தெரிகிற பரமாத்மா. ஆதித்யர் வடிவில் தேவருலகில் இருப்பவர். வாயுவடிவில் வானில் இருப்பவர். வேள்வி புரிபவராக வேள்வி மேடையில் அமர்பவர். அதிதி (விருந்தாளி)யாக வீட்டு முன்னறையில் அமர்பவர். மனிதரிடத்திலும் சிறந்தவரிடத்திலும் உண்மையிலும் ஆகாயத்திலும் நீரிலும் நிலத்திலும் வேள்வித்தீயிலும் மலையிலும் இருப்பவர். பேருண்மைப் பொருள், பெரும்பொருள்.'' என. (3)

अथाधिष्ठानम् — मध्ये बिन्दुं त्रिकोणं तदनु ऋतुगणं वसुदलं द्वादशारं षोडशकर्णिकेति। मध्ये बीजात्मकं देवं यजेत्। वामदक्षिणे सिद्धिर्बुद्धिः। अग्रे कामदुघा षट्कोणे सुमुखादयः षड्विनायकाः वसुदले वक्रतुण्डाद्यष्टविनायकाः। द्वादशारे वटुको वामनो महादशकमहोदरौ सुभद्रो माली वरो राम उमा शिवः स्कन्दो नन्दी। तद्बाह्येऽणिमादिसिद्धयः। षोडशारे दिक्पालाः सायुधा इति॥ ४॥

வரதர் இருப்பிடம் - பீடம் - நடுவில் பிந்து, சுற்றி முக்கோணம், ஆறுகோணம், எட்டுதளம், 12 தளம், 16 தளம், பிந்துவில் க$^{3}$ம் என்ற கணபதி பீஜ ஸ்வரூபமாக பகவானை வழிபடவேண்டும். இடதுபுறம் ஸித்திதேவி, வலதுபுறம் புத்திதேவி, எதிரில் காமதேனு, ஆறுகோணத்தில் ஸுமுகர் துர்முகர் அவிக்னர். விக்னகர்தா ஆமோதர் பிரமோதர் என்ற ஆறு விநாயகர்கள், எட்டுதளத்தில் வக்ரதுண்டர், ஏகதம் ஷ்ட்ரர், மஹோதரர், கஜானனர், லம்போதரர், விகடர், விக்க்நராஜர், தூம்ரவர்ணர் என்ற எட்டு விநாயகர்கள், 12 கோணத்தில் வடுகர், வாமனர், மஹாத(தா)சகர், மஹோதரர், ஸுபத்ரர், மாலீ, வரர், ராமர், உமா, சிவர், ஸ்கந்தர், நந்தி என்ற பன்னிருவர். 16 தளத்தில் அணிமா, மஹிமா, கரிமா, லகிமா, ஈசித்வம், வசித்வம், ப்ராகாம்யம், ப்ராப்தி என்ற எட்டு ஸித்திகளும் இந்திரன் அக்னி யமன் நிர்ருதி வருணன் வாயு ஸோமன், ஈசானன் என்ற ஆயுதமேந்திய திக்பாலகர்கள். (வஜ்ரம், சக்தி, தண்டம், கத்தி, பாசம், அங்குசம், (த்வஜம்) கதை, (சங்கம்) சூலம் என்ற எட்டும் முறையே அவர்களது ஆயுதங்கள்)

अथ प्रसारः — य एतेन चतुर्थीषु पक्षयोरुभयोरपि। लक्षं जुहुयादपूपानां तत्क्षणाद्धनदो भवेत्॥ सिद्धौदनं त्रिमासं तु जुह्वदन्नावनन्यधीः। तावज्जुह्वत्पृथुकान्हि साक्षाद्वैश्रवणो भवेत्॥ उच्चाटयेद्विभीतैश्च मारयेद्विषवृक्षजैः। वश्याय पङ्कजैर्विद्वान्धनार्थी मोदकैर्हुनेत्। एवं ज्ञात्वा कृतकर्मा भवति कृतकर्मा भवतीति॥

*சுக்ல பக்ஷத்திலும் கிருஷ்ணபக்ஷத்திலும் சதுர்த்தீதிதியில் அப்பத்தால் லக்ஷம் தடவை ஹோமம் செய்ய குபேரனுவான். பொங்கல் அல்லது அவலால் மூன்று மாதங்கள் தொடர்ந்து ஹோமம் செய்யச் செல்வம் பெருகும். தானிக்காய் ஹோமம் செய்ய பேய்பிசாசங்களை அகற்றலாம். எட்டிசமித்தால் ஹோமம் செய்ய எதிரி அழிவான். தாமரையால் ஹோமம் செய்ய ஜனவசியம். செல்வம் பெற கொழுக்கட்டையால் ஹோமம் செய்யலாம்.*

## तृतीयोपनिषत् மூன்றும் உபநிஷத்

अथ होवाच भृगुपुत्रस्तन्त्रं विजिज्ञासितव्यमिति। मूले शून्यं विजानीयात्। शून्यं वै परं ब्रह्म। तत्र सतारं समायं साम न्यसेत्त्रिरेखं भवति, त्रयो हीमे लोकास्त्रयो हीमे वेदाः। ऋग्वै भूः सा माया भवति। यजुर्वै भुवः स शिवो भवति। साम वै स्वः स हिरण्यगर्भो भवति। षट्कोणं भवति षड् हीमे लोकाः षड्वा ऋतवो भवन्ति। तत्र तारमायारमामारविश्वेशधरणीक्रमान्न्यसेत्। अष्टपत्रं भवत्यष्टाक्षरा गायत्री भवति ब्रह्मगायत्रीं न्यसेत्। द्वादशपत्रं भवति द्वादशादित्या भवन्ति ते स्वरा भवन्ति। स्वरान् ज्ञात्वादित्यलोकमश्नुते। षोडशपत्रं भवति षोडशकलो वै पुरुषो वर्णो ह वै पुरुषः स लोकाधिष्ठितो भवत्यनुष्टुब् वै पुरुषः॥ १॥ स होवाच भृगुपुत्र एतमानुष्टुभं मन्त्रराजं साङ्गं सप्रसृतिकं समायं साधिष्ठानं सतन्त्रं यो जानाति स भूतिमान् भवति सोऽमृतत्वं च गच्छति सोऽमृतत्वं च गच्छतीति॥ २॥

இனி இதுபற்றிய தந்திரம் அறியத்தக்கது. மூலமான பிந்துவில் பராகாசத்தைத் தியானித்து அதனிடையே பிரணவமும் மாயா பீஜமும் வரதரின் பீஜமும் (ओं ह्रीं गं) எழுதவேண்டும். முக்கோணத்தின் மூன்று கோடுகள் மூவுலகமும் மூன்று வேதங்களுமாகும். ருக்வேதம் பூமி என்ற இரண்டும் மாயை என்ற முதற்கோடு. யஜுர்வேதம் புவர்லோகம் இவை சிவன் என்ற இரண்டாம் கோடு. ஸாமவேதம் ஸுவர்லோகம் இவை ஹிரண்ய கர்ப்பன் என்ற மூன்றும் கோடு. (முக்கோணத்தில் भूः भुवः सुवः என்ற வியாஹ்ருதிகள்). ஆறுகோணத்தில் ஆறு உலகங்கள். ஆறு ருதுக்கள் என்ற பாவனையுடன் பிரணவம் மாயா பீஜம், லக்ஷ்மீபீஜம், மன்மதபீஜம், கணபதிபீஜம், பூமிபீஜம் என்ற ओं ह्रीं श्रीं क्लीं गं ग्लौं ஆறு பீஜங்கள். அஷ்டதளத்தில் மும்மூன்று அக்ஷரங்களாக வக்ரதுண்ட காயத்திரி, तत्पुरुषाय विद्महे वक्रतुण्डाय धीमहि तन्नो दन्ती प्रचोदयात् (காயத்ரி எட்டு அக்ஷரங்கள் உள்ளது, எட்டு பதங்கள் உள்ளது) 12 தளத்தில் பன்னிரண்டு ஆதித்யர்களே பன்னிரண்டு உயிர் எழுத்துக்களாக இருக்கின்றனர். (अ, आ, इ, ई, उ, ऊ, ए, ऐ, ओ, औ, अं, अः, என. 12 உயிர் எழுத்துக்கள்.) ऋ ॠ ऌ ॡ என்ற நான்கும் நபும்ஸகங்கள் எனச் சேர்ப்பதில்லை). 16 தளங்கள் - 10 இந்திரியங்கள், 5 பிராணன்கள், மனம் என்ற 16 கலைகளுள்ள புருஷன். 32 மெய்யெழுத்துக்கள் தளத்திற்கு இரண்டாக. இப்படி யந்திர அமைப்பின் தந்திர நிலையை உணர்ந்தவன் உலகில் நிலை பெறுகிறான்.

பிருகுபுத்திரர் மேலும் கூறுவார் — இந்த மந்திரராஜத்தை அங்கங்களுடனும் பிரயோகங்களுடனும் பீட அமைப்புடனும் தந்திரத்துடனும் உணர்ந்தவன் செல்வச் செழிப்பும், அழியா நிலையும் பெறுவான்.

---

हरिद्रागणेश पाहि !

पाशाङ्कुशेभरदमोदकपाणि पद्मं द्वात्रिंशदक्षरमयं नवपीतचेलम्।

वन्दे हिरण्मयमहासनगं त्रिणेत्रं हारिद्ररम्यमथ रात्रिमतङ्गजास्यम्॥

# गणेशोत्तरतापिन्युपनिषत् கணேசஉத்தரதாபினீ உபநிஷத்

(वरदोत्तरतापिनी - வரதோத்தரதாபினீ)
प्रथमोपनिषत् - முதல் உபநிஷத்

ॐ ॥ ओमित्येकाक्षरं ब्रह्मेदं सर्वम्। तस्योपव्याख्यानम्। सर्वं भूतं भव्यं भविष्यदिति सर्वमोङ्कार एव। एतच्चान्यच्च त्रिकालातीतं तदप्योङ्कार एव। सर्वं ह्येतद्गणेशोऽयमात्मा ब्रह्मेति।

*ஓம் என்ற ஒரே அக்ஷரத்தாலான ஒலியே, இவை அனைத்துமாயுள்ள பரம்பொருள். இதன் விரிவுரை - சென்றதும் நிகழ்வதும் நடக்கவிருப்பதுமானதனைத்தும் ஓங்காரமே. முக்காலங்களுக்கப்பாற்பட்டதும் இதுவும் மற்றதெதுவும் ஓங்காரமே. இந்த ஆத்மா பிரும்மம் எனப்படுவதெல்லாம் கணேசரே.*

सोऽयमात्मा चतुष्पात्। जागरितस्थानो बहिःप्रज्ञः सप्ताङ्गः एकोनविंशतिमुखः स्थूलभुग्वैश्वानरः प्रथमः पादः। स्वप्नस्थानोऽन्तःप्रज्ञः सप्ताङ्ग एकोनविंशतिमुखः प्रविविक्तभुक् तैजसो द्वितीयः पादः। यत्र सुप्तो न कञ्चन कामं कामयते न कञ्चन स्वप्नं पश्यति तत्सुषुप्तम्। सुषुप्तिस्थान एकीभूतः प्रज्ञानघन एवानन्दभुक् चेतोमुखः प्राज्ञस्तृतीयः पादः। एष सर्वेश्वर एष सर्वज्ञ एषोऽन्तर्याम्येष योनिः सर्वस्य प्रभवाप्ययौ हि भूतानाम्।

*இந்த ஆத்மா நான்கு பாதங்களையுடையது. முதல்பாதம் - விழிப்புநிலையில் வெளியுணர்வுள்ளது. (வெளியே உள்ள பொருள்களை உணர்வதையே நோக்காகக் கொண்டது) ஸ்தூலமான தலை, கண்கள், காதுகள், வாக்கு, பிராணன், இதயம், கால்கள் என்ற ஏழு அங்கங்கள் கொண்டது (தனி உயிரினத்தில் காண்பவை இவை.) ஸமஷ்டியில் இவையே அக்கினி, சந்திர சூர்யர்கள், திக்குகள், வேதங்கள், வாயு, விச்வம், பிருதிவி எனக் காணப்படுகின்றன. கர்மேந்திரியங்கள் ஐந்து, ஜ்ஞானேந்திரியங்கள் ஐந்து, பிராண - அபான - வியான - உதான - ஸமான வாயுக்கள் ஐந்து, மனம் புத்தி சித்தம் அஹங்காரம் என்ற அந்தக் கரணங்கள் நான்கு, எனப்பத்*

தொன்பது துவாரங்கள் உள்ளது. ஸ்தூல உணர்வை ஏற்கும். எல்லா ஜீவர்களின் ஸ்தூலமாக உள்ள வைசுவாநரர் என்ற நிலை இது.

ஆத்மாவின் இரண்டாவது பாதம். கனவு நிலையில் உள்ளுணர்வு கொண்டது, ஏழு அங்கங்களும் பத்தொன்பது துவாரங்களும் (விழிப்பு நிலைபோல்) கொண்டது. பிறரறியாதபடி தனக்குத் தானே உணர்கிற பாங்குள்ளது. ஸூட்சுமசக்தி மட்டும் இயங்குவதால் தைஜஸன் எனப்படுவது.

நல்ல தூக்கத்தில் விழிப்பில்போல் எதிலும் நாட்டமின்றியும் கனவில் போல் உள்ளுணர்வால் எதையும் உணராமலும் இருப்பது ஸுஷுப்தி எனும் தூக்கம். இது ஆத்மாவின் மூன்றாவது பாதம். இந்நிலையில் தான் என்ற உணர்பவன் மட்டுமே மீதமாகி அழுத்தத்துடன பேரறிவுச் செறிவுள்ளவனாக, ஆனந்த உணர்வு மட்டும் உள்ளவனாக, சித்தம் ஒன்றே முகமாகக் கொண்ட பிராஜ்ஞன் இவன். இந்த ஆத்மாவே (ஸமஷ்டியில்) ஸர்வேசுவரன், எல்லாமறிபவன். அந்தர்யாமியாக அதனதன் நிலையில் அததனைக் கட்டுப்படுத்துபவன், அனைத்தின் பிறப்பிடம், எல்லாமும் தோன்றி மறையுமிடம்.

नान्तःप्रज्ञं न बहिःप्रज्ञं नोभयतःप्रज्ञं न प्रज्ञं नाप्रज्ञं न प्रज्ञानघनमदृष्टमव्यवहार्यं अग्राह्यमलक्षणमचिन्त्यमव्यपदेश्यमैकात्म्य-प्रत्ययसारं प्रपञ्चोपशमं शिवमद्वैतं चतुर्थं मन्यन्ते स गणेश आत्मा विज्ञेयः । सदोज्ज्वलोऽविद्यातत्कार्यहीनः स्वात्मबन्धरहितः सर्वदोषरहित आनन्दरूपः सर्वाधिष्ठानः सन्मात्रो निरस्ताविद्यातमोमोहोऽहमेवेति सम्भाव्याहमों तत्सत्परं ब्रह्म विघ्नराजश्चिदात्मकः सोऽहमों तद्विनायकं परं ज्योती रसोऽहमित्यात्मानमादाय मनसा ब्रह्मणैकीकुर्यात् ।

ஆத்மாவின் நான்காம் நிலை - ஸ்தூலமான விழிப்பில் உள்ள வெளியுணர்வற்றது, ஸூட்சுமமான கனவில் உள்ள உள்ளுணர்வற்றது, ஸ்தூல ஸூட்சும உணர்வுக் கலப்புமற்றது, உணர்வுமல்ல, உணர்வற்றதுமல்ல. பேரறிவுச் செறிவுமல்ல காணத்தக்கதல்ல, பழகத்தக்கதல்ல. உணரத்தக்கதல்ல,

குறிப்பிடற்றது, நினைத்தலுக்கு உட்படாதது, சுட்டிக்காட்ட இயலாதது. ஆத்மா ஒன்றே உளது என்ற இட உணர்விற்குச் சாரமாக உள் தானே துலங்குவது. வெளி உலகம் ஒடுங்கிக்காட்சியிலிருந்து மறைந்த நிலை, சிவமாக (மங்களமாக சாந்தமாக) இரண்டாம் பொருளின் உணர்வற்ற நிலை. இந்த நான்காம் நிலையே கணேசர். இவரே ஆத்மா எனக் காணத்தக்கவர்.

தன்னை எப்போதும் "பேரொளி வடிவினன், அவித்யையும் அதன் விளைவும் நீங்கியவன், உடல் உள்ளம் தான் தனது என்ற கட்டற்றவன், எக்குறையுமற்றவன், ஆனந்த உருவினன், அனைத்தின் ஆதாரம், 'ஸத்' என்ற நிலைமட்டுமுள்ளவன். அவித்யையால் ஏற்பட்ட அறிவின்மையும் குழப்பமும் நீங்கியவன்" என்று நன்கு பாவனை செய்து, நான் ஓங்காரமே! நான் அந்த ஸத்தான பரபிரும்மமே, விக்னராஜரே, சித் சக்தியாயுள்ளவனே!. அந்த நான் விநாயகபரம்ஜோதியே, பிரும்மானந்தமே! என்று பாவனையால் உள்ளத்தால், ஆத்மாவை பிரும்மத்துடன் ஒன்றுக்கவேண்டும்.

विनायकोऽहमित्येतत्तत्त्वतः प्रवदन्ति ये। न ते संसारिणो नूनं प्रमोदो वै न संशयः॥ इत्युपनिषत्। य एवं वेद स मुख्यो भवतीति याज्ञवल्क्य इति याज्ञवल्क्य इति। एतदेव परं ध्यानमेतदेव परं तपः। विनायकस्य यज्ज्ञानं पूजनं भवमोचनम्॥ अश्वमेधसहस्राणि वाजपेयशतानि च। एकस्य ध्यानयोगस्य कलां नार्हन्ति षोडशीम्॥

விநாயகரே நான் என்று தத்துவக்கண்களால் உணர்பவர், மறுபடி பிறவிக்கடலில் சுழலமாட்டார். பேராநந்தமாயிருப்பார் என்று உபநிஷதம் கூறுகிறது. இதனை இப்படி உணர்பவன் முன்னணியில் நிற்பான் என்று யாஜ்ஞவல்கியர் கூறுவார். இதுவே பெரும் தியானம். இதுவே பெரும் தவம். விநாயகரது தத்துவத்தை உணர்வதும் அவரை வழிபடுவதும் பிறவிக்கடலைக் கடக்கச் செய்யும். ஆயிரக் கணக்கான அச்வமேதவேள்விகளும் நூற்றுக் கணக்கான வாஜபேய வேள்விகளும் விநாயகரின் தியான யோகத்திற்கு சிறிதும் ஈடாகா.

## द्वितीयोपनिषत् - இரண்டாம் உபநிஷத்

ॐ स विष्णुः स शिवः स ब्रह्मा सेन्द्रः सेन्दुः स सूर्यः स वायुः सोऽग्निः स ब्रह्मायमात्मने सर्वदेवाय आत्मने भूताय आत्मन इति मन्यन्ते। ॐ सोऽहं ॐ सोऽहं ॐ सोऽहमिति। ॐ ब्रह्मन् ॐ ब्रह्मन् ॐ ब्रह्मन्निति। ॐ शिवं ॐ शिवं ॐ शिवमिति। तं गणेशं तं गणेशमिदं श्रेष्ठम्। ॐ गणानां त्वा गणपतिः। स प्रियाणां त्वा प्रियपतिः। स निधीनां त्वा निधिपतिः। ॐ तत्पुरुषाय विद्महे वक्रतुण्डाय धीमहि। तन्नो दन्ती प्रचोदयात्।

*ஓம்காரவடிவினரான கணேசரே விஷ்ணுவும் சிவனும் பிரும்மாவும் இந்திரனும் சந்திரனும் சூரியனும் வாயுவும் அக்னியும் பரப்பிரும்மமுமாவார். அவரே எல்லா தேவர்களும் எல்லா உயிரினங்களுமான ஆத்மா. அவரே நான், அவரே நான், அவரே நான்.! பரம்பொருள் அவரே! அவரே மங்களப்பொருள். அவரே மங்களப்பொருள், கணேசர் கணங்களின் தலைவர், இனிதானவற்றின் இனிய தலைவர், நிதிகளின் நிதியான தலைவர், அவரே அந்தப் பெருமான் என உள்ளத்தால் உணர்வோம். வளைந்த துதிக்கையுள்ளவரை தியானிப்போம். அந்த பெருந்தந்த முள்ளவர் நம்மை நல்லதில் தூண்டட்டும்.*

ॐ तद्गणेशः। ॐ सद्गणेशः। ॐ परं गणेशः। ॐ ब्रह्म गणेशः। गणनाथाकारो नादः। एतत्सर्वो नादः। सर्वाकारो नादः। एतदाकारो नादः। महान्नादः। स गणेशो महान् भवति। सोऽणुर्भवति। स वन्द्यो भवति। स मुख्यो भवति। स पूज्यो भवति। रूपवान् भवति। अरूपवान् भवति। द्वैतो भवति। अद्वैतो भवति। स्थावरस्वरूपवान् भवति। जङ्गमस्वरूपवान् भवति। सचेतनविचेतनो भवति। सर्वं भवति। स गणेशोऽव्यक्तो योऽणुर्यः श्रेष्ठः स वै वेगवत्तरः। अह्रस्वाह्रस्वश्च। अतिह्रस्वातिह्रस्वातिह्रस्वश्च। अस्थूलास्थूलास्थूलश्च। ॐ न वायुर्नाग्निर्नाकाशो नापः पृथिवी न च। न दृश्यं न दृश्यं न दृश्यम्। न शीतं

नोष्णं न वर्षं च । न पीतं न पीतं न पीतम्। न श्वेतं न श्वेतं न श्वेतम्। न रक्तं न रक्तं न रक्तम्। न कृष्णं न कृष्णं न कृष्णम्। न रूपं न नाम न गुणम्। न प्राप्यं गणेशं मन्यन्ते।

*ஓங்காரமான தத் எனக்குறிப்பிடுபவர் கணேசர். ஸத்தானவர் கணேசர். எல்லா வற்றிற்கும் மேலானவர் கணேசர், பிரும்மமே கணேசர். உலகமனைத்தும் ஒலிவடிவானது. கணநாதரே அந்த ஒலி. எல்லாம் அந்த ஒலியே. ஒலியே பெரிது. கணேசரே பெருமான். அவர் அணுவுமாவார். அவரே வழிபடத்தக்கவர், முதல்வர், பூஜைக்குரியவர், வடிவுள்ளவர், வடிவமற்றவர், பலவானவர், பலவல்லாதவர். தாவரமும் ஜங்கமமும் சேதனமும் சேதனமற்றதும் எல்லாமும் அவரே. புலனுக்கப்பாற்பட்டவர். அணுவானவர், மிகப்பெரியவர், மிக வேகமாகச் செல்பவர், நெடியவர், குள்ளர், மிக மிகக் குட்டையானவர், பருத்தவரல்ல. வாயுவோ அக்கினியோ ஆகாசமோ நீரோ பூமியோ காட்சிப்பொருளோ சூடுள்ளதோ தட்பமுள்ளதோ கசிவதோ அல்ல. மஞ்சள் நிறமுள்ளதோ வெண்ணிறமுள்ளதோ சிவந்ததோ கருத்ததோ அல்ல. உருவமோ பெயரோ குணமோ அல்ல. சென்றடையத் தக்கவருமல்ல.*

स शुद्धः स शुद्धः स शुद्धो गणेशः। स ब्रह्म स ब्रह्म स ब्रह्म गणेशः। स शिवः स शिवः स शिवो गणेशः। इन्द्रो गणेशो विष्णुर्गणेशः सूर्यो गणेश एतत्सर्वं गणेशः। स निर्गुणः स निरहङ्कारः स निर्विकल्पः स निरीहः स निराकार आनन्दरूपस्तेजोरूपम निर्वाच्यमप्रमेयः पुरातनो गणेशो निगद्यते। स आद्यः सोऽक्षरः सोऽनन्तः सोऽव्ययो महान्पुरुषः।

*தூயவர், பரம்பொருள், சிவபெருமான், இந்திரன், விஷ்ணு, ஸூர்யன், எல்லாம் கணேசரே. குணச் சிறப்பும் அஹங்காரமும் வேறுபாடும் விருப்பமும் வடிவமும் அற்றவர். ஆநந்தமே உருவானவர், ஒளிவடிவினர், இன்னார் இன்னவகை எனக்குறிப்பிட இயலாதவர், அறிவால் அளவிடமுடியாதவர், பழையவர், ஆதியாக உள்ளவர், சீர்குலையாதவர், முடிவற்றவர், தேய்வில்லாதவர், பெருமான்.*

तच्छुद्धं तच्छबलं ततः प्रकृतिमहत्तत्वानि जायन्ते। ततश्चाहङ्कारादि पञ्च तन्मात्राणि जायन्ते। ततः पृथ्व्यप्तेजोवाय्वाकाशपञ्चमहद्भूतानि जायन्ते। पृथिव्या ओषधय ओषधीभ्योऽन्नमन्नाद्रेतस्ततः पुरुषस्ततः सर्वं ततः सर्वं ततः सर्वं जगत्। सर्वाणि भूतानि जायन्ते। देवा नु जायन्ते। ततश्च जीवन्ति। देवा नु जीवन्ति। यज्ञा नु जीवन्ति। सर्वं जीवति। स गणेश आत्मा विज्ञेयः। इत्युपनिषत्। य एवं स मुख्यो भवतीति याज्ञवल्क्य इति याज्ञवल्क्य इति॥

*இந்த கணேசர் தன் தூய நிலையிலிருந்து இறங்கி மாயையுடன் கூட, பிரகிருதியும் உலகின் மூலப்பொருளான மஹத்தும் தோன்றின. அதிலிருந்து அஹங்காரமும் அதனால் பஞ்சபூதங்களின் மூல ஸூக்ஷ்மங்களும், அவற்றிலிருந்து விளக்கமுற்ற பூமி, ஜலம், நெருப்பு, வாயு, ஆகாசம் என்ற ஐம்பூதங்களும், பூமியிலிருந்து ஓஷதிகளும், ஓஷதிகளிலிருந்து அன்னமும், அன்னத்திலிருந்து உயிரினத்தின் மூலமான விந்துவும் விந்துவிலிருந்து புருஷனும் புருஷனிலிருந்து எல்லாமும் தோன்றின. தேவர்கள் தோன்றுகிறார்கள், வாழ்கின்றனர். வேள்விகள் தோன்றி வாழ்கின்றன. இதனைத்தும் ஆத்மாவான கணேசரே. இதனை உணர்ந்தவனே முதன்மை பெறுவான் என யாஜ்ஞவல்கியர் கூறினார்.*

## तृतीयोपनिषत् - மூன்றாம் உபநிஷத்து

ॐ॥ गणेशो वै ब्रह्म तद्विद्यात्। यदिदं किञ्च सर्वं भूतं भव्यं जायमानं च तत्सर्वमित्याचक्षते। अस्मान्नातः परं किञ्चित्। यो वै वेद स वेद ब्रह्म ब्रह्मैवोपाप्नोति। तत्सर्वमित्याचक्षते। ब्रह्मविष्ण्वादि गणानामीशभूतमित्याह तद्गणेश इति। तत्परमित्याह यमेतेनाप्नुवन्ति पृथिवी सुवर्चा युवतिः सजोषाः।

*கணேசரே பரம்பொருள் என உணரவேண்டும். இது அனைத்தும் — நிகழ்ந்தது, நிகழ்வது, நிகழவிருப்பது என அனைத்தும் அவரே. அவரைத் தவிர வேறில்லை. இந்நிலை*

உணர்ந்தவர், பிரும்மமாகிறார். எல்லாமே அவர். பிரும்மா விஷ்ணு முதலான தேவர் கூட்டத்தின் ஈசனான இவர் கணேசர். இவரே மேலானவர். இவ்வாறு உணர்ந்தவருக்குப் பெரும்பூமி, அழகு யௌவனம், மற்றும் நட்பு கிட்டும்.

यद्वै वाङ् नाक्रामाति मनसा सह नाग्निर्न पृथ्वी न तेजो न वायुर्न व्योम न जलमित्याह। नेन्द्रियं न शरीरं न नाम न रूपम्। न शुक्लं न रक्तं न पीतं न कृष्णमिति। न जाग्रन्न स्वप्नो न सुषुप्तिर्नैव तुरीया। तच्छुद्धमप्राप्यमप्राप्यं च। अज्ञेयं चाज्ञेयं च। विकल्पासहिष्णु तत्सशक्तिकं गजवक्त्रं गजाकारं जगदेवावरुन्धे।

வாக்காலும் மனத்தாலும் இவரை எட்ட இயலாது. இவர் அக்னியோ பூமியோ ஒளியோ வாயுவோ ஆகாசமோ ஜலமோ அல்ல. இந்திரியமோ உடலோ பெயரோ உருவமோ அல்ல. வெளுத்ததோ சிவந்ததோ மஞ்சளோ கருத்ததோ அல்ல. விழிப்போ கனவோ தூக்கமோ இவற்றில் பெறும் உணர்வோ இந்த மூவகை உணர்வற்ற நிலையோ அல்ல. தூயதும் பெறமுடியாததும் உணர முடியாததும் கூட. வேற்றுமையை ஏற்காதது. சக்திமிக்க யானைமுகமுள்ள யானைத் தோற்றமுள்ளது. உலகை அடக்கி ஆள்வது.

दिवमनन्तशीर्षैर्दिशमनन्तकरैर्व्योमानन्तजठरैर्महीमनन्तपादैः स्वतेजसा बाह्यान्तरीयान्व्याप्य तिष्ठतीत्याह। तद्वै परं ब्रह्म गणेश इत्यात्मानं मन्यन्ते। तद्वै सर्वतः पश्यति स्म न किञ्चिद्ददर्श। ततो वै सोऽहमभूत्। नैकाकिता युक्तेति गुणान्निर्ममे। नाभे रजः स वै ब्रह्मा। मुखात्सत्त्वं स वै विष्णुः। नयनात्तमः स वै हरः। ब्रह्माणमुपदिशति स्म ब्रह्मन् कुरु सृष्टिम्। ब्रह्मोवाच नाहं वेद्मि।

அந்தக் கணேசப்பரம்பொருள் எண்ணற்ற தன் தலைகளால் மேலுலகையும் எண்ணற்ற கைகளால் திக்குகளையும் எண்ணற்ற வயிறுகளால் வானையும் எண்ணற்ற கால்களால் பூமியையும் அடர்ந்து தன் பேரொளியால் உள்ளும் புறமும் நிரப்பி நின்றது. அதுவே பரம்பொருளான கணேசர் என்பர். அது சுற்றிப்பார்த்தது. ஒன்றையும் காணவில்லை. நான் ஒருவனே

உளேன் என நினைத்தது. தனித்தொருவனுக இருப்பது தக்கதல்ல என்று மூன்று குணங்களைப் படைத்தது. தொப்புளிலிருந்து ரஜோகுணமும் பிரும்மாவும், முகத்திலிருந்து ஸத்வகுணமும் விஷ்ணுவும், கண்களிலிருந்து தமோ குணமும் ஹரனும், தோன்றினர். பிரும்மாவை உலகைப்படைப்பீர் என்றார். நான் படைப்பையறியேன் என பிரும்மா கூறினார்.

गणेश उवाच, मद्देहे ब्रह्माण्डान्तर्गतं विलोकय तथाविधामेव कुरु सृष्टिम्। अथ ब्रह्मा जन्मद्वारेण ब्रह्माण्डान्तर्गतं विलोकयति स्म। समुद्रान् सरितः पर्वतान् वनानि महीं दिवं पातालं च नरान् पशून्मृगान्नागान् हयान् गोव्रजान् सूर्याचन्द्रमसौ नक्षत्राण्यग्नीन् वायून्दिशस्ततो वै सृष्टिमचीकरत्। ततश्चात्मानमिति मन्यते स्म। न वै मत्तः परं किञ्चिदहमेव सर्वस्येश इति यावद्वदति तावत्क्रूरा अजायेरन्। महद्देहा जिह्वया भुवं लिहाना दंष्ट्राव्याप्ताकाशा महच्छब्दा ब्रह्माणं हन्तुमुद्युक्ताः। तान्दृष्ट्वाबिभ्यत्तत्सस्मार। ततश्चाग्रे कोटिसूर्यप्रतीकाशमानन्दरूपं गजवक्त्रं विलोकयति स्म।

கணேசர் கூறினார் - என் உடலில் பரம்பொருளின் படைப்பிற்கான விரிவைக்காட்டுகிற கோளத்தினுள் பாரும். அவ்வாறே படைப்பீர் என்றார். பிரும்மா தான் தோன்றிய துவாரத்தின் வழியே அந்த பிரும்ம கோளத்தைப் பார்த்தார். கடல், ஆறு, மலை, காடு, பூமி, மேலுலகம், கீழுலகம், மனிதன், கால் நடை, மிருகம், நாகம், குதிரை, பசு மந்தை, ஸூரியன், சந்திரன் எனப் பலவற்றைப் பார்த்தார். பிறகு அவ்வாறே படைத்தார். தன்னைப்பற்றிப் பெருமைப்பட்டார். என்னை விடப் பெரிதொன்றுமில்லை. நானே அனைத்திற்கும் ஈசன் என்று அவர் சொல்வதற்கு முன்னரே கொடுஞ்ஜந்துக்கள் தோன்றின. பெரும் உடல் கொண்டவர்களாக நாக்கால் பூமியை வழித்துண்பவர்களாக, தெற்றிப்பல்லால் வானை மறைத்துப் பெருமுகத்துடன் பிரும்மாவைக் கொல்ல முன்வந்தனர். பிரும்மா அவற்றைக்கண்டு பயந்து கணேசரைத் தியானித்தார். தன்முன் கோடி சூர்ய ஒளியுடன். ஆனந்த வடிவினரான கஜானனரைக் கண்டார்.

तुष्टावाथ गणेश्वरम्। त्वं निर्माता क्ष्माभृतां सरितां सागराणां स्थावराणां जङ्गमानां च। त्वत्तः परतरं किञ्चिन्नैवास्ति जगतः प्रभो। कर्ता सर्वस्य विश्वस्य पाता संहारकारकः। भवानिदं जगत्सर्वं व्याप्यैव परितिष्ठति॥ इति स्तुत्वा ब्रह्माणं तदुवाच ब्रह्मंस्तपस्व तपस्वेत्युक्त्वाऽन्तर्हिते तस्मिन् ब्रह्मा तपश्चचार।

*கணேசரைத் துதித்தார். மலைகளையும் ஆறுகளையும் கடல்களையும் ஸ்தாவரஜங்கமங்களையும் படைத்தவர் நீரே. உம்மை விடப்பெரிது எதுவுமில்லை. இவ்வுலகைப் படைத்தவரும் காப்பவரும் ஒடுக்குபவரும் நீரே. நீரே உலகனைத்தையும் சூழ்ந்து நிற்பவர் என. கணேசர் பிரும்மாவை தவம்புரியும் எனக்கூறி மறைந்ததும் பிரும்மா தவம் புரிந்தார்.*

कियत्स्वतीतेष्वनेहःसु तपसि स्थिते ब्रह्मणि पुरो भूत्वोवाच। प्रसन्नोऽहं प्रसन्नोऽहं वरान् वरय। श्रुत्वैवं वच उन्मील्य नयने यावत्पुरः पश्यति तावद्गणेशं ददर्श। स्तौति स्म। त्वं ब्रह्मा त्वं विष्णुस्त्वं हरस्त्वं प्रजापतिस्त्वमिन्द्रस्त्वं सूर्यस्त्वं सोमस्त्वं गणेशः। त्वया व्याप्तं चराचरं त्वदृते न हि किञ्चन। ततश्च गणेश उवाच। त्वं चाहं च न वै भिन्नौ कुरु सृष्टिं प्रजापते। शक्तिं गृहाण मद्दत्तां जगत्सर्जनकर्मणि॥ ततो वै गृहीतायां शक्त्यां ब्रह्मणः सृष्टिरजायत।

*சில நாட்கள் சென்றதும் தவத்திலுள்ள பிரும்மாவின் எதிரே தோன்றி "தவத்தில் மகிழ்ந்தேன். விரும்பியதைக் கேட்பீர்" என்றார். இந்த சொல்லைக் கேட்டதும், பிரும்மா கண்களைத்திறந்து தன்முன் கணேசரைக் கண்டு நீரே பிரும்மா, விஷ்ணு, சிவன், பிரஜாபதி, இந்திரன், சூரியன், சந்திரன், கணேசர் ஆகிய அனைவரும். நீரே உலகனைத்திலும் நீக்கமற நிறைந்துள்ளீர். உம்மைத் தவிரவேறு பொருளில்லை. என்று துதித்தார். "நீரும் நானும் வேறுபட்டவரல்ல. படைப்பைத் தொடர்வீர். படைப்பிற்கு உதவ நான் தருகிற சக்தியை ஏற்பீர். எனக் கணேசர் கூற பிரும்மா சக்தியை ஏற்றுப் படைப்பைத் தொடங்கினார்.*

ब्राह्मणो वै मुखाज्जज्ञे बाह्वोः क्षत्रमूर्वोर्वैश्यः पद्भ्यां शूद्रश्चक्षुषो वै सूर्यो मनसश्चन्द्रमा अग्निर्वै मुखात्प्राणाद्वायुर्नाभेर्व्योम शीर्ष्णो द्यौः पद्भ्यां भूमिर्दिशः श्रोत्रात्। तथा लोकानकल्पयन्निति।

*அவரது முகத்திலிருந்து அந்தணரும் கைகளிலிருந்து க்ஷத்திரியரும், தொடைகளிலிருந்து வைசியரும், கால்களிலிருந்து சூத்திரரும், கண்களிலிருந்து சூரியனும் மனத்திலிருந்து சந்திரனும், முகத்திலிருந்து அக்னியும், பிராணனிலிருந்து வாயுவும், தொப்புளிலிருந்து ஆகாசமும், தலையிலிருந்து வானுலகமும் கால்களிலிருந்து பூமியும், காதுகளிலிருந்து திக்குகளும் தோன்றினர். இவர்களிலிருந்து உலகம் உண்டானது.*

ततो वै सत्त्वमुवाच त्वं वै विष्णुः पाहि पाहि जगत्सर्वम्। विष्णुरुवाच न मे शक्तिः। सोवाच गृहाणेमां विद्याम्। ततो वै सत्त्वं तामादाय जगत्पाति स्म।

*ஸத்வகுணத்தை நோக்கி, நீரே விஷ்ணுவாகி இவ்வுலகைக் காப்பீர் என்றார். விஷ்ணு தன்னால் காக்க இயலாது எனக்கூறவே என்னிடமிருந்து வித்யையை ஏற்பீர் என்று கணேசர் கூற, விஷ்ணு வித்யையை ஏற்று உலகைக் காத்தார்.*

हरमुवाच कुरु हर संहारम्। जगद्धरणाद्धरो भव। हरश्चात्मानमित्यवैति स्म न मत्परं किञ्चिद्विश्वस्यादिरहं हर इति गर्वं दधौ यावत्तावद्व्याप्तं व्योम गजवक्त्रैर्महच्छब्दैर्हरं हन्तुमुद्युक्तैः। हरो वै विलोक्य रुदति स्म। रोदनाद्रुद्रसंज्ञः। ततस्तं पुरुषं स्मृत्वा त्वं ब्रह्मा त्वं कर्ता त्वं प्रधानं त्वं लोकान् सृजसि रक्षसि। विश्वाधारस्त्वमनाधारोऽनाधेयोऽनिर्देश्योऽप्रतर्क्यो व्याप्येदं सर्वं तिष्ठसीति स्तवनाद्विनायकं ददर्श। ततश्च तं ननाम। गणेश उवाच कुरु हर हरणम्। तद्वै संहर्ताभूद्रुद्रः। य एवं वेद स गणेशो भवति। इत्युपनिषत्॥

*ஹரனைநோக்கி இவற்றை ஒடுக்குவீர். உலகைப் பறிப்பதால் ஹரனாவீர் என்றார். ஹரன் உடனே தன்னைப் பெரிதும் மதித்தார். ''நானே பெரியவன். என்னை விடமேலானது இல்லை. நானே*

உலகின் ஆதியும் முடிவும்'' என்று செருக்குற்றார். அதற்குள் உலகத்தைப் பேரொலியால் அதிரச்செய்கிற கஜானனர்கள் வானில் சூழ்ந்தனர். பயந்த ஹரன் அழத் தொடங்கினார். அழுததால் ருத்ரரானார். உடன் பெருமானை நினைத்துத் துதித்தார் - ''நீரே பிரும்மா, படைப்பவர், நீரே படைத்துக்காத்து ஒடுக்குபவர். நீரே உலகின் ஆதாரம், உமக்கென ஆதாரமில்லை, எதிலும் பதியாதவர்,, இன்னதெனக் குறிப்பிட முடியாதவர், ஊகிக்க முடியாதவர், உலகெங்கும் பரவி நிற்பவர் என. விநாயகர் முன் தோன்ற, அவரைக் கண்டு வணங்கினார். கணேசர் அவரை உலகை ஒடுக்கப்பணித்தார். அதனால் ருத்திரரே ஒடுக்கம் செய்பவர். இதனை உணர்ந்தவர் கணேசராகிறார். என்று உபநிஷதம் கூறுகிறது.

## चतुर्थोपनिषत् - நான்காம் உபநிஷத்து

ॐ॥ गणेशो वै सदजायत तद्वै परं ब्रह्म। तद्विदाप्नोति परम्। तदेषाभ्युक्ता यदनादिभूतं यदनन्तरूपं यद्विज्ञानरूपं यद्देवाः सर्वे ब्रह्म ज्येष्ठमुपासते न वै कार्यं कारणं न तत्समश्चाधिकश्च दृश्यः। सूर्योऽस्माद्भीत उदेति। वातोऽस्माद्भीतः पवते। अग्निर्वै भीतस्तिष्ठति। तच्चित्स्वरूपं निर्विकारमद्वैतं च। तन्मायाशबलमजनीत्याह। अनेन यथा तमस्ततश्चोमिति ध्वनिरभूत्। स वै गजाकारः। अनिर्वचनीया सैव माया जगद्बीजमित्याह। सैव प्रकृतिरिति गणेश इति प्रधानमिति च मायाशबलमिति च। एतस्माद्वै महत्तत्त्वमजायत।

கணேசரே ஸத் எனும் மூலப்பொருளானார். அதுவே பரம்பொருள். அது ஆதியும் அந்தமுமற்றது. விஜ்ஞான உருவானது. தேவர்களனைவரும் தமக்கு மூத்த இதனை வழிபடுகிறார்கள் இது காரியப் பொருளுமல்ல, காரணப்பொருளுமல்ல, ஈடும் மிக்காருமற்றவர். சூரியன் இவரிடமிருந்து பயந்து உதிக்கிறான். வாயு பயந்து வீசுகிறான். நெருப்பு பயந்து தன் நிலையில் நிற்கிறது. அது சித்சக்திவடிவம். மாறுபாடற்றது, இரண்டற்றது. இது மாயையுடன் கலந்தது.

அதனால் இருள் தோன்றியது. ஓம் என்ற ஒலி கிளம்பியது. அது யானை வடிவிலிருந்தது. அந்த மாயை இருக்கிறதெனவோ இல்லை எனவோ உறுதி கூற இயலாதது. அது உலகத்தின் விதையாயிற்று. அந்த மாயையே பிரகிருதி என, கணேசர் என, பிரதானம் (மூலப்பொருள்) என மாயையுடன் இணைந்த பிரும்மமென கூறப்படுகிறது. அதிலிருந்தும் மஹத்தத்துவம் தோன்றியது.

ततः कराग्रेणाहङ्कारं सृष्टवान्। स वै त्रिविधः सात्त्विको राजसस्तामसश्चेति। सात्त्विकी ज्ञानशक्तिः। राजसी क्रियाशक्तिः। तामसी द्रव्यशक्तिः। तामस्याः पञ्चतन्मात्रा अजायन्त पञ्चभूतान्यजायन्त। राजस्याः पञ्च ज्ञानेन्द्रियाणि पञ्च कर्मेन्द्रियाणि पञ्च वायवश्चाजायन्त। सात्त्विक्या दिशो वायुः सूर्यो वरुणोऽश्विनाविति ज्ञानेन्द्रियदेवता अग्निरिन्द्रो विष्णुः प्रजापतिर्मित्र इति कर्मेन्द्रियदेवताः। इदमादिपुरुषरूपम्। परमात्मनः सूक्ष्मशरीरमिदमेवोच्यते।

துதிக்கை நுனியால் அஹங்காரத்தை வெளிப்படுத்த அது ஸாத்விகம் ராஜஸம் தாமஸம் என மூவகைப்பட்டது. ஞான சக்தியே ஸாத்விகமான அஹங்காரம். கிரியா சக்தியே ராஜஸம், திரவியசக்தியே தாமஸம். தாமஸத்திலிருந்து ஆகாயம் முதலிய பூதங்களின் மூலதத்துவங்களான தந்மாத்திரை (ஸூக்ஷ்மநிலை)கள் தோன்றி ஐந்து பூதங்களாகப் பிரிந்தன. ராஜஸமான கிரியாசக்தியிலிருந்து ஐந்து ஞானேந்திரியங்களும் ஐந்து கர்மேந்திரியங்களும், பிராணன் முதலிய ஐந்து வாயுக்களும் தோன்றின. ஸாத்விகமான ஞானசக்தியிலிருந்து திக்கு, வாயு, ஸூர்யன், வருணன், இரு அச்வினிகள், என ஐந்து ஞானேந்திரிய தேவதைகளும், அக்னி, இந்திரன், விஷ்ணு, பிரஜாபதி, மித்ரன் என ஐந்து கர்மேந்திரிய தேவதைகளும் தோன்றினர். இது ஆதியான (விராட்) புருஷனின் தோற்றம். இதனைப் பரமாத்மாவின் ஸூட்சும சரீரமென்பர்.

अथ द्वितीयम्। पञ्चतन्मात्राः पञ्चसूक्ष्मभूतान्युपादाय पञ्चीकरणे कृते पञ्चमहाभूतान्यजायन्त। अवशिष्टानां पञ्चपञ्चांशानां कल्पारम्भसमये

भूतविभागे चैतन्यप्रवेशादहमित्यभिमानः। तस्मादादिगणेशो भगवानुच्यते। ततो वै भूतेभ्यश्चतुर्दश लोका अजायेरन्। तदन्तर्गतजीवराशयः स्थूलशरीरैः सह विराडित्युच्यते। इति द्वितीयम्।

*இரண்டாவது படைப்பு நிலை — தன்மாத்திர நிலையிலுள்ள ஐந்து பூதங்கள் ஒவ்வொன்றிலும் பங்கு சேர்த்து பஞ்சீகரணமடைந்து ஸ்தூல நிலைபெற்று மஹாபூதங்களாயின. மீதியுள்ள தன்மாத்திரநிலையிலேயேயிருப்பவை (இறுதியில் மூலப்பொருளுடன் கலந்து மறைந்து) கல்பம் தொடங்குமுன் பூதங்களாகப் பிரியுமுன் அதில் சைதன்யம் நுழைய அஹங்காரம் (தான் என்ற தனி உணர்வு) ஏற்படுகிறது. இவற்றின் ஆதி கணேசரே. பஞ்சபூதங்களிலிருந்து 14 உலகங்கள் தோன்றின. அவற்றின் உட்பட்ட ஜீவராசிகள் தம் தமது ஸ்தூல சரீரத்தைப்பெற விராட் என்ற நிலை நேர்கிறது.*

राजसो ब्रह्मा सात्त्विको विष्णुस्तामसो वै हरः। त्रयं मिलित्वा परस्परमुवाच अहमेव सर्वस्येश इति। ततो वै परस्परमसहमानाश्चोर्ध्वं जग्मुः। तत्र न किञ्चिद्ददृशुः। ततश्चाधःप्रदेशे दशादिक्षु भ्रमन्तो न किञ्चित्पश्यन्ति स्म। ततो वै ध्यानस्थिता अभूवन्। ततश्च हृद्देशे महान्तं पुरुषं गजवक्त्रमसंख्यशीर्षमसंख्यपादमनन्तकरं तेजसा व्याप्ताखिललोकं ब्रह्ममूर्धानं दिक्श्रवणं ब्रह्माण्डगण्डं चिद्व्योमतालुकं सत्यजननं च जगदुत्पत्त्यपायोन्मेषनिमेषं सोमार्काग्निनेत्रं पर्वतेशरदं पुण्यापुण्योष्ठं ग्रहोडुदशनं भारतीजिह्वं शक्रघ्राणं कुलगोत्रांसं सोमेनकण्ठं हरशिरोरुहं सरिन्नदभुजमुरगाङ्गुलिकमृक्षनखं श्रीहृत्कमाकाशनाभिकं सागरोदरं महीकटीदेशं, सृष्टिलिङ्गकं पर्वतेशोरुं दस्रजानुकं जठरान्तः-स्थितयक्षगन्धर्वरक्षःकिन्नरमानुषं पातालजङ्घकं मुनिचरणं कालाङ्गुष्ठकं तारकाजाललाङ्गुलं दृष्ट्वा स्तुवन्ति स्म।

*ராஜஸரான பிரும்மாவும் ஸாத்விகரான விஷ்ணுவும் தாமஸரான ஹரனும் ஒருவருக்கொருவர் தான் தான் உயர்ந்தவன் என்று தற்பெருமையை வெளிப்படுத்தி விடைகிடைக்காமல், இறுமாப்புடன் வானில் சென்றனர். அங்கு ஒன்றையும் கண்டனரில்லை. மறுபடி கீழிறங்கி பத்து*

திக்குகளில் சுற்றியும் எதனையும் காணுமல் தியானத்தில் அமர்ந்தனர். அவரவரது உள்ளத்தில் ஓர் அற்புதக் காட்சியைக் கண்டனர். ஒரு மிகப்பெரிய புருஷர் - யானை முகமுள்ளவர், எண்ணற்ற தலை கை கால் உள்ளவர் - ஒளியால் உலகனைத்திலும் பரவியவர், பிரும்மாவைத் தலையாக, திக்குகளைக் காதாக, பிரும்மாண்டத்தைக் கன்னமாக, சித்தெனும் பரவெளியை உள்வாயாக, ஸத்யத்தை ஜனன உறுப்பாக, ஜகத்தின் உற்பத்தியையும் மறைவையுமே கண்களின் இமைப்பாக, சந்திரனையும் சூரியனையும் அக்னியையும் கண்களாக, மேருமலையைப் பற்களாக, புண்யத்தையும் புண்ய மல்லாததையும் உதடுகளாக, கிரஹங்களையும் நட்சத்திரங்களையும் பற்களாக, வாக் தேவியை நாக்காக, இந்திரனை மூக்காக. குலபர்வதங்களைத் தோள்களாக ஸூரியனையும் சந்திரனையும் தொண்டையாக. ஹரனைக் கேசமாக, ஆறுகளைக் கைகளாக, ஸர்பங்களை மோதிரங்களாக, நட்சத்திரங்களை நகங்களாக, லக்ஷ்மியை ஹிருதயமாக, ஆகாசத்தை நாபியாக, கடலை வயிருக, பூமியை இடுப்பாக, படைப்பை ஜனனேந்திரியமாக, மலையரசனைத் தொடையாக, அசுவினீ தேவர்களை முழங்கால்களாக, வயிற்றினுள் யக்ஷர், கந்தர்வர், ராக்ஷதர், கின்னரர், மனிதர் இவர்களைத்தாங்கி, பாதாளத்தைக் கணைக்காலாக, முனிவரைப் பாதங்களாக, காலனைக் கால்கட்டை விரலாக. நட்சத்திரக் குவியலை வாலாகக் கொண்ட விராட் கணேசர். அவர்கள் இவரைத் துதித்தனர்.

यतो वै इमानि भूतानि जायन्ते यतोऽग्निः पृथिव्यप्तेजो वायुर्यत्कराग्रात् ब्रह्मविष्णुरुद्रा अजायन्त यतो वै समुद्राः सरितः पर्वताश्च यतो वै चराचरमिति स्तवनात्प्रसन्नो भूत्वोवाचाहं सर्वस्येशो मत्तः सर्वाणि भूतानि मत्तः सर्वं चराचरं भवन्तो वै न मद्भिन्ना गुणा मे वै न संशयः। गुणेशं मां हृदि संचिन्त्य राजस त्वं जगत्कुरु सात्त्विक त्वं पालय तामस त्वं हरेत्युक्त्वान्तर्हितः। स वै गणेशः सर्वात्मा विज्ञेयः सर्वदेवात्मा वै स एकः। य एवं वेद स गणेशो भवति। इत्युपनिषत्।

எவரிடமிருந்து இந்த உயிரினங்கள் தோன்றினவோ, எவரிடமிருந்து நெருப்பு, பூமி, ஜலம், வாயு உண்டானதோ, எவரது கை நுனியிலிருந்து பிரும்மா விஷ்ணு மற்றும் ருத்திரர் தோன்றினரோ, எவரிடமிருந்து கடல்களும் ஆறுகளும் மலைகளும் அசைபவையும் அசையாதவையும் தோன்றினவோ, அவரே நீர் என மூவரும் துதித்ததும். பிரஸன்னராகி, "நானே ஈசன், என்னிடமிருந்தே எல்லாம் தோன்றின. நீங்கள் என்னிடமிருந்து வேறுபட்டவரல்ல. எனது மூன்று குணங்களின் தனித் தோற்றமே. குணங்களின் ஈசனான என்னை மனத்திற் கொண்டு பணிபுரிவீர். ராஜஸரே! நீர் படைப்பீர். ஸாத்விகரே! காப்பீர். தாமஸரே! நீர் ஒடுக்குவீர்" என்று கூறி மறைந்தார். அவரே கணேசர். எல்லாவற்றின் ஆத்மா. ஸர்வதேவர்களின் ஆத்மா. அவர் ஒருவரே. இவ்வாறு உணர்பவன் கணேசராவான். என்று உபநிஷதம் கூறுகிறது.

## पञ्चमोपनिषत् - ஐந்தாம் உபநிஷத்து

ॐ ।। देवा ह वै रुद्रमब्रुवन् कथमेतस्योपासनम्। स होवाच रुद्रो गणको निचृद्गायत्री श्रीगणपतेरेनं मन्त्रराजमन्योन्याभावात्प्रणव स्वरूपस्यास्य परमात्मनोऽङ्गानि जानीते स जानाति सोऽमृतत्वं च गच्छति। योऽधीते स सर्वं तरति। य एनं मन्त्रराजं गणपतेः सर्वदं नित्यं जपति सोऽग्निं स्तम्भयति स उदकं स्तम्भयति स वायुं स्तम्भयति स सूर्यं स्तम्भयति स सर्वान्देवान्स्तम्भयति स विषं स्तम्भयति स सर्वोपद्रवान्स्तंभयति। इत्युपनिषत्। य एनं मन्त्रराजं नित्यमधीते स विघ्नानाकर्षयति देवान्यक्षान् उरगान् ग्रहान्मनुष्यान् सर्वानाकर्षयति। स भूर्लोकं जयति स भुवर्लोकं जयति स स्वर्लोकं स महर्लोकं स जनोलोकं स तपोलोकं स सत्यलोकं स सप्तलोकं स सर्वलोकं जयति। सोऽग्निष्टोमेन यजते सोऽत्यग्निष्टोमेन स उक्थ्येन स षोडशीयेन स वाजपेयेन सोऽतिरात्रेण सोऽप्तोर्यामेण स सर्वैः क्रतुभिर्यजते। य एनं मन्त्रराजं वैघ्नराजं नित्यमधीते स ऋचोऽधीते स यजूंष्यधीते स सामान्यधीते

सोऽथर्वणममधीते सोऽङ्गिरसमधीते स शाखा अधीते स पुराणान्यधीते स कल्पानधीते स गाथा अधीते स नाराशंसीरधीते स प्रणवमधीते। य एनं मन्त्रराजं गाणेशं वेद स सर्वं वेद स सर्वं वेद। वेदसमः स मुनिसमः स नागसमः स सूर्यसमः सोऽग्निसम इति। उपनीतैकाधिकशतं गृहस्थैकाधिकशतं वानप्रस्थैकाधिकशतं रुद्रजापकसमम्। यतीनामेकाधिकशतमथर्वशिरःशिखाध्यापकसमम्। रुद्रजापकै काधिकशतमथर्वशिरःशिखाध्यापकैकाधिकशतं गाणेशतापिनीयोपनिषदध्यापकसमम्।

தேவர்கள் ருத்திரனே இவரது வழிபாட்டுமுறை பற்றிக் கேட்டனர். அவர் சொன்னார். இந்த மந்திரத்திற்கு கணகர் ருஷி, நிச்ருத் காயத்ரீ சந்தஸ். கணபதி ஓங்கார ஸ்வரூபம். இவரது மந்திர அங்கங்களை அறிந்தவன் அழியா நிலைபெறுகிறான். எல்லாவற்றையும் கடந்து நிற்கிறான். கணபதி மந்திரத்தைத் தினமும் ஜபிப்பவன் அக்னி - வாயு - ஜல ஸ்தம்பம் புரிவான். ஸூரியனையும் தேவர்களையும் இயங்காமல் செய்வான். விஷங்களையும் மற்ற உபத்திரவங்களையும் செயலிழக்கச் செய்வான். விக்னங்களை நீக்குவான். தேவர் யக்ஷர் நாகர் கிரஹங்கள் மனிதர்கள் இவர்களை வசப்படுத்துவான். பூலோகம் புவர்லோகம் ஸுவர்லோகம் மஹர்லோகம் ஜநோலோகம் தபோலோகம் ஸத்யலோகம் என்ற உலகங்களை வெல்வான். அக்னிஷ்டோமம் அத்யக்னிஷ்டோமம், உக்தியம், ஷோடசீ, வாஜபேயம் அதிராத்ரம், அப்தோர்யாமம் என்ற எல்லா வேள்விகளும் புரிந்தவனாவான். தினம் ஜபிப்பவன் ருக் யஜுஸ்ஸாம அதர்வா அங்கிரஸம் இவற்றின் சாகைகள், புராணங்கள் கல்பங்கள் காதைகள் இதிஹாஸங்கள் இவற்றையும் ஓங்காரத்தையும் ஓதியவனாவான். எல்லா மறிந்தவனாகி ருஷி, நாகர், ஸூரியன், அக்னி இவர்களுக் கொப்பானவனாவான். 101 உபனயனமானவர், 101 கிருஹஸ்தர்கள், 101 வான பிரஸ்தர்கள், இவர் மந்திரஜபம் செய்பவனுக்கு ஈடாவர். 101 ஸந்யாஸிகள் அதர்வவேதம் ஓதுவிப்பவருக்குச்சமம். 101 ஸ்ரீருத்ரஜபம் செய்பவர், 101 அதர்வவேதம் ஓதுவிப்பவர் இவர் கணேசதாபினி உபநிஷத் ஓதுவிப்பவருக்குச் சமம்.

मन्त्रराजजापकस्य यत्र रविसोमौ न तपतो यत्र वायुर्नक्षत्राणि न वाति भान्ति यत्राग्निर्मृत्युर्न दहति प्रविशति यत्र मोहो न दुःखं सदानन्दं परानन्दं समं शाश्वतं सदाशिवं परं ब्रह्मादिवन्दितं योगिध्येयं परमं पदं चिन्मात्रं ब्रह्मणस्पतिमेकाक्षरमेवं परमात्मानं बाह्यान्ते लब्धांशं हृदि समावेश्य किञ्चिज्जप्त्वा ततो न जपो न माला नासनं न ध्यानावाहनादि।

*மந்திர ராஜத்தை ஜபிப்பவனுக்கெதிரே ஸூரிய சந்திரர்கள் விளங்கமாட்டார். வாயு அசையமாட்டார். நக்ஷத்திரங்கள் ஒளிவிடமாட்டா. நெருப்பும் எரிக்காது. யமன் நுழைய மாட்டான். குழப்பமோ துயரோ இருக்காது. எப்போதும் ஆனந்தமும் அமைதியுமிருக்கும். ஸமரும் நித்யரும், ஸதாசிவரும் பிரும்மாதியரால் வணங்கப் பெற்றவரும் யோகிகளால் ஸமாதியில் காணப்பெற்றவரும் சித்சக்தி வடிவானவருமான பிரும்ஹணஸ்பதியை - ஏகாக்ஷர மந்திரத்தால் வழிபடப்பெறுகிற பரமாத்மாவை - உள்ளும்புறமும் இடம் பெறச் செய்து இதயத்தில் அமர்த்தி மந்திரத்தை ஜபித்தபின் வேறு ஜபமோ மாலையோ ஆஸனமோ தியானமோ ஆவாஹனமோ தேவைப்படாது.*

स्वयमवतीर्णो ह्ययमात्मा ब्रह्म सोऽहमात्मा चतुष्पात्। बहिःप्रज्ञः प्रविविक्तभुक् तैजसः। यत्र सुप्तो न कञ्चन कामं कामयते न कञ्चन स्वप्नं पश्यति तत्सुषुप्तम्। तत्रैकीभूतः प्रज्ञानघन एवानन्दभुक् चेतोमुखः प्राज्ञः। एष सर्वेश्वरः सर्वान्तर्यामी एष योनिः सर्वभूतानाम्। न बहिःप्रज्ञं नान्तःप्रज्ञं नोभयतःप्रज्ञं न प्रज्ञानघनमव्यपदेश्यमव्यवहार्यमग्राह्य मलक्षणमचिन्त्यमैकात्म्यप्रत्ययसारं प्रपञ्चोपशमं शिवमद्वैतमेवं चतुष्पादं ध्यायन् स एवात्मा भवति।

*அந்த பிரும்மமான பரமாத்மா தானே நான்கு நிலை கொண்டவராக இறங்கி வந்துள்ளவர். விழிப்பில் வெளியுணர்வு மட்டும் கொண்டவராக (விசுவராக) கனவில் உள்ளுணர்வைத் தனித்துப் பெறுகிற தைஜஸராக, விருப்பமும் கனவுமற்ற நல்லுறக்கத்தில் பிராஜ்ஞராகக் காணப்படுகிறார்.*

பிராஜ்ஞர் உடலும் உள்ளமுமிழந்து பேரறிவுச் செறிவாக ஆனந்தத்தை உணர்பவராக சித்தம் மட்டும் உணரக் கூடிய நிலையில் இருப்பார். இவரே ஸமஷ்டியில் அனைத்திற்கும் ஈச்வரன், எல்லாவற்றிற்கும் அந்தர்யாமி. உயிரினமனைத்தின் தோற்றுவாய். நான்காம் நிலையில் வெளியுணர்வும் உள்ளுணர்வும் இரண்டும் கலந்தும் உணர்வுச்செறிவாகவும் இல்லாமல், இன்னதெனக் குறிப்பிடவும் வழங்கவும் உணரவும் சிந்திக்கவும் இயலாத ஒரே ஆத்மா என்ற ஸத்திய உணர்வின் மூலமானவர். உலகமடங்கிய நிலை. சிவநிலை, இரண்டற்ற நிலை. இந்த நான்கு நிலைகளும் உணர்ந்தவன் பரமாத்மாவாகிறான்.

स आत्मा विज्ञेयः सदोज्वलोऽविद्यातत्कार्यहीनः स्वात्मबन्धरहितो द्वैतरहितो निरस्ताविद्यातमोमोहाहङ्कारप्रधानमहमेव सर्वमिति सम्भाव्य विघ्नराजब्रह्मण्यमृते तेजोमये परंज्योतिर्मये सदानन्दमये स्वप्रकाशे सदोदिते नित्ये शुद्धे मुक्ते ज्ञेश्वरे परे ब्रह्मणि रमते रमते रमते। य एवं गणेशतापनीयोपनिषदं वेद स संसारं तरति घोरं तरति दुःखं तरति विघ्नांस्तरति महोपसर्गं तरति। आनन्दो भवति स नित्यो भवति स शुद्धो भवति स मुक्तो भवति स स्वप्रकाशो भवति स ईश्वरो भवति स मुख्यो भवति स वैश्वानरो भवति स तैजसो भवति स प्राज्ञो भवति, स साक्षी भवति, स एव भवतीति इत्युपनिषत्।

எப்போதும் ஒளிமயமாக, அஜ்ஞானமும் அதன் விளைவுமற்றதாக, ஆத்மாவைக் கட்டுவதற்குரிய பாசங்களற்றதாக, துவைதமின்றி, அஜ்ஞானம் அதனால் விளைகிற அறியாமை, மோஹம், செருக்கு, இவை நீங்கி எல்லாம் நானே, நானே எல்லாம் என்ற பாவனையில் ஒளிமயமும், ஆனந்தமயமும் தானே தன்னொளியால் பிரகாசிப்பதும், எப்போதுமுள்ள நித்ய வஸ்துவும் தூயதும் பாசங்களிலிருந்து விடுபட்டதும். ஸர்வஜ்ஞ ஈசுவரனாக விளங்குவதுமான விக்னராஜ பிரும்மத்திடம் மட்டுமே ஈடுபடுவான்.

இந்த கணேச தாபினீ உபநிடதத்தை அறிந்தவன் கடும் பிறவிக்கடலைத் தாண்டுவான். துயரும் இடையூறும் பெரும் சங்கடங்களும் நீங்கப்பெறுவான். ஆனந்தமாக, நித்யனாக, தூயவனாக, முக்தனாக, தன்னொளியால் பிரகாசிப்பவனாக, ஈசுவரனாக, முதல்வனாக, ஸமஷ்டியான வைசுவாநரனாக, தைஜஸனாக, பிராஜ்ஞனாக, ஸாக்ஷியாக, எல்லாமாக ஆவான்.

## षष्ठोपनिषत् - ஆறாம் உபநிஷத்து

ॐ॥ अथोवाच भगवती गौरी ह वै रुद्रमेतस्य मन्त्रराजस्यानुष्ठानविधिं मे ब्रूहीति। स होवाच रुद्रो विधिं लब्धांशं गुरुदेवतयोरालभ्य मनसा पुष्पं निवेद्योपक्रम्य भूतोत्सारणमासनबन्धाद्या त्मरक्षासुनियमभूतशुद्धिप्राणस्थापनप्रणवावर्तनमातृपूजनान्तर्मातृकान्तर्या-गादि सम्पाद्य। अत्र केचन समन्त्रं मूलवैदिककल्पैरुपक्रमं ग्रहणसमर्पणनिवेदनानि बाह्येऽन्यथेति। महार्घ्यं शङ्खं त्रिपाद्योर्गन्धादिना पूजितयोः स्थाप्य पात्रासादनं दक्षिणोपक्रमेण पाद्यार्घ्याचमनमधुपर्कपुनरा चमननिवेदनपात्राणि संस्थासु यथोपदिष्टम्। चतुर्थ्योः पर्वणि संस्थासु यथाविधि स्थाप्य निवेदने प्रक्षालनमेव ततोऽर्वाक् पञ्चामृतपात्राणि रिक्तं च मूलेनालभ्य निवेदिन्यार्घ्योदकेनात्मानं पात्राणि सम्भारं च प्रोक्ष्य पात्रातिरिक्तानि महार्घ्योदकेन सर्वनिवेदनं करशुद्धिं मूलासुनियमं यथोक्तर्षिच्छन्दोदैवतं स्मृत्वा। विनियोगश्च नित्ये पूजाङ्गो जपो, जपाङ्गा पूजा, जप इति। अङ्गुष्ठव्यापकस्वान्ताष्टाङ्गदण्डिमुण्डिन्यासादि कृत्वा मुखमवेक्ष्यात्मानं देवरूपिणं सम्भाव्य मूर्ध्नि पुष्पं दत्त्वा पीठं सम्पूज्यासनं दत्त्वा ऋष्यादि कृत्वा ध्यात्वा हृदयाम्भोजे योगिनोऽत्र जपन्ति।

பகவதியான கௌரீதேவி ருத்திரரிடம் மந்திரத்தின் அனுஷ்டான முறை உபதேசிக்க வேண்டினார். ருத்திரர் கூறினார். முறையறிந்த பின் குருவிற்கும் தேவதைக்கும் மனத்தளவில் புஷ்பம் போட்டு ஸங்கல்பத்துடன் தொடங்கி இடையூறு விளைவிக்கிறவர்களை அகற்றுதல் (பூதோத்ஸாரணம்) ஆஸனத்தில் அமர்தல், ஆத்மரக்ஷை, பிராணாயாமம், பூதசுத்தி,

பிராணப்பிரதிஷ்டை, பிரணவஜபம், மாத்ருகாந்யாஸம், அந்தர்மாத்ருகாந்யாஸம், அந்தர்யாகம் முதலியவைகளை முடித்துப்பின் வைதிக முறைப்படி மூலமந்திரத்துடன் பூஜை, ஸமர்பணம், நிவேதனம், என்று வெளிப்படையான பூஜை செய்து பின். விலையுயர்ந்த சங்கை முன்னரே பாத்ராஸன பூஜை செய்த முக்காலியில் வைத்து. பாத்ராஸாதனம் செய்த பின் பாத்யம் அர்க்க்யம் ஆசமனம் மதுபர்கம் மறுபடி ஆசமனம் நிவேதனம் இவற்றிற்கான பாத்திரங்களை வலத்திலிருந்து தொடங்கி அதனதனிடத்தில் குரு உபதேசித்தபடி வைத்து சுக்ல-கிருஷ்ணபக்ஷசதுர்த்திகளிலும் பர்வதினங்களிலும் முறைப்படி பூஜிக்கவும். பஞ்சாமிருத பாத்திரங்களை நிரப்புமுன்னரே மூலத்தால் துடைத்து நிவேதன முத்திரையுடன் அர்க்கியஜலத்தால் தன்னையும் பாத்திரங்களையும் பூஜைப்பொருள்களையும் புரோக்ஷித்து பாத்திரத்தைத் தவிர மற்றதை மஹார்க்கியஜலத்தால் புரோக்ஷித்துக் கைகளை சுத்தி செய்து மூலத்தால் பிராணாயாமம் செய்வது. ருஷி சந்தஸ் தேவதா நியாஸத்துடன் பூஜைக்கு அங்கமாக ஜபம், அல்லது ஜபத்திற்கு அங்கமாக ஜபம் அல்லது ஜபம் என்று விநியோகநியாஸம் ஜபத்தின் நியாஸம், வியாபக நியாஸம், அங்கநியாஸம், அஷ்டாங்க நியாஸம், தண்டிநீ முத்திரை, முண்டி நியாஸம் முதலியவற்றைச் செய்து, தன் முகத்தை (க்கண்ணாடியில்) பார்த்து தன்னைப் பகவானாகத் தியானித்து தலையில் பூபோட்டு, ஆஸனம் தந்து ருஷி முதலிய நியாஸங்களுடன் இதயத்தில் பகவானைத் தியானம் செய்வர். மந்திர ஜபம் செய்வர்.

स्वान्ताम्भोजाद्देवमावाह्य मुद्रां दर्शयित्वा देवस्य सकलीकरणाङ्गुष्ठ हृदयार्पिण्या स्वान्ते मुद्रां निवेद्य पात्राणि च मूलेन दत्त्वा रिक्ते पञ्चामृतं संयोज्य तेन पञ्चवारं सकृद्वाऽभिषिच्य नित्येन संतर्प्य कल्पस्तवनादिपुरुषसूक्तरुद्राध्यायघोषशान्त्यादिना मूलेन चाभिषिच्य सर्वपूजां निवेद्य दीपं त्रिर्भ्राम्य सव्येनाघ्राप्य महानैवेद्यपीठावरणान्युपसंहृत्य दर्शयेत्। ताम्बूलान्ते किञ्चिन्मूलमावर्त्य पुनर्धूपादित्रयभक्ष्यादि निवेद्य मुद्राः सर्वोपचारस्य दर्शयित्वा निवेदनमिदमासनं, नमः पाद्ये एषोऽर्घ्यः स्वाहेति

दक्षिणकरेऽर्घ्ये इदं स्वधेति पुरस्त्रिके मुखे नम इति स्नानेष्वेष गन्धो नमोऽक्षतेषु ओं पुष्पाणि नमः पुष्पेष्वेष धूपो दीपो नमो धूपदीपयोः समर्पयामीति नैवेद्यफलताम्बूलेषु निवेदयामि नमो हिरण्ये एष पुष्पाञ्जलिर्नम इति मालायामिति परमं रहस्यमप्रकाश्यं बीजं य एवं वेद स सर्वं वेद स सर्वं वेद।

*தன் இதய கமலத்திலிருந்து பகவானை வெளிப்படச் செய்து முத்திரை காட்டி ஸகலீகரணத்துடன் கரநியாஸம் அங்கநியாஸம் செய்து முத்திரை காட்டி, பாத்ரங்களை மூலமந்திரத்தால் அமைத்து பஞ்சாமிருதம் நிரப்பி, அதனால் ஐந்து தடவையோ ஒருதடவையோ அபிஷேகம் செய்து கல்பஸ்துதி, புருஷஸூக்தம், ஸ்ரீருத்ரம், கோஷசாந்தி மூலமந்திரம் இவற்றைச் சொல்லி அபிஷேகம் செய்து வழிபட்டு, தீபத்தை மூன்று தடவை சுற்றி இடதுகையில் முத்திரையுடன் மஹாநைவேத்யம் முதலியவற்றைச் செய்யவேண்டும்.*

*தாம்பூலத்தின் இறுதியில் மூலமந்திர ஜபம் செய்து தூபம் தீபம் நிவேதனம் செய்து, ஸர்வோபசார பூஜா முத்திரை (லமித்யாதி) காட்டி இது நிவேதனம், இது ஆஸனம் என நம: என்பதுடன், இது அர்க்க்யம் என வலதுகரத்தில் ஸ்வாஹா என்பதுடன், இது ஆசமனம் என முகத்தில் நம: என்பதுடன், இது கந்தம் என நம: என்பதுடன். அக்ஷதை ஓம் உடன், புஷ்பங்கள் நம: உடன், தூபம் தீபம் நம: ஸமர்பயாமி என்பதுடன், நைவேத்யம் பழம் தாம்பூலம் இவற்றை நிவேதயாமி நம: என்பதுடன் ஸ்வர்ணபுஷ்பத்திலும் மந்திரபுஷ்பத்திலும் நம: என்பதுடன் மாலையை நம: என்பதுடன். இவற்றுடன் வெளிப்படாதபடி ரகசியமாக பீஜமந்திரம் கூறி அளிக்க வேண்டும் இவ்வாறு வழிபடுபவனே பகவானை உணர்வான்.*

वर्णार्थं लब्धांशेन मन्त्रार्थेन च पीठावरण देवतावधानेन वा जपति स जपति। मुख्यं लब्धांशमासनं मृदुलं भुक्तरिक्तवासः कौसुम्भमाञ्जिष्ठरक्तकम्बलचित्रमृगव्याघ्राजिनं वा यथोक्तमुक्तान्यतरैरा

सनान्तरयोजना स्फटिककमलभद्राक्षमणि - मुक्ताप्रवालरुद्राक्षकुशग्रन्थिषु वा जपति स जपति। कुशमयी नित्याक्षालनं चन्दनालेपो धूपेनाभिमन्त्रच पृथगभिमन्त्रणं सद्योजातैः पञ्चभिः प्राणस्थापनजीवनतर्पणगुप्तानि च। स्वमूले गुह्यं वामेन स्पृशेन्न दर्शयेत्। एवं श्रावणे पवित्रेण मधौ दमनेन जपमालया महानवम्यां तापस्यां चतुर्थ्यां तिललड्डुकैः सप्तम्यां शीतलचन्दनेन शिवरात्र्यां बिल्वदलमालयाऽन्यस्मिन्पर्वणि महत्यार्चयन्ति तेऽर्चयन्ति । मोदक सक्तु रंभाफलेक्षुनारिकेलपूपानन्यानि च यथोपदिष्टमाहुतिकर्मभिर्जुहोति। जपश्च प्राक्प्रवणे होमोऽन्यथोपास्यः।

*மந்திரத்தின் எழுத்தின் பொருள் மந்திரத்தின் பொருள் தேவதை, ஆவரணதேவதை, இவற்றை உணர்ந்து ஜபிப்பவனே ஜபிப்பவன். முக்கியமானது. அமர ஆஸனம் மெதுவானது. புது ஆடை, குசும்பா மஞ்சிட்டி இவற்ருல் சிவந்த கம்பளத் தாலானது, மான்தோல், புலித்தோல், இவற்றில் ஒன்று. ஸ்படிகம், தாமரைமணி, பத்ராக்ஷம், முத்து, பவழம், ருத்திராக்ஷம், தர்ப்பையை மணிபோல் முடிப்பு, இவற்றைக் கொண்டு ஜபிக்கலாம்.*

*தர்ப்பாஸனத்தில் அமர்தல், நித்யஸ்நாநம், சந்தனப்பூச்சு, தூபத்தால் ஸ்தலசுத்தி, ஸத்யோஜாதம் முதலிய ஐந்து மந்திரங்களால் பிராண பிரதிஷ்டை, பிராண ஜீவனம், பிராண தர்பணம், அங்கரக்ஷை, இவை அவசியம் செய்யத்தக்கவை. குஹ்யத்தில் நியாஸம் இடதுகையால். அதனை வெளியே காட்டக்கூடாது. சிராவணமாதத்தில் பவித்ரத்தாலும் சித்திரையில் தமனத்தாலும், புரட்டாசி மஹாநவமியில் ஜபமாலையாலும் சதுர்த்தியில் எள்ளுக் கொழுக்கட்டையாலும் ஸப்தமியில் குளிர்ந்த சந்தனத்தாலும் சிவராத்திரியில் பில்வமாலையாலும் இப்படி பர்வதினங்களிலும் பூஜிப்பவரே சிறந்தவர். கொழுக்கட்டை, அவல், பொறி, ஸத்துமா, வாழைப்பழம், கரும்பு, தேங்காய், அப்பம் மற்றும் குரு உபதே சித்தவற்றை ஆஹுதியாக அளிப்பர். கிழக்கு முகமாக கிழக்கு தாழ்ந்த இடத்தில் ஜபமும் ஹோமமும்.*

एवं यः करोति सोऽमृतत्वं विन्दति स प्रतिष्ठां प्राप्नोति मुक्तिं विन्दति भुक्तिं भुनक्ति वाचं वदति यशो लभते। इदं रहस्यं यो जानाति स जानाति योऽधीते सोऽधीते स आनन्दो भवति स नित्यो भवति स विशुद्धो भवति स मुक्तो भवति स प्रकाशो भवति स दयावान् भवति ज्ञानवान्भवत्यानन्दवान्भवति विज्ञानवान्भवति विज्ञानानन्दो भवति सोऽमृतत्वं भवत्यमृतत्वं भवतीति।

*இவ்வாறு செய்பவன் அழியாநிலையில் புகழும் முக்தியும் போகமும் பேச்சுவல்லமையும் பெறுவான். இந்த ரஹஸ்யமறிந்தவன் இந்த உபநிஷத்தை ஓதுபவன் ஆனந்தமாக அழிவற்று தூய்மை மிக்கவனாக, முக்தனாக, தெய்வ ஒளி பெற்றவனாக. வாழ்வான். தயை, ஜ்ஞானம் ஆனந்தம் விஜ்ஞானம் பெறுவான். அழியாநிலை பெறுவான்.*

## हेरम्बोपनिषत् - ஹேரம்போபநிஷத்து

अथातो हेरम्बोपनिषदं व्याख्यास्यामः।
गौरी सा सर्वमङ्गला सर्वज्ञं परिसमेत्योवाच।
अधीहि भगवन्नात्मविद्यां प्रशस्तां यया जन्तुर्मुच्यते मायया च।
यतो दुःखाद्विमुक्तो याति लोकं परं शुभ्रं केवलं सात्त्विकं च॥ १॥
तां वै स होवाच महानुकम्पासिन्धुर्बन्धुर्भुवनस्य गोप्ता।
श्रद्धत्स्वैतद्गौरि सर्वात्मना त्वं मा ते भूयः संशयोऽस्मिन् कदाचित्॥ २॥

*ஹேரம்ப உபநிஷத்தை விளக்குவோம். ஸர்வமங்களையான கௌரி ஸர்வஜ்ஞனை சிவனை அணுகிக்கேட்டாள். எதனைக் கொண்டு எந்த ஜீவனும் மாயையைத் தாண்டுவானோ, துயரிலிருந்து விடுபடுவானோ, ஸத்வகுண மிக்க உயர்ந்த் தூய உலகை அடைவானோ அந்த உயர்ந்த ஆத்மவித்யையை உபதேசிப்பீர் என. இதனைக்கேட்ட கருணைப் பெருங்கடலான உலகநாதன் சிவன் கூறினார். இதனை முழுவதும் சிரத்தையுடன் கேள். இதில் உனக்கு எந்த ஐயப்பாடும் நேராது.*

हेरम्बतत्त्वे परमात्मसारे नो वै योगान्नैव तपोबलेन।
नैवायुधप्रभावतो महेशि दग्धं पुरा त्रिपुरं दैवयोगात्॥ ३॥
तस्यापि हेरम्बगुरोः प्रसादाद्यथा विरिञ्चिर्गरुडो मुकुन्दः।
देवस्य यस्यैव बलेन भूयः स्वं स्वं हितं प्राप्य सुखेन सर्वम्॥ ४॥
मोदन्ते स्वे स्वे पदे पुण्यलब्धे सर्वैर्देवैः पूजनीयो गणेशः।
प्रभुः प्रभूणामपि विघ्नराजः सिन्दूरवर्णः पुरुषः पुराणः॥ ५॥

*ஹேரம்பனின் தத்துவம் பரமாத்மஞானத்தின் ஸாரமாகும். திரிபுரத்தை எரித்தது யோகத்தாலோ தவத்தாலோ ஆயுத சக்தியாலோ அல்ல. தைவசக்தியால் நிகழ்ந்தது. அதுவும் அந்த ஹேரம்பரின் பேரருளால். பிரும்மாவும் கருடனும் முகுந்தரும் ஹேரம்பரின் வலிவைக் கொண்டு தம் தமக்கு இதமானதைப் பெற்றுப் புண்யத்தால் கிட்டிய தம் தமது ஸ்தானத்தில் மகிழ்ச்சியுடன் விளங்குகின்றனர். அதனுல் வல்லவர்களுக்கும் வல்லவரான செந்தூரநிறம் கொண்ட பழம் பெருமானை விக்னராஜர் வழிபடத்தக்கவர்.*

लक्ष्मीसहायोऽद्वयकुञ्जराकृतिश्चतुर्भुजश्चन्द्रकलाकलापः।
मायाशरीरो मधुरस्वभावस्तस्य ध्यानात् पूजनात्तत्स्वभावाः॥ ६॥
संसारपारं मुनयोऽपि यान्ति स वा ब्रह्मा स प्रजेशो हरिः सः।
इन्द्रः स चन्द्रः परमः परात्मा स एव सर्वो भुवनस्य साक्षी॥ ७॥
स सर्वलोकस्य शुभाशुभस्य तं वै ज्ञात्वा मृत्युमत्येति जन्तुः।
नान्यः पन्था दुःखविमुक्तिहेतुः सर्वेषु भूतेषु गणेशमेकम्॥ ८॥
विज्ञाय तं मृत्युमुखात् प्रमुच्यते स एवमास्थाय शरीरमेकम्।
मायामयं मोहयतीव सर्वं स प्रत्यहं कुरुते कर्मकाले॥ ९॥
स एव कर्माणि करोति देवो ह्येको गणेशो बहुधा निविष्टः।
स पूजितः सन् सुमुखोऽभिभूत्वा दन्तीमुखोऽभीष्टमनन्तशक्तिः॥ १०॥

*லக்ஷ்மியின் துணைகொண்டவர், இணையற்ற யானை உருவினர், நான்குகைகள் உள்ளவர், சந்திரகலை அணிந்தவர், மாயையை உடலாகக் கொண்டவர், இனிய இயல்புள்ளவர், அவரது தியானத்தாலும் பூஜையாலும் அவரது நிலை பெறுவர்.*

ருஷிகளும் பிறவிக்கடலின் எல்லையை அடைகின்றனர். அவரே பிரும்மா, பிரஜாபதி, விஷ்ணு, இந்திரன், சந்திரன், பரம்பொருள் உலகனைத்திற்கும் உலகின் சுபத்திற்கும் அசுபத்திற்கும் ஸாக்ஷி. அவரை அறிந்தவன் மரணத்திலிருந்து மீள்கிறான். துக்கம் நீங்க வேறு வழியில்லை. எல்லா உயிரினங்களிலும் அமர்ந்துள்ள கணேசர் ஒருவரை மட்டுமறிந்து யமனின்வாயிலிருந்து விடுபடுகிறான். அவர் இப்படி மாயை வடிவான உடலை எடுத்து மயக்குகிறார். அவரே விதியையும் காலத்தையும் தினமும் அமைப்பவர், பலரிடம் பலவாறாக இருந்து அவரே செயல்படுகிறார். நாம் வழிபட, அவர் ஸுமுகராக (இனிய முகத்தவராக) யானை முகமுள்ளவராக எல்லையற்ற ஆற்றலுள்ளவராக வேண்டுவதை எல்லாவற்றையும் நிறைவுறச் செய்கிறார்.

स वै बलं बलिनामग्रगण्यः पुण्यः शरण्यः सकलस्य जन्तोः ।
तमेकदन्तं गजवक्त्रमीशं विज्ञाय दुःखान्तमुपैति सद्यः ॥ ११ ॥
लम्बोदरोऽहं पुरुषोत्तमोऽहं विघ्नान्तकोऽहं विजयात्मकोऽहम् ।
नागाननोऽहं नमतां सुसिद्धः स्कन्दाग्रगण्यो निखिलोऽहमस्मि ॥ १२ ॥

வலிவுள்ளவர்களின் வலிவு அவர். எல்லாவற்றிலும் முதலில் பூஜிக்கப் பெறுபவர், புனிதர், எவருக்கும் அடைக்கலமாகுபவர், அந்த ஒற்றைக் கொம்பரை யானை முகத்தவரை உணர, உடன் துக்கத்தைக் கடக்கிறான். ''நானே சரிந்த வயிறுள்ள லம்போதரன், நானே புருஷோத்தமன், நானே இடையூறுகளை அழிப்பவன், வெற்றிவீரன், யானைமுகத்தோன், வணங்கியவருக்கு விரும்பியதை முடித்துத் தருபவன், கந்தரின் அண்ணன், எல்லாமான அந்த பரமன் நானே, அவரேயான எனக்கு இடையூறு இல்லை. தொடங்கிய பணியில் குறையில்லை. புண்ய மில்லை, பாபமில்லை,'' என்ற இந்த நிலைத்த பாவனையுடன் ஆத்ம ஞானத்திற்கு விதையும் க்ஷேமத்தை விளைவிப்பதும் சுகத்தின் காரணமுமான கணநாததத்துவத்தை உணர்பவர் கணநாதரின் நிலையைப்பெறுவர். இந்த வித்யையை மகேசரிடமிருந்து பெற்ற கௌரி விரும்பியதை உடன் பெற்றாள். வணங்கத்தக்க அவள் இந்த மந்திரத்தை ஜபித்தாள். சிவனைப் பதியாக அடைந்த அவள் பெரும் மகிழ்ச்சி பெற்றாள்.

न मेऽन्तरायो न च कर्मलोपो न पुण्यपापे मम तन्मयस्य।
एवं विदित्वा गणनाथतत्त्वं निरन्तरायं निजबोधबीजम्॥ १३॥
क्षेमङ्करं सन्तत-सौख्यहेतुं प्रयान्ति शुद्धं गणनाथतत्त्वम्।
विद्यामिमां प्राप्य गौरी महेशादभीष्टसिद्धिं समवाप सद्यः।
पूज्या परा सा च जजाप मन्त्रं शम्भुं पतिं प्राप्य मुदं ह्यवाप॥ १४॥
य इमां हेरम्बोपनिषदमधीते स सर्वान् कामान् लभते स सर्वपापैर्मुक्तो भवति। स सर्वैर्देवैर्ज्ञातो भवति। स सर्वैर्देवैः पूजितो भवति। सर्ववेदपारायणफलं लभते। स गणेशसायुज्यमवाप्नोति य एवं वेद। इत्युपनिषत्॥

*இந்த ஹேரம்ப உபநிஷத்தை ஓதுபவன் விரும்பியதனைத்தையும் பெறுவான். பாபங்களிலிருந்து விடுபடுவான். தேவர்களனைவரும் இவனைப் புகழ்வர். தேவர்களனைவராலும் பூஜிக்கப் பெறுவான். எல்லா வேதபாராயணத்தின் பலனையும் பெறுவான். கணேசருடன் இரண்டறக்கலப்பான். இவ்வாறு உபநிஷதம் கூறுகிறது.*

## श्रीगणेशाथर्वशीर्षोपनिषत्

### ஸ்ரீ கணேச அதர்வசீர்ஷ உபநிஷத்

*முன்னுரை - ஸ்ரீமஹாகணபதியின் ஸகுண நிர்குண ஸ்வரூபங்களை விளக்க வந்த உபநிடதங்களில் இந்த உபனிஷத் தனிச்சிறப்பு வாய்ந்தது. மந்திரவடிவில் தியானம், ஜபம், பாராயணம், ஹோமம் என்று மானஸிக - வாசிக காயிக வழிபாட்டு முறைகளில் பெரிதும் வழக்கில் உள்ளது.*

*பரம்பொருளே அனைத்தின் மூலப்பொருள். கணேசரே அந்தப் பரம்பொருள். அவரே படைப்பவர், காப்பவர், படைத்ததைத் தன்னுள் லயமடையச் செய்பவர். படைக்கவிருப்பதன் மூலப்பொருள் அவரே. உலகமாகப் பல பலவாகத் தோன்ற அந்த மூலப்பொருள் வடிவுபெறச்*

செய்பவர் அவரே. உலகம் பௌதிகப்பொருளாக தெய்விகப் பொருளாக சேதனப்பொருளாக விதவிதமாகக் காட்சிதர மூலப்பொருளை உருமாற்றியவர் அவர். நானும் நீயும் அவரும் அவளும் அதுவுமாக உணரச் செய்தவர் அவர். பரம் பொருள் இவ்வாறு எல்லாமாக ஆகின்ற விந்தையை இந்தச் சிறு உபனிடதம் விளக்குகிறது.

வேதாந்ததேசிகர் தனது யாதவாப்யுதயத்தில் இறைவனுக்கும் உலகிற்கும் உள்ள தொடர்பை மிக அழகாக விளக்குகிறார்.

लीलातूलिकया स्वस्मिन्कृपारूषितया स्वयम्।
एको विश्वमिदं चित्रं विभुः श्रीमानजीजनत्॥

பரம்பொருள் சிறப்பும் குறிப்பீடுமற்றது. அது தன் நிலையிலிருந்தும் இறங்கித் தன்னைச் சீரும் சிறப்பும் குறிப்பு மனைத்தும் பெற்றவராக்கிக் கொண்டது. ''ஸ்ரீமான்'' ஆனார். உலகைப் பெற விழைந்தார். ஒரு அரும் செயலைப்புரியத் தன்னை எல்லாமறிந்தவராக, எல்லாம் வல்லவராக, எங்கும் நீக்கமற நிரம்பியவராக ஆக்கிக் கொண்டார். ''விபு:'' ஆனார்.

தனது பேரறிவை, வல்லமையை, எங்கும் நிறைந்தமையைச் சிறக்கச் செய்யத் தனக் கெனச் சாதனமோ துணையோ இல்லாது இயங்க நேர்ந்தது. சாதனமும் துணையும் தனக்கும் பெருமை தேடும். அது விபுவிற்கு இழுக்காகும். அதனால் தனித்திருந்தே செயல்பட்டார். ''ஏக:'' ஆனார்.

சிலந்தி ஒரு சிறு பூச்சி. அது தன்னைக் காட்டிலும் வேறுபடவிருக்கிற நூலைத் தன்னிடமிருந்து தானே இழைத்துத் தானே வலைகட்டி வாழ்ந்து தேவை நீங்கியதும் தன்வலையைத் தன்னுள் சுருட்டியடக்கித் தான் மட்டுமே மீதமாகிறது. இது பரம்பொருளின் இயல்பிற்கு எடுத்துக் காட்டான குட்டிப் பொருள். இது நூலை மட்டும் இழைக்கும். வலைமட்டும் தான் பின்னும். செயலிலும் செய்தபொருளிலும் எல்லையுண்டு. இவரோ வரம்பேதுமற்ற உலகைப்படைப்பவர். எல்லாம் என்ற வரம்பற்ற நிலையிலுள்ளவர். 'விச்வம்' என்ற உலகம். இன்றிருக்கும் நாளையிராது; இன்றிருப்பது போல் நாளையிராது.

அதனுலும் வி-ச்வம். ஒருவர் உணர்வதுபோல் மற்றவர் உணராதபடி அது விந்தைப்பொருள். "சித்ரம்" ஒன்றே பலவாகும். பல ஒன்ருகும். நிலேத்திருப்பதாகக் கண்டது நிலேயாது. எனதல்லாதது எனதாகும். எனதானது எனதல்லாததாகும். நானல்லாதது நாஞகும். இப்படி ஒரு விந்தைப் பொருள் ''சித்ரம்''

ஒன்றைப்படைப்பது என்பது என்ன? தாய் மகனேப் பெறுவது போல், தன்னேக் காட்டிலும் வேறுபட்டதாகத் தன்னிடமிருந்து தாஞக இருந்த தொன்றைத் தனித்துக் காட்டுவதாகும். தாய் தன்னேக் காட்டிலும் வேறுபட்ட தொன்றைத் தன்னுள் சுமந்து, தாஞகவும் தனதாகவும் அதனேப் பலவாறு உணர்ந்து, அது தானே தன்னுடையதோ மாத்திரமல்ல, அதற்கும் தனித்த இருக்கை உண்டு என்ற நினேப்புடன் தன்னிடமிருந்து அதனே வேறுபடுத்தி இயல்பாக அதனே வெளிக் கொணர்கிருள். வெளிக்கொணர்வதே படைப்பு - ஜனனம் என்பது. அதன் பின்பு அதில் தான் என்ற உணர்வு நீங்கித் தனது என்ற உணர்வு மட்டும் சிறிது நீடிக்கிறது. அப்படிப் பெற்றதை மறுபடித் தனதாகவோ தாஞகவோ மாற்ற அந்தத் தாயால் இயலாது. சிலந்தியின் இயல்பைவிட இந்தத் தாயின் இயல்பு வேறுபட்டது.

பரம்பொருள் தன்னிடமிருந்து வெளிப்பட்ட உலகத்தை மறுபடி தன்னுள்ளே மறையச் செய்வதும், வெளிப்பட்டது முதல் மறையும் வரையிலும் அதன் பிறகும் அது தனக்குள்ளே, தன்னேயே ஆதாரமாகக் கொண்டு, தானேயாக இருக்கும்படி செய்வதும் மிக மிக விந்தையான படைப்பு. ''சித்ரம் அஜீஜனத்''

இத்தகைய படைப்பு முறைகளில் ஈடுபாடுற்ற பரம் பொருள் தனது படைப்பெண்ணத்திற்கு உறு துணேயாக லீலே கருணே என்ற இரு உளப்பாங்குகளேக் கைகொண்டது. லீலே எனும் விளேயாட்டில் ஈடுபட்டவன் கற்பனேயால் பல முறைகளே வகுத்து அதற்குத் தாமே கட்டுப்பட்டவஞகப் பாவித்துக் கற்பனேயிலும் முறை கண்டு செயல்படநேர்கிறது. லீலேயில் கரிசனமும் பரிவும் இடம் பெற்ருல் முறை கெடும். ஆட்டம் வினேயாகிவிடும். விளேயாட்டு வினேயாகக் கூடாதென்ற நினேப்பை இழக்காமல், கரிசனமும் பரிவும்

கருணையாக இடம் பெறும்படி பார்த்துக் கொண்டு அதற்கு மாயை எனப் பெயரிட்டது. மாயை அதற்கு மட்டுமே விளங்கும். அதற்கு மட்டுமே வசப்படும். விளையாட்டிற்கும் கூட்டாளியும் விளையாடும் பொருளும் தேவை. அங்கும் அது ஒரு சித்திரம் - விந்தை புரிந்தது.

சைத்திரிகன் தூரிகையால் சுவற்றில் வர்ணங்களைக் கொண்டு சித்திரம் வரைகின்றான். அதில் அவனுக்குப் பூர்ண சுதந்திர முண்டு. உலகியல்பிற்கு மாறானதைக் கூட அதில் படைப்பான். அவன் வரைந்த யானைச் சித்திரத்தை யானை எனக் கண்டவனுக்கு சித்திரமும் சுவறும் வர்ணமும் கண்களில் படாது. சித்திரமெனக் கண்டவனுக்கு யானை தெரியாது. இந்த யுக்தியைப் பரம் பொருள் கை கொண்டதும் அது தன்னை ஸ்ரீமான் - விபு: என ஈசுவரனாகக் காட்டிக் கொண்டது. ஈசுவரன் சைத்திரிகனானான். உலகமெனும் சித்திரத்தை விசித்திரமாக வரைந்தான். அது சித்திரமான விந்தையான உலகமாக உலகினர் கண்ணில் உருப்பெற்றது - ஞானியர் கண்ணில் உலகமென்ற சித்திரமாகக் காட்சி தந்தது. சித்திரம் வரையச் சுவராகத் தன்னையே கொண்டது. ''ஸ்வஸ்மின்'' அதன் லீலை தூரிகையாயிற்று. கருணை நிறக்கலவையாயிற்று. தூரிகை அதனைத் தோய்த்துச் சுவற்றில் சித்திரம் வரைந்தது. ''லீலா தூரிகயா க்ருபா ரூஷிதயா''.

உலகை ஏன் படைக்கவேண்டும்? தான் தானாகவே இருந்து விடலாமே! உபநிடதம் இங்கு ஒரு இனம் புரியாத ரகசியத்தை வெளியிடுகிறது. ''ஏகாகியாக'' தனித்திருக்க அதற்குப் பிடிக்க வில்லையாம். விளையாட வேறொன்று அதற்குத் தேவைப்பட்டதாம். ''ஸ ஏகாகீ ந ரேமே'' விளையாடும் எண்ணமே தூரிகையானதில். கருணையின் நிறம் சிவப்பாதலால் அந்தச் செந்நிறம் தூரிகையில் தோய்க்கப்பெற்று உலகமாகிய சித்திரமாக, சித்திரமாகிய உலகமாக மரத்தில் மறைந்த மாமதயானையாக, யானையில் மறைந்த மாமரமாக - அநிர்வசநீயமாக இந்த உலகத்தை ''அஜீஜனத்'' பெற்றது. பெற்றுக்கொண்டிருக்கிறது. பெற்றுக் கொண்டிருக்கும். அப்பய தீக்ஷிதர் இதனைவேறுவிதமாகக் காண்கிறார்.

निरुपादान संभारं अभित्तावेव तन्वते।
जगच्चित्रं, नमस्तस्मै कलाश्लाघ्याय शूलिने॥

இறைவன் ஒப்பற்ற பாராட்டத்தக்க கலைஞன். எழுத இடமும் சாதனங்களும் துணையும் கொண்டவன் சித்திரம் வரைவதில் வியப்பதற்கு என்ன இருக்கிறது? சாதனமில்லை, வர்ணக்கலவை இல்லை. எழுதச் சுவர் கூட இல்லை, ஆனால் மிக அழகாக இயங்குகிற உலகைச் சித்திரமாகப் படைத்திருக்கிறார். உற்று நோக்கினால் அழிக்க உதவுகிற படையாகிய சூலம் மட்டும் அவரிடமுள்ளதாகக் தெரிகிறது. அதைக் கொண்டு படைப்பா? வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம். தானே தன்னிடம் தன்னால் தானாகியதொன்றை உலகமாக வெளிப்படுத்தினார் என்ற தேசிகரின் கருத்து. தன்னைக் காட்டிலும் வேறொன்றையும் கொள்ளாத இறைவன் தன்னைக் காட்டிலும் வேறொன்றிருப்பதாகக் காட்டினானே அது தான் அவனது விசித்ரப் படைப்பெனக் கூறி வியக்கிறார் அப்பயதீக்ஷிதர்.

மற்றொரு கவி இறைவனின் உலகப்படைப்பை வேறு விதமாகக் கண்டு வியக்கிறார்.

विधत्ते घटं मृत्स्नया कुंभकारः विधत्ते पटं तन्तुना तन्तुवायः।
स्वतः स्वत्र सर्वं जगन्निर्मिमाणं कुलालात्कुविन्दाच्च भिन्नं नुमस्तत्॥

''குயவர் மண் கொண்டு குடம் வனைகிறார். நெசவாளர் நூல் கொண்டு துணி நெய்கிறார். தன்னைக் கொண்டே தன்னிடத்திலேயே அனைத்து உலகைப்படைக்கிற பரம்பொருள் குயவரையும் நெசவாளரையும் விட வேறுபட்டது. அதனை வணங்குவோம்''.

கருத்து மனத்தில் ஆழப்பதிய இவ்விளக்கங்கள் உதவுகின்றன. அறிவு இதனை ஏற்றுத் தன்னறிவாகக் கொண்டு இந்த விந்தையைத் தமக்குள் கண்டனுபவிப்பவர் வெகுசிலரே!

இந்த படைக்கிற ஈசுவரன், படைக்கப்பெறுகிற உலகம், இந்த இரண்டின் தொடர்பப் பற்றிச் சிந்திப்பவனும்

இவ்விரண்டின் தொடர்பால் பாதிப்பை உணர்பவனுமான ஜீவன் என்ற முக்கோணங்களின் தனி இயல்பையும் தொடர்பையும் பற்றி ஆராய்ந்து உபநிஷதம் விளக்கம் தருகிறது. உலகமென்று தனித்தில்லை. பல் கோடி ஜீவர்கள் ஏனையவை இவர்களின் கூட்டே - ஸமஷ்டியே உலகம். தனித்த உயிரினமே ஜீவன். (வியஷ்டி). காடு என்பது ஸமஷ்டி. தனிமரம் வியஷ்டி. தனிமரமின்றிக் காடு இல்லை, எனினும் இவற்றின் படைப்பின் முக்கிய காரணமான வினைத்தொடர்பு இரண்டு நிலைகளிலும் வேறுபடுகிறது. ஜீவன் தனது வியஷ்டி நிலையில் தனது வினைப்பயனை அனுபவிக்கப் பிறவி பெறுகிருன். ஸமஷ்டியான உலகம் தனது ஸமஷ்டிவினைத் தொகையை அனுபவிக்கத் தோன்றுகிறது. ஆனுல் உலகின் கூட்டுப்பொருளும் தனி ஜீவனின் கூட்டுப் பொருளும் ஒன்றே. அது இருவகைப்படும் சித் - அசித் என. சித் எனும் சக்தி இயக்க, அசித் எனும் ஜடம் இயங்குகிறது. ஆனுல் இது சித் இது அசித் என வேறுபாடு உணரமுடியாதபடி இரண்டும் குழப்பிவைக்கப்பட்டுள்ளது. உலகிலும் ஜீவனிலும் இது பொதுவாகக் காணப்படுகிறது. இவ்வாறு சித்தும் அசித்தும் விசறியுள்ள நிலை அநாதியானது. ஜீவன் தோன்றி வாழ்ந்து மறைவதுபோல் உலகமும் தோன்றி வாழ்ந்து மறைகிறது. வினையும் பங்கு பெறுகிறது. வினை என்று ஒன்று தனித்தில்லாவிடில் உலகில் விசித்ரம் எதுவுமின்றி யந்திரப்படைப்பு போல் ஒரே சீராக ஒருபொருளே இருக்கும்.

இந்த விந்தைக்குரிய செயலின் முழுப்பொறுப்பு மாயையிடம் உள்ளது. லீலையும் கருணையும் இதில் சமமாகப் பங்குபெறுகின்றன. லீலை கருணையாகவும் கருணை லீலை யாகவும் ஆவதுண்டு. தூரிகை வரைந்ததா, வர்ணம் வரைந்ததா என்று வேறுபடுத்திப் பார்க்க இயலாது. இந்த மாயை இறைவனுக்கும் ஜீவனுக்கும் இடையே, இவ்வாறு இறைவனுக்கும் உலகிற்கும் இடையே உள்ள தொடர்பை மறைக்கும். சிலருக்கு மறைக்காமல் அதுவே விளக்கவும் கூடும்.

இந்த விளக்கத்தைத் தன்னறிவாகப்பெற நூலறிவாக விருக்கிற உபநிஷதபோதனை உதவுகிறது. உபநிஷதம் மாயையின் உண்மை நிலையை விளக்கி, அதன் பின்புலனுக

உள்ள பரம்பொருளின் சுய உருவத்தையும் விளக்குகிறது. அவ்வாறு அது விளக்குவதைப் புரிந்து கொள்ள இறையருளே தான் உதவுகிறது. இதனை எளிதில் வேண்டிப்பெறலாம். கணேச அதர்வ சீர்ஷத்தின் சாந்தி மந்திரங்கள் அந்த வேண்டுதலைக் கூறுகின்றன.

## शान्ति पाठः - சாந்திபாடம்

ओं भद्रं कर्णेभिः शृणुयाम देवाः । भद्रं पश्येमाक्षभिर्यजत्राः ।
स्थिरैरङ्गैस्तुष्टुवांसस्तनूभिः । व्यशेम देवहितं यदायुः ॥

''ஓம் - (இது மங்கள ஒலி) தேவர்களே (உங்கள் அருளால் எப்போதும்) நாங்கள் காதுகளால் மங்களமானவற்றையே கேட்போம். வழிபாட்டுக்குரியவர்களே! வழிபடுபவர்களைக் காப்பவர்களே! மங்களமானவற்றையே கண்களால் காண்போம். திடமுள்ள உடல்களாலும் உள்ளங்களாலும் உங்களைப் போற்றுவோம். தேவர்களுக்கு உவப்பாகும் வகையில் ஆயுளை அனுபவிப்போம்.''

ஜீவனாகத் தோன்றுபவனுக்கு நான்கு உபகரணங்கள் தரப்பெறுகின்றன. (1) உடல், (2) உள்ளமும் பொறிகளும், (3) பொறிகளாலும் உள்ளத்தாலும் உணரத்தக்க - அனுபவிக்கத் தக்க வெளி உலகம், (4) பொறிகளாலும் உள்ளத்தாலும் வெளியுலகை அனுபவிக்க வாய்ப்பு. இந்த நான்கும். சீரமைய உள்ளம் உடல் ஆத்மா பிராணன் என்ற நான்கின் தொடர்ந்த கூட்டு அமைய வேண்டும். இது தான் ஆயுள். இந்தக் கூட்டைப் பிரிப்பதும் பிரியாதிருக்கச் செய்வதும் காலம். இந்தக் கூட்டைக் கொண்டு பெறுகிற அனுபவம் விரும்பத் தக்கதாகவும் (பிரியம்) நன்மை தரத் தக்கதாகவும் (ஹிதம்) மட்டுமிருந்தால் போதாது; மங்களத்தன்மை பெற்றதாகவும் இருக்கவேண்டும். பிரியத்தையும் ஹிதத்தையும் வரையறுத்து விளக்க முடியலாம். மங்களத்தை அவ்வாறு விளக்க முடியாது. பிரியம் கேடு விளைவிக்கலாம். ஹிதம் உடனடி நன்மை செய்யாதிருக்கலாம். மங்களம் என்றும் எங்கும் ஒரு ஆனந்தச் சூழ்நிலையை யமைத்துத்தரும். அதனால் அந்த நான்கின் கூட்டு மங்களம் தரவல்லதாக அமைந்தால் தான் தேவர்களுக்கு இதமாக ஆயுள் அமையும். உலகமும் இறைவனும் ஜீவனுக்கு அனுகூலமாக

இருக்க ஒவ்வொரு ஜீவனுள்ளும் தேவர்கள் என்ற மனிதசக்திக்கப்பாற்பட்ட சக்தி பெற்றவர் குடி கொண்டுள்ளார்கள். கண்ணில் சூரியன், வாயில் அக்கினி, மனத்தில் சந்திரன் என்றவாறு. இவர்கள் உலகோடும் தெய்வத் தோடும் நம்மை மங்களமாகப் பொறுத்துகின்றனர். நல்லதைப் பார்த்துப் பழகிய கண்களின் தேவரான சூரியன் மங்களமான உலகைப் பார்க்க வாய்ப்பு தருகிறார். நல்லதையே பேசிப்பழகிய வாயின் அதிபராகிய அக்னி மங்களமாகப்பேச வாய்ப்பளிக்கிறார். இப்படி உடலும் உள்ளமும் பொறிகளும் நல்லதையே செய்கிற பழக்கத்தால் அந்த தேவர்கள் இவ்வுடலில் தொடர்ந்து கூட்டு கலையாமல் மங்களமானவற்றை உணரப் பெரிதும் உதவுகின்றனர்.

முதலில் ஒருவழிப்பாதையான காதுகளை நல்லவற்றைக் கேட்கப்பழக்குவோம். தேவர்கள் மங்களமானவற்றைக் கேட்க அருள்வார்கள். இருவழிப்பாதைகளான கண் - இதனைத்தொடர்ந்த மற்ற இருவழிப்பாதைகளான பொறிகள் நல்லதைக் கண்டுணர்ந்து - மங்களமான புலன்களை அனுபவிப்போம். உடலுக்கும் நல்லதைச் செய்யப்பழக்கி திடமும் அழகும் பெற்ற ஆரோக்யத்தைப் பெறுவோம். இந்த உடலும் மற்றதும் தேவர்கள் தாம் வசிக்க ஏற்றதென மகிழ்ந்து ஏற்று கூட்டுக்கலையாமல் மங்களமாக வாழ வழி வகுக்கட்டும். அண்டமாகிய உலகில் எவ்வாறு ஸூர்யன் அக்னி வாயு முதலிய தேவர்கள் மழை வெயில் காற்று முதலியவற்றை அனுகூலமாக உள்ள நிலையில் ஸாதகமாகவும், தேவர்களுக்கு ஒவ்வாத நிலையில் பாதகமாகவும் செய்கிறார்களோ, அவ்வாறே பிண்டமாக உள்ள இந்த ஜீவனிடம் அனுகூல நிலையில் ஸாதகமாகவும் பிரதிகூல நிலையில் பாதகமாகவும் வாழ்வை அமைக்கிறார்கள். ஜீவனே தன்னைக் கட்டுப்படுத்தி நல்வாழ்விற்கான பழக்கங்களைக் கையாளவேண்டுமெனினும், அவனது முயற்சிக்கு உறுதுணையாக தெய்வபலத்தையும் வேண்டிப்பெறுகிறான்.

நாம் விரும்பிப் பிறக்கவில்லை. விதியின் திட்டத்தில் நம் வாழ்வும் அடங்கும். இப்பிறவிக்கான மூலவினைகளை ஒட்டித் தெய்வம் நம் மீது இந்த வாழ்வைச் சுமத்தியுள்ளது. தேவஹிதமாக வாழ்வதில் சிறிது சுதந்திர முண்டு. நல்வினை

பயனளிக்கும் போது அதனைத் தூண்டி விட்டுப் பெரிதாக்கலாம். தீவினை பயனளிக்கும் போது அது மேலும் வளராமல், நேரிடைப் பாதிப்பு ஏற்படாமல் தற்காத்துக் கொள்ளலாம். வினையும் கழிந்துவிடும். சுகம்நேரும் போது மதர்த்துவிடாமல், துக்கம் நேரும்போது தளர்ந்து விடாமல் சமநோக்குடன் வாழ்வதே தேவஹிதமாக ஆயுளைக் கழிப்பதாகும்.

स्वस्ति न इन्द्रो वृद्धश्रवाः। स्वस्ति नः पूषा विश्ववेदाः।
स्वस्ति नस्तार्क्ष्यो अरिष्टनेमिः। स्वस्ति नो बृहस्पति र्दधातु ॥
ओं शान्तिः शान्तिः शान्तिः ॥

''நிலைத்த பெரும் புகழ்கொண்ட இந்திரன் நலம் அளிப்பாராக! புஷ்டிதருகிற சூர்யன் எல்லாமறிந்தவராக நலம் தருவாராக! தடையுறாத நடையுடைய தார்க்ஷ்யர் நலம் தருவாராக! பிருஹஸ்பதி நமக்கு நலம் தருவாராக! மங்களம்! சாந்தி நிலவட்டும்! சாந்தி நிலவட்டும்! சாந்தி நிலவட்டும்!

அண்டமளாவிநிற்கிற கணேசரது நான்குகைகள் வெளியெங்கும் பரவிநிற்பதை ஸ்வஸ்திகச் சின்னம் காட்டும். இவற்றில் கிழக்கிலிருந்து முறையே இந்திரன் ஸூர்யன் தார்க்ஷ்யர் பிருஹஸ்பதி என்ற நால்வரும் அதிதேவதையாக நின்று புகழ், அறிவு, வேகம், மேதை என்ற நான்கு சிறப்புகளையும் அளிப்பர். (தார்க்ஷ்யர் என, அரிஷ்டநேமி தார்க்ஷ்யர் எனக் கசியபமுனிவரைக் குறிப்பர். கசியபருக்கு விநதையிடம் தோன்றிய கருடனேதார்க்ஷ்யர் என்பர்.)

சாந்தி என்பது துன்பமடங்கி மனம் அமைதியுறும் நிலை. ஆத்யாத்மிகம் ஆதிதைவிகம் ஆதிபௌதிகம் என, துன்பம், நேர்கிற காரணத்தையொட்டி மூவகைப்படும். நோய், கோபம் முதலிய எண்ணக்குமுறல் இவை காரணமாக ஏற்படுவது ஆத்யாத்மிகம். இடி மின்னல் வெள்ளம் முதலியவற்றால் ஏற்படுவது ஆதிதைவிகம். சூழ்நிலையில் திருடன் புலி சிங்கம் எதிரி இவர்களால் நேர்வது ஆதிபௌதிகம். மூவகைத் துன்பங்களும் நீங்கி, தெய்வவழிபாடு முதலியவற்றில் ஈடுபடுகிற ஆத்யாத்மிக சாந்தியும், ஸுபிக்ஷம் முதலிய

ஆதிதைவிகசாந்தியும் உற்றுர் உறவினர் நண்பர் சுமுகம் வாகன வசதி முதலிய ஆதிபௌதிக சாந்தியும் நிலவட்டும்.

இது உபநிடதத்தின் முன்கூறும் சாந்திபாடம்.

## उपनिषत् - உபநிஷத்

अथ गणेशाथर्वशीर्षं व्याख्यास्यामः। ओं नमस्ते गणपतये। त्वमेव प्रत्यक्षं तत्त्वमसि। त्वमेव केवलं कर्तासि। त्वमेव केवलं धर्तासि। त्वमेव केवलं हर्तासि। त्वमेव सर्वं खल्विदं ब्रह्मासि। त्वं साक्षादात्मासि नित्यम्।

''மங்களம்! கணேச அதர்வசீர்ஷ உபநிஷத்தை இனி விளக்குவோம். ஓம் கணபதியான உமக்கு நமஸ்காரம், நீரே கண் கண்ட தத்துவம். நீரே - நீர்மட்டுமே உலகைப்படைப்பவர், உலகைத் தாங்கி வாழவைப்பவர், நீரே (அதனை) தம்முள் அடக்கிமறைப்பவர். காண்பதனைத்துமே பிரும்மமாகக் காட்சிதருகிறீர். நீரே என்றுமுள்ள ஆத்மா.''

எல்லாமாயிருக்கிற பரம் பொருள் நீர். அந்தப் பரம்பொருளே கண் கண்ட தெய்வமாக என் முன் தோன்றியுள்ளீர். உமக்கு நமஸ்காரம். உலகத்தைச் சேதனம் அசேதனம் தேவர் மனிதர் விலங்கு அரக்கர் ஆண்பெண் எனப் பலவினங்களாகத் தோன்றச் செய்து ஒவ்வோரினத்தையும் கணமாக (மதிக்கக் கூடிய கூட்டமாக)ப் பிரித்து அந்த கணம் ஒவ்வொன்றின் பதியானவர் நீர். உமக்கு நமஸ்காரம். ஒவ்வொரு உயிரினத்திலும் (ஜீவனிலும்) பல கணங்கள் (தாதுக்கள், கோசங்கள் என்றவாறு). இவை ஒவ்வொன்றும் தனித்தியங்கினுலும் ஒருங்கிணைப்பிற்கு உட்படுவதால் கணங்கள். இத்தனையும் தோன்றுவதற்கான தத்துவம் - அழியா மூலப் பொருள் நீர். வெளிப்பாடற்றிருந்த தன் மூலநிலையிலிருந்து — தன்னிடமிருந்து உலகை வெளிப்படுத்தினீர். இந்த மாறுபடுகின்ற உலகம் உம்மில் கால்பங்கே. மற்றபகுதி மாறுபடாத அமுதநிலையிலுள்ளது. உலகைச் சித்திரகாரன் சித்திரம் படைப்பது போல் படைத்தீர். அதனைத் தானே தன் இயல்பாக வாழவிட்டு அதன் ஆதாரமாக

நின்று தாங்கினீர். அதனை உருமாற்றத்திற்கு உட்படுத்தி மாறிக்கொண்டிருப்பதாக உணர்த்தினீர். அப்படி விரிந்து கிடக்கின்ற பிரபஞ்ச மனைத்தும் நீரே என்பதனை ஞானிகள் உணர்கிறவாறு பிரும்மமாக உள்ளீர். ஜடப்பொருளான உடலே தான் என்ற அறியாமையை நீக்கி, உடலுடன் ஐக்யமாகி வினைப்பயனை அனுபவிக்கிற ஜீவநிலை தான் தனது உண்மை நிலை என்று கொண்டிருந்த அறியாமையையும் நீக்கி ஒன்றிலும் ஒட்டாத ஒரே தத்வமான, அந்தர்யாமி யாகி நின்று இயக்குகிற ஆத்மா நானே என்றும் உணரச்செய்கிறீர்.

ऋतं वच्मि। सत्यं वच्मि।

உலகின் ஒழுங்கும் உண்மையும் நீரே என வாய்விட்டுக் கூறுவேன். செயலற்று மாறுபாடற்று இரண்டற்றிருந்த பொருள் உலகமானதும் செயலும் மாறுபாடும் பலவாவதும் அதன் இயல்பானது. ஆனால் செயலிலும் மற்றவற்றிலும் ஓர் ஒழுங்கு - வரைமுறை - ருதம் - நேர்மை துலங்குகிறது. அந்த ஒழுங்கும் ஒருஸத்யமே. இதை வியாவஹாரிக (நடைமுறை) ஸத்யமென்பர். (உலகினர் இதிலிருந்து மாறுபடும் போது அந்ருதம் - நேர்மையின்மையை ஒழுங்கின்மையை காட்டுகிறார்கள்.) உலகமாக உணரப்பெறும் போதே அதன் உண்மை நிலையான - (ஸர்வம் கல்விதம் பிரம்ஹ) இதனைத்தும் பரம்பொருளே என்ற உணர்வு - பாரமார்த்திக ஸத்ய மாகும். இந்த இரு ஸத்ய நிலைகளும் நீரே! என்று உறுதியாகக் கூறுவேன்.

अव त्वं माम्। अव वक्तारम्। अव श्रोतारम्। अव दातारम्। अव धातारम्। अवानूचानमव शिष्यम्। अव पश्चात्तात्। अव पुरस्तात्। अवोत्तरात्तात्। अव दक्षिणात्तात्। अव चोर्ध्वात्तात्। अवाधरात्तात्। सर्वतो मां पाहि पाहि समन्तात्।

நீர் என்னைக்காப்பீர். உம் பெருமையைக் கூறுபவரையும், அதனைக் கேட்பவரையும் காப்பீர். திரும்பத்திரும்பப் புரிகிறவரை போதிப்பவரையும் அதனைக்கேட்டறிகிற சிஷ்யனையும் காப்பீர். எம் முன்னும் பின்னும் இடத்திலும் வலத்திலும் மேலும் கீழும் சுற்றி எங்கும் (நின்று) காப்பீர்.

*பர நிலையிலிருந்து இறங்கிக் கரிசனமும் பரிவும் மிக்கவராக எம்முன் பிரஸன்னவதனராகக் காட்சிதருகிறீர். அறியாமையால் வழியறியாமல் திணறுகிற எம்மைச் சூழந்து நின்றணைத்துக் காப்பீர். எம்மைக் காக்க மேலும் இறங்குவதால் உமக்குச் சிறுமை நேராது.*

**त्वं वाङ्मयस्त्वं चिन्मयः। त्वमानन्दमयस्त्वं ब्रह्ममयः। त्वं सच्चिदानन्दाद्वितीयोऽसि। त्वं प्रत्यक्षं ब्रह्मासि। त्वं ज्ञानमयो विज्ञानमयोऽसि।**

*''நீரே வாக்கு வடிவிலுள்ள நூல்களும் அவற்றால் பெறுகிற பேரறிவுமாவீர். (உடலும் உள்ளமுமடங்கிய நிலையில் தனிமையில் பெறப்பெறுகிற) ஆனந்தமும் பரம்பொருளும் நீரே! பேரிருக்கையும் பேரறிவும் பேராற்றலும் (இரண்டாவதன் உணர்வற்ற) அத்வைதமும் நீரே! (ஞானியின் ஸமாதி நிலையில்) நேரிடையாக உணரப்பெறுகிற பரம் பொருளும் நீரே. உம்மை அறிய உதவுகிற ஞானமும் விஜ்ஞானமும் நீரே.''*

*பிரபஞ்ச அளவில் ஸ்தூலமாகக் காணப்பெற்றாலும் உண்மை நிலை உணர உதவுகிற வேதமெனும் வாக்கு. உணரும் ஆற்றலளிக்கிற சித் சக்தி, உணர்வதால் பெறுகிற - உடலும் உள்ளமும் கலக்காத - இனமறிய இயலாத ஆனந்தம். ஸத்தும் சித்தும் ஆனந்தமும் அத்வைதமுமெனச் சுட்டிக் காட்டுகிற பரம்பொருள், பரம்பொருள் நிலை உணரத்தக்க சமாதி நிலையில் திரிபுடியற்ற ஞானம், திரிபுடியால் பெறப்பெறுகிற தத்துவ விளக்கம் என்று ஸூக்ஷ்ம - அதிஸூக்ஷ்ம - பரநிலைகளில் நிற்பவர் நீர் என்பதையும் உணர்கிறேன். அந்த ஸூக்ஷ்ம நிலையில் அந்தப்பின் புலனால் உலகம் ஸ்தூலத்தோற்றம் பெறுவதால் காட்சிப் பொருளாவதை உணர்கிறேன்.*

सर्वं जगदिदं त्वत्तो जायते। सर्वं जगदिदं त्वत्तस्तिष्ठति।

सर्वं जगदिदं त्वयि लयमेष्यति। सर्वं जगदिदं त्वयि प्रत्येति।

त्वं भूमिरापोऽनलोऽनिलो नभः। त्वं चत्वारि वाक्पदानि।

''இந்த உலகனைத்தும் உம்மிடமிருந்து, உம்மைக் காரணமாகக் கொண்டு, உம்மால், உம்மீது வெளிப்படுகிறது. ஆதாரமான உம்மீது நிலைத்து உம்மால் நிற்கிறது. உம்மிடமே அதுகரைந்து மறைய விருக்கிறது. சித்திரமெனும் வர்ணக் கலவையே பல உருவங்களாகத் தோன்றுவதுபோல் உலகமனைத்தும் உம் மீது தோன்றுகிறது. நீரே (அவ்வாறு விரிவடைந்து வேறுபட்ட பலவாக) பூமி ஜலம் நெருப்பு வாயு ஆகாசம் என்ற பூதங்களாக, பரா, பச்யந்தீ, மத்யமா, வைகரீ என ஒலியாக மூலாதாரத்திலிருந்து கிளம்பி மணிபூரகம் அநாஹதம் விசுத்தி என்ற சக்கிரங்களில் விரிவு பெற்ற வாக்காக - வெளிவருபவர். பின் சொல்வடிவம் பெறுபவரும் நீரே.''

கடலிலுள்ள நீர் அலை நுரை என்ற பல மாற்றங்களைப் பெற்று வெளிப்பட்டுக் கரைகடந்து பின் வந்த வழியே திரும்பி கடலினுள் சேர்ந்து, பெற்ற மாற்றங்களனைத்தையும் இழந்து கடல் நீராகவே ஆகிறது. ஆனால் கடலின் மீது, கடலின் அலை, கடல் நீரின் நுறை என்ற தோற்றங்களால் தனி இருக்கை பெற்றது போல் தோற்றம் பெறுகிறது. சித்திரத்தில் யானைபோல்.

ஆகாயம் எனும் பெருவெளி இயக்கமற்று நீக்கமற நிரம்பியிருந்தது. ஒலி யென்ற ஆதிதத்வம் (குண்டலினியில் போல்) விளக்கம் பெறாதிருந்தது. ஆகாயத்தில் குணஸம நிலை மாறி ரஜோகுணம் செயல்படச் சலனம் தோன்ற வாயுவும் ஆகாயதத்வமான ஒலியில் அதிர்வும் புரிபடாத ஒலியும் வெளியாயின. வாயுவில் ரஜோகுணம் மிக அக்னியும், தமோ குணம் அதிகமாக ஜலமும், தமோகுணத்தின் தடை ஸ்திர குணமாகி பிருதிவியும் தோன்றின. ரஜோகுணத்தால் நிறம் பெற்று உருவம் பெற்ற தத்துவங்கள் முறையே இறுகி நீரும் நிலமுமாயின. ஒலியும் ஸ்தூலப்பொருள் மீது தடை பெற்றதால் விளக்கம்பெற்ற ஒலியாகியது.

இந்தமாற்ற மனைத்தும் ஸ்ரீ கணேசர் எனும் பரம் பொருள் தன்னில் ஒரு பகுதியை மூலப்பிரகிருதியாக்கி, அதன் சமகுணநிலையை மாற்றி மகத் அஹங்காரம் என்ற நிலைக்குக் கொணர்ந்து, ஸூக்ஷ்மமான ஐம்பூதங்களை ஸ்தூலபூத நிலைக்குக்

கொணர்ந்து. ஒன்றினுள் மற்றவையைப் புகுத்தி உருவம் பெறச் செய்து, மறுபடி வேறுபட்டபல கூறுகளாக்கி இணைத்து உலகமாக்கிய தென்பதை உபநிடதம் விளக்குகிறது.

ஒலியும் ஆகாசத்தின் தத்துவமாக நின்ற நிலையிலிருந்து இயக்கமுற்று அலையலையாக மோதா (அநாஹத) ஒலியாக 'ஓ' என்றாகிப் பின் இறுகியவற்றில் மோதித் தானும் பல கூறுகளாக, மோதிய இடத்திற்கேற்ப வடிவுற்று வழங்குகிற எழுத்தாகச் சொல்லாக மொழியாக உருப்பெற்றது. இந்நிலை இன்றும் தொடர்கிறது. அடிவயிற்றிலிருந்து கிளம்பிய ஒலி காற்றாகி மார்பில் சூடுபெற்று தொண்டை வழியே வெளிப்பட்டுத் தொண்டை பற்கள் அண்ணம் நாக்கு என்று ஒவ்வொன்றின் மீதும் மோதிப் பேச்சாக வெளிப்படுகிறது. மூலாதாரத்திலிருந்து (அடிவயிற்றிலிருந்து) மூல ஒலியை ஸ்ரீ கணபதியே கிளப்பி வாய்வழியே பேச்சாக வெளிப்படுத்துகிறார்; மூலாதாரத்தில் சக்தியாக உள்ள விநாயகரே ஒலியாகப் பேச்சாக வெளிவருகிறார் என்ற உண்மை நிலையும் புரிகிறது. ஆகாயம் என்ற மூலதத்துவத்திலிருந்து பிருதிவீதத்துவம் வரை நடக்கிற பரிணாமமும் அன்றாடம் நிகழக் கூடியதே. அதனால் ஒவ்வொரு நொடியிலும் அவர் படைப்பு காப்பு லயம் என்ற மூன்றையும் தொடர்பறாமல் செய்து. கற்பமுடிவில் மூலதத்துவங்களையே தம்முள் லய மடையச் செய்கிறார். இந்த ஓயாது ஒழியாது செய்கிற செயல்முறையில் தடையின்றி ஈடுபடுவது தன்னுள் ஒரு சிறு பகுதியைக் கொண்டே. பெரும்பகுதி இவற்றிற்கு அப்பாலுள்ளது.

**त्वं गुणत्रयातीतः । त्वं काल त्रयातीतः । त्वं देहत्रयातीतः ।**
**त्वं मूलाधारस्थितोऽसि नित्यम् । त्वं शक्तित्रयात्मकः ॥**

நீர் முக்குணங்களுக்கும் அப்பாற்பட்டவர், நீர் முக்காலங்களுக்கும் அப்பாற்பட்டவர், நீர் மூன்று தேகங்களுக்கும் அப்பாற்பட்டவர். நீர் எப்போதும் மூலாதாரத்தில் இருப்பவர். நீர் மூன்று சக்தி வடிவினர்.

பரம்பொருள் தம்மிடமிருந்து பிரகிருதியைத் தனிப்படுத்தியது. தான் ஈசுவரனாக நின்று விளையாடும் நிலைக்களன் அது. முன்னிருந்த உலகமனைத்தும் மூலப்பொருள் நிலைக்கு மாற்றப்பட்டபோது முன்னிருந்த தனித்தன்மை மறைந்து எல்லாம் ஒன்றானது. ஒன்றாயிருந்த மஹத்தத்வம் உலகின் மொத்தநிலை என்ற தன் தனி இருக்கையை இழந்து மூலப்ரகிருதியினுள் மறைந்தது. மூலப்பிரகிருதியும் தன் தனித்தன்மை இழந்து பரம்பொருளிடம் மறைந்து விட்டது. மறுபடி பிரகிருதியாக வெளிவந்த நிலையில் தானியங்கியாக மாறி மாறுதல்பெற முன்வராத நிலையில் மாறுதல் கொணர உதவுகிற அதன் மூலகுணங்களான ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற மூன்றும் தனி உருப்பெறாமல் இருந்தன.

பிரகிருதி செயல்படத் தொடங்கியதும் அவை தனிப்பட்டன. எனினும் அவை தனித்தியங்காத நிலை.

பிரகிருதியே பரம்பொருள் தான் எனில் இந்த முக்குணங்களும் அவர்தாமே. பிரகிருதி தானியங்கக் காலத்தை எதிர்பார்த்தது. காலம் ஒழுங்கை வகுப்பதற்கான தத்துவம். காலம் செயல்பட்டது. பிரகிருதி உலகமாகத் தொடங்கியது. ஸத்வம் முதலியவற்றிலும் இயக்கம் ஏற்பட்டது. ஸத்வம் முதலியவை இயங்கத் தொடங்கியதும் அதன் மூல நிலையான மகத்தத்துவத்தில் ரஜோகுணம் தன் சிறப்பைக்காட்ட அஹங்காரதத்துவமும், தமோகுணம் தன் சிறப்பைக் காட்ட உலகமும் தோன்றியது. தோன்றிய உலகம் மேலும் மாறுதல்களுக்கு உட்பட, காலமும் மாறுதலுக்குட்பட்டது. கடந்தகாலம் நிகழ்காலம் வருங்காலம் என. பஞ்சபூததத்வங்கள் ஒன்றில் மற்ற நான்கும் இணைந்து பரம ஸூக்ஷ்மமான உலகமும், ஸூக்ஷ்ம பூதங்களாயிருந்து ஐந்து பெரும்பூத நிலைக்கு வந்தவை பல்வேறு கூறுகளாக இணைய ஸ்தூல உலகமும் தோன்றியது.

முன்னளிருந்த உலகில் வாழ்ந்தவரின் வினைகள் தனித்தனியே குளிர்பதனத்தில் இருப்பது போல் மூலப்ரகிருதியில் மறைந்தவை வெளிப்பட்டு ஸ்தூல - ஸூக்ஷ்மக்கலவையை தேவன் மனிதன் மிருகம் புழு மரம் கல்

மண் என்று பிரித்து நெறிப்படுத்தின. ஸூக்ஷ்மபூதக் கலவையாலான ஸூக்ஷ்ம சரீரத்தையும் ஸ்தூல பூதக்கல வையாலான ஸ்தூல சரீரத்தையும் இந்த வினையால் உண்டான காரண சரீரம் கட்டுப்படுத்தியது. முன் பிறவிகளில் பெற்ற வாஸனைகளும் ஸம்ஸ்காரங்களும் இந்தக்காரண சரீரத்தின் மூலப்பொருளாயின.

இந்த மூன்று சரீரங்களைப் பெற்ற ஜீவர்களின் அந்தர்யாமியாக நின்று கட்டுப்படுத்துபவரான நீர் இம் மூன்று தேகங்களுக்கும் அப்பால் உள்ளீர். அதே சமயத்தில் குணம் மூன்றும் காலம் மூன்றும் தேகம் மூன்றும் இயங்க, இயக்க சக்தியாக ஒவ்வொன்றின் மூலாதாரத்திலும் எப்போதும் இருக்கிறீர்.

மூலாதாரத்தில் மூலசக்தியாக நின்று ஜீவன் இயங்க இச்சா சக்தி ஞான சக்தி கிரியாசக்தி என்ற மூன்று சக்தியாக விரிவடைகிறீர். சக்தி சக்திமானைக் காட்டிலும் வேறுபட்டதல்லவா? ஆனால் சக்தியாக மட்டும் எமக்கு விளங்குகிறீர். சக்திமானை உம்மை உணர இந்த மூன்று சக்திகளே உதவவேண்டும்.

சக்தி வெளிப்பட இச்சை தேவை. தானே தன்னிச்சையாக இது வெளிப்படலாம். வெளித்தூண்டுதலும் இதற்குக் காரணமாகலாம். விரும்பியதைப் பெற அதனைப்பற்றிய விளக்கம் தருகிற உள்ளறிவும் அதனைப்பெற முறை வகுக்கிற வெளியறிவும் ஞானசக்தியின் வெளிப்பாடே. அதனைப்பெற உதவுவது உள்தூண்டலாகவும் வெளித் தூண்டலாகவும் உள்ள கிரியா சக்தி. ஜடப்பொருளில் கிரியா சக்தி மட்டும் வெளியே தெரியும். நெருப்பில் சூடு போல். மற்ற இருசக்திகளும் வெளிப்படாதிருக்கும். அந்த மூன்று சக்திகளும் அவற்றால் நடைபெறும் இயக்கங்களும் நீரே.

त्वां योगिनो ध्यायन्ति नित्यम्। त्वं ब्रह्मा त्वं विष्णुस्त्वं रुद्रस्त्वमिन्द्रस्त्वमग्निस्त्वं वायुस्त्वं सूर्यस्त्वं चन्द्रमास्त्वं ब्रह्म भूर्भुवस्सुवरोम्।

யோகிகள் எப்போதும் உம்மைத் தியானம் செய்கிறுர்கள். பிரும்மா விஷ்ணு ருத்ரர் இந்திரன் அக்னி வாயு ஸுூர்யன் சந்திரன் பிரும்மம் பூ: புவ: ஸுவ: என்ற வியாஹ்ருதிகள், பிரணவம் அனைத்தும் நீரே.''

உலகைப் படைப்பதும் காப்பதும் மறைத்து ஒடுக்குவதுமான முப்பெரும்பணிகளின் பொறுப்பாளரான பிரும்மா விஷ்ணு ருத்ரன் என்ற மூன்று உருவங்களை ஏற்கிறீர். திக்பாலர்களான இந்திரன் அக்னி வாயு முதலானோராகி, உலகின் வாழ்விற்கான தட்பவெப்பங்களைச் சீரமைக்கிறீர். காலத்திற்கும் புஷ்டிக்கும் காரணமான சூர்ய சந்திரர்களாகிறீர். பரம்பொருளான நீரே உலகின் வழிகாட்டிகளான வேதமும் வியாஹ்ருதிகளும் பிரணவமுமாகிறீர். முப்பணிகளிலும் காப்பில் தேவையான இடைப்பணிகளிலும் நீரே பல வடிவங்கள் ஏற்றுச் செயலாற்றி, உலகம் தானியங்கியாக வழிகளும் காட்டுகிறீர்.

गणादिं पूर्वमुच्चार्य वर्णादिं तदनन्तरम्। अनुस्वारः परतरः। अर्धेन्दुलसितम्। तारेण रुद्धम्। एतत्तव मनुस्वरूपम्। गकारः पूर्वरूपम्। अकारो मध्यमरूपम्। अनुस्वारश्चान्त्यरूपम्। बिन्दुरुत्तररूपम्। नादः सन्धानम्। संहिता सन्धिः। सैषा गणेशविद्या। गणक ऋषिः। निचृद्गायत्री छन्दः। गणपतिर्देवता। ओं गं ओं।

''கண என்ற சொல்லின் முதல் எழுத்தும் எழுத்துகளில் முதலாவதானதும் அதன் மேலுள்ள அனுஸ்வாரமும் அனுஸ்வாரத்தின் அர்த்த சந்திரன் என்ற நாதமும் உள்ளதும் இருபுறமும் ஓங்காரத்தால் அடக்கப்பெற்று உருப்பெறுவதே உமது மந்திரம். ग् என்பது முன்பகுதி, அ என்பது நடுப்பகுதி. 'ம்' எனும் அனுஸ்வாரம் கடைப்பகுதி. அதன்மேல் பிந்து என்ற ஒலிக்கார்வை. இவற்றை நாதம் ஒன்றிணைக்கிறது. சேர்த்துச் சொல்வதால் இவை ஒட்டுகின்றன. இதுவே கணேசமந்திரம். இதற்குக் கணகர் ருஷி, நிச்ருத் காயத்ரீ என்பது சந்தஸ். ஸ்ரீகணபதியே தேவதை. ओं गं ओं என்பது மந்திரவடிவம்.

ஸ்ரீகணேசரின் ஏகாக்ஷரமந்திரம் இது. गं என்பது கணேசரின் பீஜாக்ஷரமும் கணேசப்பிரணவமுமாகும். அதன் இருபுறமும் சுத்தப் பிரணவம் காப்பாக அமைகிறது. அனுஸ்வாரம் - உயிர் எழுத்தைத் தொடர்ந்துவருகிற 'ம்' எனும் எழுத்து. இது அரை மாத்திரையளவில் உச்சரிக்கப் பெறுவதால் பிந்துவாகிறது. இது ம்ம்ம் என்று ஒலி நீட்சிபெறுவதால் நாதமாகிறது. இந்தக்கார்வையின் இறுதியில் அது கிரமமாகக் குறையும். 'ம்' என்ற தெளிவு மறைந்து மூக்கொலி மட்டுமே உணர்கிற நிலையில் அது அர்த்தசந்திரன். (அர்த்தேந்து). வீணை மீட்டலின் போது மீட்டல் ஒலியைத் தொடர்ந்து இந்த நாதம் விரிந்து ஒலியலையாகி அதன் வேகம் குன்றி ஓய்கின்றபோது கேட்கின்ற இடைநிலைகளை எட்டாக விரித்து மந்திர சாஸ்திரம் விளக்குகிறது. இந்த இடை நிலைகளில் பிந்து நாதம் அர்த்த சந்திரன் இவையடைங்கும்.

एकदन्ताय विद्महे वक्रतुण्डाय धीमहि। तन्नो दन्तिः प्रचोदयात्।

ஏகதந்தரைச் சார்ந்தவராக எங்களை உணர்கிறோம். வக்ரதுண்டரைச் சார்ந்ததாக அனைத்தையும் தியானம் செய்கிறோம். எம்மைத் தந்தி காப்பாற்றட்டும்.

இது கணேச காயத்ரி. மற்றவேதங்களில் வேறு காயத்ரிகளும் உண்டு. மூன்றுபாதங்களும் ஒவ்வொருபாதத்திலும் எட்டு அக்ஷரங்களும் கொண்டது காயத்ரீ என்ற சந்த அமைப்பு.

ஏகதந்தர் - ஒற்றைக் கொம்புள்ளவர், தந்தத்தை முக்கிய அடையாளமாகக் கொண்டவர். வக்ரதுண்டர் பிரணவவடிவில் வளைந்த துதிக்கையுள்ளவர், நேர்மையைக் கெடுக்கிற விக்னங்களைத் துண்டிப்பவர். தந்தி பெருந்தந்த முள்ளவர்.

ஏகாக்ஷரமந்திரமும் இந்த காயத்ரீயும் மந்திரமாக ஜபம் செய்யத்தக்கவை. இந்த மந்திரங்களால் வழிடப்பெறுகிற பெருமானின் வடிவமைப்பு தியானத்திற்கு உரியது. நிர்குணமான பரம்பொருள் தானே ஸாதகனுக்கு அருள் புரிய தனக்கெனத் தனித்த வடிவங்கள் பலவற்றை ஏற்கிறது. அவற்றில் இந்த மந்திரங்களால் தியானிக்கத்தக்க வடிவமைப்பு பின் தரப்படுகிறது. எழுத்தின்றி சொல் அமையாதது போல் வடிவின்றித் தியானம் அமையாது.

एकदन्तं चतुर्हस्तं पाशमङ्कुशधारिणम्। (मेव च।)
अभयं (रदं च) वरदं हस्तैर्बिभ्राणं मूषकध्वजम्॥
रक्तं लम्बोदरं शूर्पकर्णकं रक्तवाससम्।
रक्तगन्धानुलिप्ताङ्गं रक्तपुष्पैः सुपूजितम्॥
भक्तानुकम्पिनं देवं जगत्कारणमच्युतम्।
आविर्भूतं च सृष्ट्यादौ प्रकृतेः पुरुषात्परम्॥
एवं ध्यायति यो नित्यं स योगी योगिनां वरः॥

ஒரே தந்தத்தைத் தன் அடையாளமாகக் கொண்டவர். நான்குகைகள் உள்ளவர், அவற்றில் பாசம் அங்குசம் அபய முத்திரை (தந்தம்) வரத முத்திரை ஏந்தியவர், மூஷகத்தைக் கொடியில் கொண்டவர், செந்நிறமேனியர், சரிந்த வயிறுள்ளவர், முறம் போன்ற காதுள்ளவர், செந்நிற ஆடையுடுத்தியவர், செந்நிறச்சந்தனக்குழம்பு பூசியவர், செந்நிறப்பூக்களால் நன்கு அர்ச்சிக்கப்பெற்றவர், பக்தர்களிடம் பரிவுள்ளவர், எல்லையற்று விளையாடுபவர், உலகின் மூலப்பொருள். தன்னைப் பிடித்தவரை நழுவவிடாதவர், (தாமும் நழுவாதவர்), உலகின் படைப்பில் பிரகிருதியும் புருஷனுமாக(அசேதனமும் சேதனமுமாக)ப்பிரியுமுன் ஈச்வரனாக முன் தோன்றியவர், இப்படி இவரைத் தியானம் செய்ய யோகநிலை பெற்று யோகநிலை கைவந்தவர்களின் முன்னிலையில் நிற்பர்.

அபயமுத்திரைக்கு மாற்றாகத் தந்தமேந்தியவராகத் தியானிப்பதும் உண்டு. உலகின் படைப்பைத் தொடங்கிய பிரும்மத்திடம் மாயையால் ஏற்பட்ட சலனம், இதனைக் கண்காணித்து அனைத்தையும் தன் பேராளுமைக் குட்படுத்துகிற ஈசுவரனாகிப் பின்னரே உலகின் மூலத்தத்துவங்களான பிரகிருதியும் புருஷனுமாகத் தோன்றிற்று. அதனால் பிரகிருதிக்கும் புருஷனுக்கும் முந்தியவரான ஈசுவரனாக அவரைத் தியானிப்போம்.

नमो व्रातपतये नमो गणपतये नमः प्रमथपतये नमस्ते अस्तु लम्बोदराय एकदन्ताय विघ्नविनाशिने शिवसुताय श्री वरदमूर्तये नमो नमः।

''விராதர் எனும் மக்கள் கூட்டத்தின் தலைவர், கணத்தின் தலைவர், பிரமதர்களின் தலைவர், சரிந்த வயிறுள்ளவர், ஒரேதந்த முள்ளவர், தடையகற்றுபவர், சிவபெருமானின் புதல்வர், விரும்பியதைத் தருவதற்கே வடிவெடுத்தவர் இவருக்கு வணக்கம், வணக்கம்.''

கட்டுப்பாடற்று பிறரைத் துள்புறுத்தித்தன் தம் பிழைப்பை நடத்துபவர், பல்வேறு இனத்தவர், விராதர் எனப்படுவர். கட்டுப்பட்டு ஒழுக்கத்துடன் தம் தம் இனத்தவருடன் கூடிநிற்பவர் கணம் எனப்படுவர். குறிக்கோளும் செயல் முறையும் வகுத்துக்கொண்டு அதற்கு அடங்கி ஆற்றல் மிக்க செயல் வீரர்களாகத் திகழ்பவர் பிரமதர். இவர் அனைவரையும் கட்டுக்குள் கொணர்ந்து காப்பவர் விராத பதி, கணபதி, பிரமத பதியாயுள்ள விநாயகர்.

இதுவரை உபநிஷதத்தின் மந்திரப்பகுதி. இனி. பலச்ருதி.

एतदथर्वशीर्षं योऽधीते स ब्रह्मभूयाय कल्पते। स सर्वतः सुखमेधते। स सर्वविघ्नैर्न बाध्यते। स पञ्चमहापातकात् प्रमुच्यते। सायमधीयानो दिवसकृतं पापं नाशयति। प्रातरधीयानो रात्रिकृतं पापं नाशयति। सायं प्रातः प्रयुञ्जानोऽपापो भवति।

இந்த அதர்வ சீர்ஷத்தை ஓதுபவர் பிரும்மநிலைபெறத் தகுதி பெறுகிறார். எங்கும் இன்புறுவார். இடையூறுகளால் பாதிப்புறமாட்டார். ஐந்து கொடிய பாதகங்களிலிருந்தும் விடுபடுகிறார். மாலையில் ஓதப் பகலில் செய்தபாபமும் காலையில் ஓத இரவில் செய்தபாபமும் காலையிலும் மாலையிலும் ஓத எல்லாபாபங்களும் நீங்கப்பெறுகிறார்.

सर्वत्राधीयानोऽपविघ्नो भवति। धर्ममर्थं कामं मोक्षं च विन्दति। इदमथर्वशीर्षमशिष्याय न देयम्। यो यदि मोहाद् दास्यति, स पापीयान् भवति। सहस्रावर्तनात् यं यं काममधीते, तं तमनेन साधयति। अनेन गणेशमभिषिञ्चति स वाग्मी भवति। चतुर्थ्यां अनश्नन् जपति। स विद्यावान् भवति। इत्यथर्वणवाक्यम्। ब्रह्माद्याचरणं विद्यात्। न बिभेति कदाचनेति।

எப்போதும் எங்கும் ஓதத் தடைகள் நீங்கப்பெறுவான். அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கு பேறுகளையும் பெறுவான். இதனை தகுதியற்றவனுக்கு உபதேசிக்கக் கூடாது. ஒருவன் அறியாமையால் தகுதியற்றவனுக்கு உபதேசித்தால் பாபியாகிறான். ஆயிரம் தடவை கூற, விரும்பியதைப் பெறலாம். கணேசருக்கு இதனை ஓதி அபிஷேகம் செய்தால் பேச்சுவன்மை பெறுவான். சதுர்த்தியன்று உபவாஸமிருந்து ஜபிக்க பெருங்கல்விமான் ஆவான். இது அதர்வணருஷியின் உறுதிமொழி. பிரும்மா முதலானோரும் இவ்வாறு வழிபட்டனர் என்பதை உணர்வீர். எதிலிருந்தும் பயப்படவேண்டாம்.

यो दूर्वाङ्कुरैर्यजति, स वैश्रवणोपमो भवति। यो लाजैर्यजति, स यशोवान् भवति। स मेधावान् भवति। यो मोदकसहस्रेण यजति, स वाञ्छितफलमवाप्नोति। यः साज्यसमिद्भिर्यजति. स सर्वं लभते, स सर्वं लभते। अष्टौ ब्राह्मणान् सम्यक् ग्राहयित्वासूर्यवर्चस्वी भवति। सूर्यग्रहे महानद्यां प्रतिमासन्निधौ वा जप्त्वा, स सिद्धमन्त्रो भवति। महाविघ्नात्प्रमुच्यते। महादोषात्प्रमुच्यते। महाप्रत्यवायात्प्रमुच्यते। महापापात्प्रमुच्यते। स सर्वविद्भवति स सर्वविद्भवति। य एवं वेद। इत्युपनिषत्।

அறுகம்புல்துளிரால் ஹோமம் செய்ய குபேரனைப் போன்றவான். நெற்பொரியால் ஹோமம் செய்ய புகழும் மேதையும் அடைவான். ஆயிரம் கொழுக்கட்டையால் ஹோமம் செய்ய விரும்பிய நலனைப்பெறுவான். நெய்தோய்த்த ஸமித்துக்களால் ஹோமம் செய்ய எல்லாவற்றையும் பெறுவான், எல்லாவற்றையும் பெறுவான். எட்டு அந்தணர்களை விநாயகராக வழிபட்டு எல்லா உபசாரங்களையும் செய்ய சூரியனைப்போன்று ஒளி பெறுகிறான். சூரிய கிரகணத்தன்று மஹாநதியிலோ விக்ரகத்தின் எதிரிலோ ஜபிக்க மந்திர சித்திபெறுவான். பெரும் இடையூறுகள் விலகும். பெருத்ததோஷங்கள் விலகும். பெருங்கேடுகள் விலகும். பெரும்பாபங்கள் விலகும். அவன் எல்லா மறிவான். அவன் எல்லா மறிவான். இதனை இவ்வாறு உணர்ந்தவனும் எல்லாம் பெறுவான். இதுவே உபநிஷத்.

भद्रं कर्णेभिः + दधातु।

# महागणपति द्वादशनामस्तोत्रम्

अस्य श्रीमहागणपति द्वादशनामस्हतोत्र महामन्त्रस्य, व्यासः ऋषिः । अनुष्टुप् छन्दः । भगवान् गणपतिर्देवता । श्रीमहागणपति प्रीत्यर्थे नामपारायणे विनियोगः ।

ओं नमो गणपतये ।

गणपतिर्विघ्नराजो लम्बतुण्डो गजाननः ।
द्वैमातुरश्च हेरम्ब एकदन्तो गणाधिपः ॥
विनायकश्चारुकर्णः पशुपालो भवात्मजः ।
द्वादशैतानि नामानि प्रातरुत्थाय यः पठेत् ॥
विश्वं तस्य भवेद्वश्यं न च विघ्नं भवेत्कचित् ।
महाप्रेताः शमं यान्ति पीडचते व्याधिभिर्न च ।
सर्वपापविनिर्मुक्तो ह्यक्षय्यं लोकमश्नुते ॥ (पाद्मपुराणे)

## ஸ்ரீமஹா கணபதி த்வாதஶ நாமஸ்தோத்திரம்

*அஸ்ய ஸ்ரீ மஹாகணபதித்வாதஶ நாமஸ்தோத்ர மஹா மந்த்ரஸ்ய, வ்யாஸ: ருஷி:, அனுஷ்டுப் சந்த:, பகவான் கணபதிர் தேவதா. ஸ்ரீமஹாகணபதிப்ரீத்யர்த்தே நாமபாராயணே விநியோக: ।*

ஓம் நமோ கணபதயே

*கணபதிர் விக்க்நராஜோ லம்பதுண்டோ கஜாநந: ।*
*த்வைமாதுரஶ்ச ஹேரம்ப ஏகதந்தோ கணாதிப: ॥*

*விநாயகஶ்சாருகர்ண: பஶுபாலோ பவாத்மஜ: ।*
*த்வாதஶைதாநி நாமாநி ப்ராதருத்தாய ய: படேத் ॥*

*விஶ்வம் தஸ்ய பவேத் வஶ்யம் நச விக்க்நம் பவேத் க்வசித் ।*
*மஹாப்ரேதாஶ் ஶமம் யாந்தி பீட்யதே வ்யாதிபிர் ந ச ।*
*ஸர்வபாப விநிர்முக்தோ ஹ்யக்ஷய்யம் லோகம ஶ்நுதே ॥*

கடமை தானேது கரிமுகனே வையத்
திடநீ யருள்செய்தா யெங்க - ளுடைமைகளு
மின்பங்களுமெல்லா மீந்தாய்நீ யாங்களுனக்
கென் புரிவோம் கைம்மா றியம்பு. 21

இயம்பு மொழிகள் புகழ்மறை யாகு மெடுத்தவினை
பயன்படும் தேவர் இருபோதும் வந்து பதந்தருவார்
அயன்பதி முன்னோன் கணபதி சூரியன் ஆனைமுகன்
வியன்புகழ் பாடிப் பணிவார் தமக்குறு மேன்மைகளே 23

மேன்மைப் படுவாய் மனமேகேள் விண்ணி னிடிமுன் விழுந்தாலும்
பான்மை தவறி நடுங்காதே, பயத்தா லேதும் பயனில்லை,
யான்முன் னுரைத்தேன் கோடிமுறை, இன்னுங் கோடி முறை சொல்வேன்,
ஆன்மா வான கணபதியின் அருளுண் டச்ச மில்லையே 23

அச்ச மில்லை, அமுங்குத லில்லை,
நடுங்குத லில்லை, நாணுத லில்லை,
பாவ மில்லை, பதுங்குத லில்லை;
ஏது நேரினு மிடர்ப்பட மாட்டோம் ;
அண்டஞ் சிதறினா லஞ்ச மாட்டோம் ;
கடல்பொங்கி எழுந்தாற் கலங்க மாட்டோம் ;
யார்க்கு மஞ்சோம், எதற்கு மஞ்சோம் ;
வான முண்டு, மாரியுண்டு, எங்குமஞ்சோம்,
எப்பொழுதும் அஞ்சோம்
ஞாயிறுங் காற்றும் நல்ல நீரும்
தீயு மண்ணுந் திங்களு மீன்களும்
உடலு மறிவு முயிரு முளவே ;
தின்னப் பொருளுஞ் சேர்ந்திடப் பெண்டும்
கேட்கப் பாட்டுங் காணநல் லுலகும்
களித்துரை செய்யக் கணபதி பெயரும்
என்றுமிங் குளவாம் ; சலித்திடாய், ஏழை
நெஞ்சே ; வாழி, நேர்மையுடன் வாழி,
எஞ்சகக் கவலைக் கிடங்கொடேல், மன்னோ
தஞ்ச முண்டு, சொன்னேன்,
செஞ்சுடர்த் தேவன் சேவடி நமக்கே. 24

நமக்குத் தொழில்கவிதை, நாட்டிற் குழைத்தல்
இமைப்பொழுதுஞ் சோரா திருத்தல் ; - உமைக்கினிய
மைந்தன் கணநாதன் நங்குடியை வாழ்விப்பான் ;

சிந்தையே, யிம்மூன்றுஞ் செய். 25

செய்யுங் கவிதை பராசக்தி யாலே செயப்படுங்காண்
வையத்தைக் காப்பவ ளன்னை சிவசக்தி வண்மையெலாம்
ஐயத்தி லுந்துரி தத்திலுஞ்சிந்தி யழிவதென்னே
பையத் தொழில்புரி நெஞ்சே கணதியன் பக்தி கொண்டே 26

பக்தி யுடையார் காரியத்திற் பதறார், மிகுந்த பொறுமையுடன்
வித்து முளைக்குந் தன்மைபோல் மெல்லச் செய்து பயனடைவார்,
சக்தி தொழிலே யனைத்துமெனிற் சார்ந்த நமக்குச் சஞ்சலமேன் ?
விந்தைக் கிறைவா, கணநாதா, மேன்மைத் தொழிலிற் பணியெனையே.
எனைநீ காப்பாய், யாவுமாந் தெய்வமே !
பொறுத்தாரன்றே பூமி யாள்வார் ;
யாவுநீ யாயி னனைத்தையும் பொறுத்தல்
செவ்விய நெறியதிற் சிவநிலை பெறலாம் ;
பொங்குதல் போக்கிப் பொறையெனக் கீவாய் ;
மங்கள குணபதி மணக்குளக் கணபதி
நெஞ்சக் கமலத்து நிறைந்தருள் புரிவாய் ;
அகல்விழி யுமையாளாசை மகனே.
நாட்டினைத் துயரின்றி நன்கமைத் திடுவதும்
உளமெனு நாட்டை யொருபிழை யின்றி
ஆள்வதும் பேரொளி ஞாயிறே யனைய
சுடர்தரு மதியொடு துயரின்றி வாழ்தலும்
நோக்கமாகக் கொண்டு நின்பத நோக்கினேன் ;
காத்தருள் புரிக, கற்பக விநாயகா,
காத்தருள் புரிக, கடவுளே, யுலகெலாம்
கோத்தருள் புரிக, குறிப்பரும் பொருளே,
அங்குச பாசமுங் கொம்புந் தரித்தாய்
எங்குல தேவா, போற்றி
சங்கரன் மகனே தாளிணை போற்றி ! 28

போற்றி கலியாணி புதல்வனே பாட்டினிலே
ஆற்ற லருளி யடியேனைத் - தேற்றமுடன்
வாணிபதம் போற்றுவித்து வாழ்விப்பாய் வாணியருள்
வீணையொலி என்னாவில் விண்டு. 29

விண்டுரை செய்குவன் கேளாய் புதுவை விநாயகனே
தொண்டுின தன்னை பராசக்திக் கென்றுந் தொடர்ந்திடுவேன்
பண்டைச் சிறுமைகள் போக்கியென் னாவிற் பழுத்தசுவைத்
தெண்டமிழ்ப் பாட லொருகோடி மேவிடச் செய்குவையே. 30

செய்யா ளினியால் ஸ்ரீதேவி, செந்தா மரையிற் சேர்ந்திருப்பாள்
கையா ளெனநின் றடியேன்செய் தொழில்கள் யாவும் கைகலந்து
செய்வாள் ; புகழ்சேர் வாணியுமென் னுள்ளே நின்று தீங்கவிதை
பெய்வாள், சக்தி துணைபுரிவாள், பிள்ளாய், நின்னைப் பேசிடிலே
பேசாப் பொருளைப் பேசநான் துணிந்தேன்,
கேட்கா வரத்தைக் கேட்கநான் துணிந்தேன்,
மண்மீ துள்ள மக்கள், பறவைகள்,
விலங்குகள், பூச்சிகள், புற்பூண்டு, மரங்கள்
யாவுமென் வினையா லிடும்பை தீர்ந்தே
இன்பமுற் றன்புட னிணங்கிவாழ்ந் திடவே
செய்தல் வேண்டும், தேவ தேவா !
ஞானா காசத்து நடுவே நின்றுநான்
பூமண் டலத்தில் அன்பும் பொறையும்
விளங்குக, துன்பமு மிடிமையு நோவுஞ்
சாவு நீங்கிச் சார்ந்தபல் லுயிரெலாம்
இன்புற்று வாழ்க' என்பேன் ! இதனை நீ
திருச்செவிக் கொண்டு திருவுள மிரங்கி
அங்ஙனே யாகுக' என்பாய் ஐயனே !
இந்நாள், இப்பொழுதெனக்கிவ் வரத்தினை
அருள்வாய் ; ஆதி மூலமே ! அநந்த
சக்தி குமாரனே ! சந்த்ர மவுலீ !
நித்தியப் பொருளே சரணம்
சரணம் சரணம் சரணமிங் குனக்கே. 32

உனக்கெயென் னாவியு முள்ளமுந்தந்தேன்
மனக்கேதம் யாவினையு மாற்றி - எனக்கே
நீண்டபுகழ் வாணாள் நிறைசெல்வம் பேரழகு
வேண்டுமட்டும் ஈவாய் விரைந்து 33

விரைந்துன் திருவுள மென்மீ திரங்கிட வேண்டுமையா
சுரங்கை விடுத்துப் பகைவரின் தீவைக் கொளுத்தியவன்
அங்கத்தி லேதிரு மாதுடன் பள்ளிகொண் டான் மருகா !
வரங்கள் பொழியு முகிலே என்னுள்ளத்து வாழ்பவனே ! 34

வாழ்க புதுவை மணக்குளத்து வள்ளல் பாத மணிமலரே ;
ஆழ்க வுள்ளஞ் சலனமிலா தகண்ட வெளிக்கண் அன்பினையே
சூழ்க ; துயர்கள் தொலைந்திடுக; தொலையா வல்வினையினம்,
வீழ்க கலியின் வலியெல்லாம், கிருத யுகந்தான் மேவுகவே. 35

மேவி மேவித் துயிரில் வீழ்வாய்,
எத்தனை கூறியும் விடுதலைக் கிசையாய்,
பாவி நெஞ்சே, பார்மிசை நின்னை
இன்புறச் செய்வேன் ; எதற்குமினி யஞ்சேல்
ஐயன் பிள்ளையார் அருளால் உனக்கு நான்
அபயமிங் களித்தேன்... நெஞ்சே
நினக்குநா னுரைத்தன நிலைநிறுத் திடவே
தீயிடைக் குதிப்பேன், கடலுள் வீழ்வேன்,
வெவ்விட முண்பேன், மேதினி யழிப்பேன்,
ஏதுஞ் செய்துனை யிடரின்றிக் கா ப்பன்;
மூட நெஞ்சே, முப்பது கோடி
முறையுனக் குரைத்தேன் இன்னு மொழிவேன்;
தலையிலிடி விழுந்தால் சஞ்சலப் படாதே ;
ஏது நிகழினு 'நமக்கேன்' என்றிரு:
பராசக்தி யுளத்தின் படியுலக நிகழும்;
நமக்கேன் பொறுப்பு ? "நான் என்றோர் தனிப்பொருள்
இல்லை ; நானெனும் எண்ணமே வெறும்பொய்"
என்றான் புத்தன் ; இறைஞ்சுவோ மவன்பதம்.
இனியெப் பொழுது முரைத்திடேன். இதை நீர்
மறவா திருப்பாய், மடமை நெஞ்சே !
கவலைப் படுதலே கருநர கம்மா !
கவலையற் றிருத்தலே முக்தி;
சிவனொரு மகனிதை நினக்கருள் செய்கவே. 36

செய்கதவம் ! செய்கதவம் ! நெஞ்சே ! தவம் செய்தால்
எய்த விரும்பியதை யெய்தலாம் - வையகத்தில்
அன்பிற் சிறந்த தவமில்லை: அன்புடையார்
இன்புற்றுற வாழ்தலியல்பு. 37

இயல்பு தவறி விருப்பம் விளைத லியல்வதன்றாம்
செயலிங்கு சித்த விருப்பினைப் பின்பற்றும் ; சீர்மிகவே
பயிலுநல் லன்பை யியல்பெனக் கொள்ளுதிர் பாரிலுள்ளீர்
முயலு வினைகள் செழிக்கும் விநாயகன் மொய்ம்பினிலே 38

மொய்க்குங் கவலைப் பகைபோக்கி, முன்னோன் அருளைத் துணையாக்கி,
எய்க்கு நெஞ்சை வலியுறுத்தி, யுடலை யிரும்புக் கிணையாக்கிப்
பொய்க்குங் கலியை நான்கொன்று பூலோ கத்தார் கண்முன்னே,
மெய்க்குங் கிருத யுகத்தினையே கொணர்வேன், தெய்வ
விதியிஃதே. 39

விதியே வாழி, விநாயகா வாழி
பதியே வாழி, பரமா வாழி,
சிதைவினை நீக்கும் தெய்வமே போற்றி !
புதுவினை காட்டும் புண்ணியா, போற்றி !
மதியினை வளர்க்கு மன்னே, போற்றி !
இச்சையங் கிரியையு ஞானமு மென்றுக்கு
மூல சக்தியின் முதல்வா, போற்றி !
பிறைமதி சூடிய பெருமான் வாழி,
நிறைவினைச் சேர்க்கு நிர்மலன் வாழி,
கால மூன்றையுங் கடந்தான் வாழி !
சக்தி தேவி சரணம் வாழி !
வெற்றி வாழி, வீரம் வாழி
பக்தி வாழி, பலபலகாலமும்
உண்மை வாழி, ஊக்கம் வாழி,
நல்ல குணங்களே நம்மிடை யமரர்
பதங்களாம், கண்டீர், பாரிடை மக்களே !
கிருத யுகத்தினைக் கேடின்றி நிறுத்த
விரதநான் கொண்டனன்; வெற்றி
தருஞ்சுடர் விநாயகன் தாளிணை வாழியே.

## விநாயகர் திருவருள் முறை

அகரமென அறிவாகி உலகமெங்கும்
அமாந்தகர மகரங்கள் தம்மால்
பகருமொரு முதலாகி வேறுமாகி
பலவேறு திருமேனி தரித்துக் கொண்டு
புகரில் பொருள்நான் இணையும் இடர்தீர்ந்தெய்வப்
போற்று நருக் கருணை புரிந்தல்லார்க்கு
நிகரின் மறக் கருணை புரிந்தாண்டு கொள்ளும்
நிருமலனைக் கணபதியை நினைந்து வாழ்வாம்

- கச்சியப்ப முனிவர்

*அக்தி முகத் - துத்த மனே*
*நித்தம் நினை - சித்தமே - (சிவஞானம். பிள்ளைத் தமிழ்*

அத்திமுகத்தோனே அரனார் திருமகனே
சக்தியின் புத்திரனே சரிந்த வயிற்றோனே

முத்தியளிக்கின்ற முருகற்கு மூத்தோனே
விந்தையெனக் கருளும் வேலவர்க்கு மூத்தோனே

- புலந்திரன் தூது

அருளெனும் கடலமுகந்து அடியார் சிந்தையாம்
பொருள்பெறு நிலம் சிவபோகம் முற்றிட
வரமழையுதவு செவ்வந்தி யானையின்
திருவடியிணைமலர் சென்னி சேர்த்துவாம்

- திருச்சி செவந்திப்புராணம்

அற்புதகீர்த்தி வேண்டின் ஆனந்த வாழ்க்கை வேண்டின்
நற்பொருள் குவிதல் வேண்டின் நலமெலாம் பெருக வேண்டின்
கற்பகமூர்த்தி தெய்வக் களஞ்சியம் - இருக்கைசென்று
பொற்பதம் பணிந்து பாரீர் பொய்யிலை கண்ட உண்மை

- கண்ணதாசன்

"அன்றே யென்றன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும்
குன்றே யனையாய் என்னைஆட் கொண்ட போதே கொண்டிலையோ
இன்றோர் இடையூ றெனக்குண்டோ எண்டோள் முக்கண் எம்மானே
நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ இதற்கு நாயகமே."

- மாணிக்கவாசகர்

இலவு வந்த செவ்வாய் எம்பெருமாட்டி
பார்வையொடும் இருக்கும் முன்னூல்
சொலவுவந்த நம் பார்வையின்
ஏற்றமர் சிறப்பு தோற்றியாங்குப்
பலவுவந்த பொழில் வளஞ்சால் குருந்துறையும்
பெருந்துறையிற் பண்பு கூடும்
நிலவு வந்த முடியினோடும் வெயிலு
வந்த மெய்க்களிற்றை நினைந்து வாழ்வாம்

- திருப்பெருந்துரை புராணம்

உச்சியின் மகுட மின்ன ஒளிர்தர நுதலின் ஓடை
வச்சிர மருப்பின் ஒற்றை மணிக்கொள்கிம் புரிவயங்க
மெய்ச்செவிக் கவரி தூங்க வேழமா முகங்கொண் டுற்ற
கச்சியின் விகட சக்ரக் கணபதிக் கென்பு செய்வாம்.

- கந்தபுராணம்

உயர்திணையும் அஃறிணையும்
ஆய ஒருதிருவுருவம் உற்றுமேவும்
பெயர் வில் கருணைக் கிணங்க அவ்விரண்டு
திணை உயிரும் பேணித் தாங்கல்,
அயர் உலகந் தெரிப்ப இளமதியும்
முது அரவும் முடியலங்கத் தாங்கி,
மயர்வு தர வீற்றிருக்கும் அகத்திய
வாரணத்தடிகள் வணக்கம் செய்வாம்

- மாயூர புராணம்

உலகம் பரவும் பொருள் என்கோ என் உறவென்கோ
கலகம் பெறு ஐம்புலன் வென்றுயரும் கதி என்கோ
திலகம் பெறுநெல் என நின்றுலகும் சிவம் என்கோ
இலகைங்கர அம்பர நின் தனை என் என்கேனே

- திருஅருட் ப்ரகாச வள்ளலார்

உற்றெடுத்து வண்டோலிடு மும்மதத்து
ஆற்றொழுக்கின் அருவியம் சாரல்வாய்
ஏற்றுகைக்கும் இறைவர்க்கு முந்திய
மாற்றிலாக்களி யானையை வாழ்த்துவாம்

- திருச்செந்தூர்த் தல புராணம்

''எடுக்கு மாக்கதை இன்றமிழ்ச் செய்யுளாய்
நடக்கு மேன்மை நமக்கருள் செய்திடத்
தடக்கை யைந்துடைத் தாழ்செவி நீண்முடிக்
கடக்க ளிற்றைக் கருத்து ளிருத்துவாம்.''

சேக்கிழார் - பெரிய புராணம்

எந்தவா னவர் அருள் பெறக்கருதினாலும் உனை
ஏத்திவழி படுவர் எழுவாய்
ஏத்திவழி படல்செயார் என்னின் அவர் எண்ணியது
இழந்தும் இடை யூறுறுவரால்
முந்தஆர் வம்பெருகு மாறுநின் அடிப்பூசை
முற்றும் புரிந்து போற்றின்
முன்னிய அனைத்தும் முற்றாததுஅல வேஇந்த
முறைமைநான் உணர்தலாலே
பந்தமாம் மலகன்ம மாயையொரு மூன்றையும்
பாற்றிநின் அறிவுதொழிலாம்

பாதநிழல் புக்கின்பம் உறுமாறு நின்னையே
பற்றித் துதித்தல் செய்வேன்
சந்தமா மலரிடுநர் எய்ப்பில் வைப்பே புகழ்நர்
களைகணே அமலவாழ்வே
கற்பத் தலத்தினும் விருத்தித் துருத்தியமர்
கச்சிக் களிற்றுமுகனே

-திருத்துருத்தி கச்சிவிநாயகர் பதிகம்

எப்போ தகத்தும் நினைவார்க் கிடரில்லைங்
கைப்போ தகத்தின் கழல்.

சிவப்பிரகாச அடிகள்

என்னை நினைத்தடிமை கொண்டென் னிடர்கெடுத்துத்
தன்னை நினையத் தருகின்றான் - புன்னை
விரசுகமழ் சோலையியன் நாரையூர் முக்கண்
அரசுமகிழ் அத்திமுகத்தான்

நம்பியாண்டார் நம்பிகள்

ஒரு முலை சுரந்த தீம்பால் உண்புழி மழலைத் தீஞ்சொல்
முருகனுக்கென்றே ஈன்ற முதல்வி வைத்திருந்த மற்றைத்
திருமுலைவருடுவான் போற்றி என் புகழைக் காரள்த்தாலுண்ணும்
வரிநுதற் களிற்றின் செந்தாமரையடி வணங்குவாமே

- சங்கர நாராயணர் கோவில் புராணம்

ஒருமலையாற் புரமலையும் ஒரு மைந்தன் திருமைந்தன்
இருமலையும் தும்மலையும் எதிர்மலையும் வினைமலையும்
பொருமலையும் விம்மலையும் பொய்மலையும் புடைத்தருளிக்
கருமலையும் பெருமலையிற்கைம்மலையைக் கை தொழுவோம்

- விருத்தாசல புராணம்

ஒளியான திருமேனி உமிழ்தானம் மிகமேவும்
களியார வரும் ஆனை கழல் நாளும் மறவாமல்
அளியாளும் மலர் தூவும் அடியாரகள் உளமான
வெளியாகும் வலிதாய வினைகூட நினையாவே

- சிவப்பிரகாசம்

ஒற்றை மருப்பும் ஓரிரண்டு கைத்தலமும்
வெற்றி புனைந்த விழிமூன்றும் - பெற்றதொரு
தண்டைக்கால் வாரணத்தைத் தன் மனதில் எப்பொழுதுங்
கொண்டக்கால் வாராது கூற்று.

- திருவருட்பா

ஓத வினையகலும் ஓங்குபுகழ் பெருகும்
காதல் பொருள் அனைத்தும் கைகூடும் - சீதம்
பனிக்கோட்டு மால்வரைமேல் பாரதப் போர்தீட்டும்
தனிக்கோட்டு வாரணத்தின் தாள்

- பெருந்தேவனார்

ஓம்எனும் பொருளாய் உள்ளோய் போற்றி !
பூமனும் பொருள்தோறும் பொலிவாய் போற்றி
அகரம் முதலென ஆனாய் போற்றி !
அகர உகர ஆதி போற்றி !

- பிள்ளையார் வழிபாடு

ஓரானைக் கன்றையுமையாள் திருமகனைப்
பேரானைக் கற்பகத்தைப் பேணினால் - வாராத
புத்திவரும் வித்தை வரும் புத்திர சம்பத்து வரும்
சக்தி தரும் சித்தி தருந் தான்

கங்கையும் பனிவெண் திங்களும் விரைத்த கடுக்கை நல்
தொங்கலும் அரவும் தங்கு பொற்சடையும் முக்கணும் தாதை
தாணுவென்றுணர்த்த மென்மலர்க்கை
அங்குசபாசம் அணிந்து வெற்புயிர்த்த ஆரணங்கன்னை யென்றுணர்த்தி
வெங்கலி முழுதும் துமித்தருள் பட்டி விநாயகன் சேவடி பணிவாம்.

கணபதி யென்றிடக் கலங்கும் வல்வினை
கணபதியென்றிடக் காலனும் கைதொழும்
கணபதி யென்றிடக் கருமமாதலால்
கணபதி யென்றிடக் கவலை தீருமே

கரிய நாரணனார்க்கும் கரியநாரணன் அளித்த கமலத்தார்க்கும்
அரிய் நாயகரை வலம் புரிந்து செழுங்கனி வாங்கி அருந்தினானை
தெரியும் நான்மறைமுனிவர் மகம் புரியும் முழுக்கமருத்

திருவெண்காட்டில்

பெரியநாயகியளித்த பெரிய வாரணத்தை அன்பாற் பேணுவோமே.

- திருவெண்காட்டுப் புராணம்

கரியின் மாமுக முடைய கணபதி தாதைபல் பூதம்
திரிய இல்பலிக் கேகுஞ் செழுஞ்சுடர் சேர்தரு மூதூர்,
சரியின் முன்கைநன் மாதர் சதிபட மாநட மாடி
உரிய நாமங்களேத்தும் ஒலிபுனற் காழிநன் னகரே.

திருமுறை

கலைநிறை கணபதி சரணஞ் சரணம்
கஜமுக குணபதி சரணஞ் சரணம்
தலைவநின் இணையடி சரணஞ் சரணம்
சரவண பவகுக சரணஞ் சரணம்

- விநாயகர் தோத்திரம்

கல்லாத மூடனுக்கும் கல்வி தரும், கற்றறிந்தோர்
எல்லாரும் மனமகிழ இசைத்தமிழின் இயல்பு தரும்
நல்லாரை உறவாக்கும் நலந்தரு நன்னெறியுதவும்
பொல்லாத வினை தீர்க்கும் பொல்லாத குஞ்சரமே.

- திருநெல்வேலி புராணம்

கல்லால் நிழல் மலை வில்லார் அருளிய
பொல்லார் இணைமலர் நல்லார் புனைவரே

- சிவகுண போதம்

கற்பகமே தேனுவே காமருசிந் தாமணியே
அற்பகமார் ஐங்கையுடை - ஆரமுதே - சிற்பமுறு
தந்தா வளமுகத்துத் தற்பரனே சாலவம் உட
வந்தாள நாயேன்முன் வா

- டாக்டர் உ.வே. சாமிநாதையர்

காமனைப் போற் கரும்பெடுத்துத் தருமனைப் போற்
கயிறேந்திக் கமழ் பூங்கொன்றைத்
தாமனைப்போல் மதிசூடித் தம்பியைப் போல்
முகமாறுந்தகைமை பூண்டு
மாமனைப்போற் கோடேந்திக்குறு முனிபோல்
கடலையெல்லாம் வாரித்துய்த்துப்
பூமனைப்போல் எழுதிவைக்கும் புகழுடை
வேலடிக் களிற்றைப்போற்றல் செய்வாம்

திருச்சுழியல் புராணம்

குருவே பரமன் கொழுந்தே பணிந்தேன்
குவலயம் போற்றும் கணநாதா
வருவாய் நினைவில் வந்தெனை ஆள்வாய்
வடிவேலவனின் சோதரனே !
அருள்வாய் உன்னையே அனுதினம் பணிவேன்
அன்னை பராசக்தி அருள் மகனே
திருமால் மருகா திருவடி சரணம்
தீனரக்ஷகனே கணநாத !

விநாயக ஸப்தகம்

சக்தியாய்ச் சிவமாகித் தனிப்பர
முத்தி யான முதலைத் துதி செயச்
சக்தியாகிய சொற்பொருள் நல்குவ
சித்தி யானைதன் செய்ய பொற்பாதமே

- திருவிளையாடற்புராணம்

சித்திதரும் புத்திதருஞ் செந்திருவைச் சேர்விக்கும்
பக்திதரு மெய்ஞ்ஞானம் பாலிக்குங் - கொத்தி
அரிமுகனைக் காய்ந்த வருணேசர் தந்த
கரிமுகனைக் கைதொழுதக்கால் !

அருணகிரியந்தாதி

சிந்தையிடர்க்கடல் நீந்திச்சிவானந்தம் உணர்த்திடவும்
சிவானுபூதிப்
பந்தமுறச்சிவாநந்தப் பாவையிடப் படிந்திடவும், பற்று நல்கும்
இந்திரியப்பகை தடிந்துயான் எனது நீங்குமவர் இதயம் மேவும்
ஐந்து கரத்தந்தி முகத்தெந்தை இரு பதாம்புயங்களை அகத்துள்
வைப்போம்

- சரபபுராணம்

சுரகு லாதிபன் றூய்மலர் நந்தனம்
பெருக வார்கடல் பெய்த வயிற்றினோன்
கரக நீரைக் கவிழ்த்த மதகரி
சரணம் நாளுந் தலைக்கணி யாக்குவாம்.

(பிரபுலிங்க லீலை)

செஞ்சந்தங்கள பக்கொங்கைச் செழுமலை இமயமங்கை
கஞ்சந்தங்கிய பொன்போற்றுங்கருணை ஞானப் பூங்கோதை
நஞ்சந்தங்கமிர்தாவுண்ட நாதரோடுகந்து பெற்ற
அஞ்சந்திப்பிள்ளை செம்பொன் அடிமலர் முடிமேற் கொள்வோம்.

ஞாலமெல்லாம் நயந்து திறையிடும்
காலன் அஞ்சும் கடும்பிணி நீங்கிடும்
கோலம் நல்கும் குறையாநிதி தரும்
ஓலம் என்ற களிற்றினை உள்ளுவாம்

திருவையாற்றுப்புராணம்

தழைவிரி கடுக்கைமாலைத் தனிமுதல் சடையிற்சூடும்
குழவிவெண்டிங்களிற்ற கோட்டது குறையென்றெண்ணிப்
புழை நெடுங்கரத்தாற் பற்றிப் பொற்புற விணைந்து நோக்கு
மழை மதக்களிற்றின் செய்ய மலரடி சென்னி வைப்பாம்

- நைடதம்

தன்னோங்கு மலரடியும் தளிரோங்கு சாகைகளும்
மின்னோங்கு முகக்கொம்பும் விரவிய கண்மலர் களுமாய்
மன்னோங்க நடமாடும் மன்றோங்க மதிற்குடபாற்
பொன்னோங்கள் முன்னோங்கும் பொற்பமர் கற்பகம் போற்றி

- சிதம்பரம் கோயிற் புராணம்

திகட சக்கரச் செம்முகம் ஐந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயகன்
அகட சக்கர விண்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவான்

(கந்த புராணம்)

திங்களம் கொழுந்துவேய்ந்த செஞ்சடைக் கொழுந்தே போற்றி
மங்கை வல்லபைக்கு வாய்த்த மகிழ் நநின் மலர்த்தாள் போற்றி
ஐங்கர நால்வாய் முக்கண் அருட்சிவ களிறே போற்றி
கங்கையாள் மகிழும் செல்வக்கணேச நின் கழல்கள் போற்றி

- திரு அருட் ப்ரகாச வள்ளலார்

திங்களங்குழவி என்னத் திகழ் ஒரு மருப்பிற்சோதி
தங்கு கிம்புரிவயங்கத்தடாமணி மகுடம் தாங்கித்
துங்க நல்வரங்கள் நல்கும் தூயசீர் இராம சேதுப்
புங்கவர் வணங்கும் யானை முகத்தனைப் போற்றல் செய்வாம்

- சேது புராணம்

திங்கள் முடியணிந்த சித்தி விநாயகனே
வெங்கண் வினை தவிர்க்கும் வித்தக - மங்களங்கள்
பல்வாக்கறியப் பொருள் சொல்லப் பாடிடவே
நல்வாக்கடியேற்கு நல்கு

ஸ்ரீ. உ.வே. சாமிநாதய்யர்.

திருமன்னு வேள்வி மறை முனிவர்
மனப்புலத்தெழுந்து சிறப்பினோங்கிக்
கருணை தழைத்தற மரும்பி ஞானம்
பூத்த கல்வினையைக் காய்த்துத் தொல்லை
இருளகன்ற முத்தி பழுத்தின்ப

நறுஞ்சுவை என்றும் இனிது நல்கும்
மருமலபூம் பொழில் ஆரூர் மாற்றுரைத்த
கற்பகத்தை வணங்கி வாழ்வாம்

திருவாரூர் புராணம்

திருமாலும் பிரம்மனும் மற்றமரருந் தாம்
அலர்வேதச்சி ரத்தெஞ்ஞான்றும்
ஒருவாத பிரணவத் தினுரிய பொருள்
ஒருதான் என்றுலகந்தேற
மருவாரும் மலர்க்கொன்றை மன்னவன்
அப்பிரண வமால்களிருய்த் தந்த
பெருவாழ்வு தருங்களிற்று க்கிடமாகும்
எனதுள்ளப் பிறங்கல் மாதோ

பூவாளூர் புராணம்

திருவுங் கல்வியஞ் சீருஞ் சிறப்புமுன்
திருவடிப் புகழ் பாடுந் திறமும் நல்
உருவஞ்சீலமும் ஊக்கமுந் தாழ்வுறா
உணர்வுந் தந்தென துள்ளத் தமர்ந்தவா
குருவுந் தெய்வமுமாகி அன்பாளர்தங்
குறை தவிர்க்குங் குணப் பெருங் குன்றமே
வெருவுஞ் சிந்தை விலக்க் கஜானனம்
விளங்குஞ் சித்தி விநாயக வள்ளலே

திருவருட்பா

தேவர்தொழு தெழுங்கருணைச் செல்வனே போற்றி !
சிறந்தொளிரு மங்கலசொ ரூபனே போற்றி !
ஓவறுசித்திகளனைத்தும் உதவுவோய் போற்றி !
ஒலிகெழுகிண் கிணிபாத சாலநூ புரங்கள்
மேவியொளிர் சரணனே போற்றி ! மத தாரை
விரவியதிண் கபோலனே போற்றி ! நின தருளால்
பாவமொடு பலபிணியும் பம்புவறு மைகளும்
பலவான இடர்களையும பாற்றுக இன்புறுவே.

( விநாயகர் புராணம் சகத்திர நாமப் படலம்)

நலந் தழைத்திடு நற்பத நீழலைக்
கலந்தவர்க்குக் கருணையரும்பி நின்று
அலர்ந்த ஆனந்தத் தேன் உகவானில்
மலர்ந்த கற்பக வேழத்தை வாழ்த்துவாம்
நல்லவை நீடிப்பல்கத் தீயவை நலிய நாயேன்
சொல்லவை நல்லோர்சூழல் துலங்கிடத் திருநணாவாழ்

வல்லபையிடத்து வைத்த வாரணமுகவன் தெய்வப்
பல்லவம் மருட்டும் பைம்பொற் பதயுகம் பணிதல் செய்வோம்

- பவானி கூடற்புராணம்

நற்குஞ்சரக்கன்று நண்ணிற் கலைஞானம்
கற்குஞ்சரக்கன்று காண் -

திருவருட்பயன்

நீடாழி உலகத்து மறை நான்கோடைந்தொன்று நிலைத்து நிற்க
வாடாத தவவாய்மை முனிராசன் மாபாரதம் சொன்ன நாள்
ஏடாக வடமேறு வெற்பாக வெங்கூ ரெழுத்தாணி தன்
கோடாக எழுதும் பிரானைப் பணிந்ததன்று கூர்வாமரோ

- வில்லிப்புத்தூரார்

நீர்விளையாட்டில் தீம்பாற் கடலிடை நெடுங்கை நீட்டிக்
கார்நிறத்தவனை வெள்ளை அரவோடு கலந்து வாரிச்
சீர் தருவிசும்பின் விசத் திங்களும் மறுவும் என்னப்
பேர் தரும் ஆலங்காட்டுப் பிள்ளை தாள் வணக்கம் செய்வாம்

- திருவாலங்காட்டுப் புராணம்

பண்ணியமும் வெண்கோடும் பாசாங் குசப்படையும்
நண்ணிய செங்கைத்தலத்து நாதா ! ஒரு கோட்டுத்
தண்ணிய வெண்பிறைத் தாழ்சடையாய் ! மெய்யுடியார்
எண்ணிய எண்ணியாங் கீந்தருளும் வள்ளலே !

காஞ்சிப் புராணம்

பண்ணியம் ஏந்துங் கரந்தனக் காக்கிப்
பால்நிலா மருப்பமர் திருக்கை
விண்ணவர்க் காக்கி, அரதனக் கலச
வியன்கரந் தந்தைதாய்க் காக்கிக்
கண்ணில்ஆ ணவவெங் கரிபிணித் தடக்கிக்
கரிசினேற் கிருகையும் ஆக்கும்
அண்ணலைத் தணிகை வரைவளர் ஆபற்
சகாயனை அகந்தழீ இக் களிப்பாம்

தணிகைப் புராணம்

பாசத் தளையறுத்துப் பாவக் கடல்கலக்கி
நேசத் தளைப்பட்டு நிற்குமே - மாசற்ற
காரார் வரையீன்ற கன்னிப் பிடியளித்த
ஓராளை வந்தென் உளத்து.

குமரகுருபர அடிகள்

பிஞ்சுமதிச் சடாமகுடப் பெருமானைப் பிரியாத
வஞ்சிஇம வான்தவத்தின் வருபேடை மயிலுதவும்
அஞ்சிறைவண் டிரைத்துவிழும் அருவிமதம் ஒழுகுகவுள்
குஞ்சரவெம் புகர்முகத்துக் குரிசிலடி இணைதொழுவோம்

- பிரமோத்தர காண்டம்

மதம் மூன்றும் ஆருக வருங்களிற்று முகத்தானை மனத்திலே தன்
பதம் ஊன்றும் அருந்தவர்க்குப் பதம் மூன்றும் கடந்த பதம்
பாலிப்பானை

விதம் மூன்றும் புரங்கடிந்தார் அளித்தருளும் ஒரு முதலை,வேரோடசஞ்
சிதம் ஊன்று பிறப்பொழிக்கும் ஆனைதிறை கொண்டவனைச்
சிந்தை
சேர்ப்போம்.

-அருணாசல புராணம்

மதந்தந்த மென்மொழி மாமலையாட்டி மடங்கள் கொன்ற
மதந்தந்த முக்கண் அரற்குமுன் ஈன்ற அம்மாமலை போல்
மதந்தந்த கும்பக்குழவி மந்தாரப் பொன்னாட்டிருந்து
மதந்தந்தசெம்மல் அன்றோ வையமய்ய வளர்கின்றதே

மலையேற்று நிரை புரந்தோன் அயன்பரவு
வழித்துணைவர் மகிழும் சேயைக்
கலையேற்று மடமயிலும் மலர்க்குயிலும்
தொழும் உமையாள் களிக்கும் வாழ்வை
விலையேற்றும் படைத்து மணிவெயில்
விரிக்கும் எயில் புடைசூழ் விரிஞ்சை மேவும்
மலையேற்று மதகளிற்று முகத்தானை
அடி வணங்கி அன்பு கூர்வாம்.

திரிவிரிஞ்சைப் புராணம்

மற்றைய கடவுட்போற்றி வரம் பெற இடையூறெய்தாது
ஒற்றை வெண்கோட்டு வேழம் உவப்பமுன் வழுத்துகின்றார் !
முற்று மக்களிற்றை யேத்தி முன்னிய யாவும் வாளா
பெற்றிலாதயலார் போற்றும் பேதமை என் கோல் மாதோ

கூர்ம புராணம்

மாமேவு தந்தை ஒரு மருப்பை என விளித்திடத் தன் மவுலியாய
தூமேவு பிறை ஒருபால் சொருகா அத்தந்தை எதிர்தோன்ற நின்று
பாமேவும் ஒரு மருபன் யானோ நீயோ தெரிந்து பகராய் என்று
பூமேவு நகை கொள்ளும், நாகாபரணக் களிற்றிருதாள் போற்றி வாழ்வோம்

திருநாகைக் காரோணப் புராணம்

மாரன் எடுத்து வளைக்குமொரு கரும்பை ஒடித்து மலர் சிதறி
நாரி எடுத்த வளிமாலை குலையத்துரந்து நயந்தோடி
வீரமனத்து வினைப்பாகர் குறிப்பின் ஒழுகி விளையாடும்
ஈரமதிச் செஞ்சடைகளி நல்யானை இணைத்தாள் ஏத்துவாம்

பிரபுலிங்க லீலை

மாலும் நான்முகத் தொருவனும் மற்றைவானவரும்
தால மீதுறை வார்களும் தம் வினை நிரம்பக்
கோலநாண்மலர் கொண்டருச்சனை செயும் கோமான்
மேலை நாள் உமையவள் அருள் விநாயகற்றெழுவாம்

- திருநல்லூர் புராணம்

மாழையம் பொற்றை ஏடாவைந்நுதி ஆணி கோடா
ஆழிசூழ் உலகவேந்தர் ஐவர் சீர் வரைந்தபிள்ளை
ஏழை என் மனவன் கல்லில் தன்னுரு எழுதி வைத்துத்
தாழ்வற அதனை நோக்கத் தந்தருள்புரியு மன்றே

- வீர சிங்காதன புராணம்

மாற்றரிய தொல் பிறவி மறிகடலின் இடைபட்டுப்
போற்றுரு தன் குரை கழல் தாள் புணை பற்றிக் கிடந்தோரைச்
சாற்றரிய தனிமுத்தித் தடங்கரையின் மிசையுய்ப்பக்
காற்றெறியும் தழைசெவிய கடாக்களிற்றை வணங்குவாம்

- காசி காண்டம்

மும்மலமாம் மதமுற்றுப் போத முழுத்தறியற வீசி முகிழ்த்தலர்
அன்பின் சங்கிலி உதறி, முதிர்ந்த அருட் கூடத்து
இம்மென நீங்கி வெளிக்கொரு புவனமெனும் கடுவனம் ஓடி
எப்பாகர்க்கும் அடங்கலவாகி இயங்கும் உயிர்க்கரிகள்
தம்மை விடாது தொடர்ந்து பிணிப்ப தகும் அங்குச பாசம்
தாங்குதல் கண்டும் தம்போல எண்ணிச் சார்பவை தமை நகையாக்
கொம்மை மலர்க்கைகள் கொட்டுவது ஏயப்பக் கொட்டுக சப்பாணி
குலைகெழு தட நிறை கலையை நகர்க்கின்ற கொட்டுக

- செங்கழுநீர் பிள்ளையார் பிள்ளைத் தமிழ்

முருகார் மலர்த்தோம முடியோனே அடியார் முயற்சித்திரம்
திருகாமல் விளைவிக்கும் மதயானை வதனச் செழுங்குன்றினைப்
புருகூதன் முதலாய முப்பது முக்கோடி புத்தேளிரும்
ஒரு கோடி பூதேவரும் கைதொழும் கோவை உற உன்னுவாம்

- வில்லிப் புத்தூர் பாரதம்

முன்னவாவிய பழம்பொருள் யாவையும் முனிந்து
பின்னவாவிய பெரும்பொருள் யாவையும் நல்கும்
பொன்னவாஞ் சடைப்பாடலேச்சுரன் அருள் புதல்வன்
சொன்னவாறறி களிற்றெழிற்றிணை மலர் சரணே.

திருப்பாப்புல்லியூர் புராணம்

முன்னை யார் மயிலூர்தி முருகவேள் தன்னை யாரெனின் தானோர்
தலைமகன்
என்னை யாளு மிறையவ னெம்பிரான் பின்னை யாரவர் பேரெயி

லாளரே.

திருக்குறுந்தொகை

மொழியின் மறைமுதலே முந்நயனத்தேறே
கழிய வருபொருளே கண்ணே - தெழிய
கலாலயனே எங்கள் கணபதியே நின்னை
அலாதையனே சூழாதென் அன்பு

- மூத்த பிள்ளையார் மும்மணிக் கோவை

வானோடு நீரும் வளியும் தீயும் வையகம் யாவும் உன் வடிவே
மானிட வாழ்வை மகிழ்வுறச் செய்வாய் மங்கலப் பொருளே
கணநாதா!

- விநாயக ஸப்தகம்

வேட்கை வினைமுடித்து மெய்யடியார்க்கு இன்பஞ்செய்து
ஆட்கொண்டருளும் அரன்சேயை: வாட்கதிர் கொள்
காந்தார மார்பிற் கமழ்தார்க் கணபதியை
வேந்தா உடைத்து அமரர் விண்

- கபிலர்

வேழ முகத்து விநாயகனைத் தொழ
வாழ்வு மிகுந்து வரும்
வெள்ளைக் கொம்பன் விநாயகனைத் தொழத்
துள்ளி யோடுந் தொடர்ந்த வினைகளே
அப்பம் முப்பழம் அமுதுசெய்தருளிய
தொப்பை யப்பனைத் தொழவினை யறுமே

- ஔவையார்

# பல பெயர் க்கோவை

சிந்தித் தவர்க்கருள் கணபதி போற்றி
சீரிய ஆனைக் கன்றே போற்றி
அன்புடைய அமரர்கட் காப்பாய் போற்றி
ஆவித் துணையே கணபதி போற்றி
இன்னடைச் சடைமுடி இறைவா போற்றி
ஈசன் தந்தருள் மகனே போற்றி
உன்னிய கருமம் முடிப்பாய் போற்றி
ஊர்நவ சந்தி உகந்தாய் போற்றி
எம்பெரு மானே இறைவா போற்றி
ஏழுல குந்தொழ நின்றாய் போற்றி
ஐயா கணபதி நம்பியே போற்றி
ஒற்றை மருப்புடை வித்தகா போற்றி
ஓங்கிய ஆனைக் கன்றே போற்றி
ஔவிய மில்லா அருளே போற்றி
அக்கர வத்து வானவா போற்றி
கணபதி என்வினை களைவாய் போற்றி
ஙப்போல் மழுவொன் றேந்தியே போற்றி
சங்கரன் மகனே சதுரா போற்றி
ஞயநம் பினர்பா லாடியே போற்றி
இடம்படு விக்கின விநாயகா போற்றி
இணங்கிய பிள்ளைகள் தலைவா போற்றி
தத்துவ மறைதெரி வித்தகா போற்றி
நன்னெறி விக்கின விநாயகா போற்றி
பள்ளியி லுறைதரும் பிள்ளாய் போற்றி
மன்றுள் ஆடும் மணியே போற்றி
இயங்கிய ஞானக் குன்றே போற்றி
இலகக் கொம்பொன் றேந்தியே போற்றி
வஞ்சனை பலவுந் தீர்ப்பாய் போற்றி
அழகிய ஆனைக் கன்றே போற்றி
இளமத யானை முகத்தாய் போற்றி
இற்குபதி விக்கின விநாயகா போற்றி
அனந்தலோ டாதியின் அடிதொழ வருளே

## கணபதி போற்றி

| | | |
|---|---|---|
| 1. | அருள்மிகு முகனே அழகா | போற்றி |
| | அரனின் மகனே அழகா | ,, |
| | ஆனை முகத்தவா அருளே | ,, |
| | ஆதி பரம் பொருள் ஆனாய் | ,, |
| | இக பர சுகமது அருள்வாய் | ,, |
| | உடுகுல பதியைக் கடிந்தாய் | ,, |
| | உமையின் சீர்பெறு மைந்தா | ,, |
| | ஊரும் ஆகுவாகனா | ,, |
| | எழில் நடம் புரியும் இறைவா | ,, |
| 10 | ஏரம்ப னெனும் பொருளே | ,, |
| | ஐங்கர முடைய ஐயா | ,, |
| | ஒப்பில்லா மணியே உயர்வே | ,, |
| | ஒசித்த கொம்பினை யுடையாய் | ,, |
| | ஓரெழுத்தாகிய தாரக | ,, |
| | கணபதியெனும் கணநாதா | ,, |
| | கரியுருக் கொண்டாய் கண்ணே | ,, |
| | காவேய பாரதம் வரைந்தாய் | ,, |
| | காவிரி தோன்றக் காரணா | ,, |
| | கைலையை ஔவைக் கீந்தாய் | ,, |
| 20 | கரும்பினை விரும்பும் கண்ணே | ,, |
| | முப்பழ மதிரசம் கொள்வாய் | ,, |
| | அப்பம் அவல்பொரி விழைந்தாய் | ,, |
| | கைத்தலம் நிறைகனி யுடையாய் | ,, |
| | உத்தமி புதல்வா உறவே | ,, |
| | பந்த மனைத்தும் தகர்ப்பாய் | ,, |
| | தேரச்சது பொடி செய் தீரா | ,, |
| | தீராப் பிணியும் தீர்ப்பாய் | ,, |
| | ஆராத இன்பம் அருள்வாய் | ,, |
| | பக்தருக் கருளும் பரமா | ,, |
| 30 | பன்னிரு கரத்தவன் முதல்வா | ,, |
| | பாம்பணை யானின் மருகா | ,, |
| | சடுதில் வர மருள் இறைவா | ,, |
| | சுந்தர ரூபா சிறுவா | ,, |

| | |
|---|---|
| சீதப்பனி மதி முடியாய் | போற்றி |
| ஈசனின் மைந்தா உயிரே | ,, |
| மூலப் பொருளே முதல்வா | ,, |
| முக்கண்ணன் மைந்தா பாலா | ,, |
| தொப்பண குட்டு முகப்பாய் | ,, |
| தற்பர சிற்பர சுகத்தாய் | ,, |
| செம்பவளக் குன்றனையாய் | ,, |
| வேதமும் தாங்கும் பாதா | ,, |
| நாதமும் கடந்து நிறைந்தாய் | ,, |
| இன்னருள் புரியும் நின்னருள் | ,, |
| என்னரும் பொருளே அரசே | ,, |
| வல்லபைக் கணேச குருவே | ,, |
| திருவுங் கல்வியும் தருவாய் | ,, |
| திருவடி பணிவோர்க் கருள்வாய் | ,, |
| விளங்கு சித்தி விநாயகா | ,, |
| கருங்குழி விளங்கும் கண்ணே | ,, |
| குருவும் தெய்வமும் ஆனாய் | ,, |
| பாம்பினை நூலாய்க் கொண்டாய் | ,, |
| பரமபத மதுன் பதமே | ,, |
| அக்ஷமாலைய துகந்தாய் | ,, |
| வல்லமை அனைத்தும் தருவாய் | ,, |
| வாதாபி கணபதி நாதா | ,, |
| வரமருள் தயாள குருவே | ,, |
| வருத்தும் துயரது துடைப்பாய் | ,, |
| வந்த வினையது போக்குவாய் | ,, |
| நினைத்ததை முடிக்கும் நிமலா | ,, |
| அறிவாய் ஒளிரும் நின்னுரு | ,, |
| மாதுளை மாங்கனி உவந்தாய் | ,, |
| அரக்கனைப் போரில் வென்றாய் | ,, |
| திங்களைக் கடிந்த பாலா | ,, |
| வித்தக மருப்புடை பெருமா | ,, |
| உலகுக்கு உயிராய் நிறைந்தாய் | ,, |
| செய்ப்பதி மேவிய புண்ணியா | ,, |
| சிற்றடி போற்றினேன் தலைவா | ,, |
| கழலிணை சேர அருள்வாய் | ,, |

சம்புவின் குமார அமரா போற்றி
அறுகினை முடிமேல் அணிவாய் ,,
எருக்கினை விரும்பி சேர்ப்பாய் ,,
தும்பை துலங்கும் மார்பா ,,
அம்பை அருளிய சேயே ,,
கம்பை மேவும் கணபதி ,,
நம்பினார்க் கருள்புரி மூர்த்தி ,,
திக்கெலாம் புகழ்பெறு தீரா ,,
தியான மூர்த்தியே வீரா ,,
மந்த்ர மூர்த்தியே மூலா ,,
தந்த்ர மூர்த்தியே தலைவா ,,
யந்த்ர மூர்த்தியே தேவா ,,
யோக மூர்த்தியே நாதா ,,
வேண்டுவ தருளும் வீரா ,,
வெற்றியை அருளும் கருணை ,,
புத்தியை வளர்க்கும் புனிதா ,,
அத்தி முகத்தவா அருள்வாய் ,,
ஆறுமுகத்தனுக் கண்ணா ,,
மூவுலகாளும் முதல்வா ,,
முக்குணங் கடந்த நாதா ,,
மூன்று கண்ணுடை இறைவா ,,
கற்பகக் களிறே குருவே ,,
நாலிரு புயத்தாய் நாயகா ,,
நாற்றிசை போற்றும் தலைவா ,,
நானற்றவிடமே நிற்பாய் ,,
அல்லல்களையும் அன்பே போற்றி ,,
எல்லாம் வல்ல இறைவா ,,
அஞ்சக் கரத்தின் பொருளே ,,
பூதமைந்தும் ஆனாய் ,,
வேத நான்கின் பொருளே ,,
நாத முதலின் முடிவே ,,
முடிவும் வடிவும் இல்லாய் ,,
அடியும் முடியும் நீயே ,,
கடி மலர் பூசை ஏற்பாய் ,,
வடிவமனைத்தும் ஆனாய் ,,
வேத முதல்வா வினாயக ,,

# கிராமியப்பாடல்கள்

முந்தி முந்தி நாயகனே ! முக்கண்ணன் தன் மகனே !
கந்தனுக்குமுன் பிறந்த கற்பகமே ! மெய்ப்பொருளே
வேம்படிப் பிள்ளையாரே ! வினைதீர்க்கும் நாயகனே
பிள்ளையாரை நம்பிப் பூட்டினேன் பொன்சாலு!
பூட்டின சாலுக்குப் பிழையும் வருகாமல்
கணபதியை வேண்டிக் கட்டினேன் பொன்சாலு !
கட்டின சாலுக்குக் கலகம் வருகாமல் !
உன்னை சரணமென்றேன் உன் பாதம் தஞ்சமென்றேன்
முந்தி முந்தி நாயகனே ! கந்தனுக்கு முன் பிறந்த பேழை வயிற்றோனே
எந்தைக் கொம்பனே ! மத்தகரி முகனே !
இளைய பிள்ளையாரே எண்ணித் தரவேணும் !
எண்ணித் தந்தாயானால் என்னென்ன படைப்பேன் !
பச்சரிசி தேங்காய், பயறு பலகாரம்,
எள்ளுடன் துவரை கொள்ளுடன் பயறு
அரிசி கலந்தது, ஆயிரம் கலமாம்
துவரைகலந்தது தொள்ளாயிரம் கலமாம்
எள்ளு கலந்தது எண்ணூறு கலமாம்
மொச்சை கலந்து மூன்னூறு கலமாம்
மூங்கில்களை போல முன்னூறு கரும்பு
நாணல் தட்டைப் போல நானூறுகரும்பாம்
அகத்திக் கம்பு போல ஐநூறு கரும்பாம்

பிள்ளையாரே வாரும் பிள்ளை பெருமானே !
என்னமடா ஓலம் இளைய பெருமானே !
எனக்குத் துணைநீயே கலிய பெருமானே !
காக்குந் துணைநீயே கணபதியே வந்திடுவாய் !
பூட்டின மாட்டுக்குப் பிழைமோசம் வாராமல்
கட்டின மாட்டுக்குக் கலகம் வந்து நேராமல்
பாரும் கணபதியே ! காரும் கணபதியே

ஏறுவாயோ ஊஞ்சலிலே எல்லோரும் பார்த்திருக்க !
தவழ்வாயோ ஊஞ்சலிலே தகப்பனார்தான் பார்த்திருக்க !
பாடுவாயோ ஊஞ்சலிலே பாட்டனார்தான் பார்த்திருக்க !
சந்தோஷ வேளையிலே, சிவனார் தந்தாரே இந்தப் பொற்களியை

தந்தீரே தந்தீரே – அவன் தழைக்கட்டும் நூறுகுடி !!
விக்கினங்கள் வாராமல் வினாயகரே காக்க வேணும்

ஆனை ஒரு ஆனே அகிலாபுரத்தானே
குட்டி மகிசானே கொம்புரெண்டும் பொன்னானே

குளிப்பாட்டும் யானைக்குக் கொம்பு திருத்தி விட்டு
குறுக்கே ஒரு நாமமிட்டு கும்புடுவோம் கணபதியே !

முக்கண்ணன் தன் மகனே ! கணபதியே முன்னடவால்
பெருச்சாளி வாகனரே ! உமையாள் திருமகனே
காருடனே கணபதியே

வாரும் பிள்ளையாரே ! வழிக்குத்துணையாக
வழிக்குத் தணையாக எனக்குப் பயம் தீர
மூத்த பிள்ளையாரே ! முன் நடக்க வேணும்
முன் நடந்தாயானால் மூணுடைப்பேன் தேங்காய்

பிள்ளையாரே வாரும ! பிழைவராமல் காரும் !
அஞ்சுகரத்தோனே ! ஆனைமுகத்தோனே !
தும்பி முகத்தோனே ! தொந்தி வயிற்றோனே !
பார்வதி குமாரா ! பரமனுடைய பாலா !
மாயன் மருகோனே ! மங்கையுமை பாலா !

அய்யன் கணபதியே ஆதிசிவன் புத்திரனே !
பார்வதியாள் புத்திரனே பாலகனே குஞ்ஜரமே !
காமாக்ஷி பெற்றெடுத்த கண்ணே நவமணியே !
சாலாட்சி யீன்றெடுத்த சாலைக்கரைப் பிள்ளையாரே !
வழிக்கரையிலே வாழும் வடிவுள்ள பிள்ளையாரே !
ஆலடியில் பிள்ளையாரே அரசடியில் பிள்ளையாரே !
வேலடியில் பிள்ளையாரே வேறு வினை வாராமல்
காலில் சிலம்பசையக் கைச்சதங்கை ஓசையிட
ஓசையிடப் பொற்சதங்கை ஓடிவாரும் பிள்ளையாரே !
ஓடிவந்து என்னெஞ்சில் உறுதியாய் காருமையா !
தும்பிக்கையானே ! தொழுதிறைஞ்சிப் போற்றுகிறேன்

பூப்போட்டு நீர் தெளித்தேன் புள்ளை கரம் குவித்தேன்
மலர் போட்டு நீர் தெளித்தேன் மைந்தன்நம ஸ்கரித்தேன்
அகர உயிரெழுத்தில் அவதரித்த குஞ்ஜரமே

ஐந்து கரத்தானே
தந்திமுக வாரணனே
ஓதும் கிளிவல்லபையை
தாவும் கிளி வல்லபையை
மலர் போட்ட மாளிகையில்
பூப்போட்ட மாளிகையில்
ஐயாகணநாதா
வல்லபையும் நீயுமாய்
ஆண்டவா மகாதேவா
அழையுமையா தேவர்களை

ஆனை முகத்தோனே
தற்பரனே முன் வருவாய்
ஒரு கையில் நீ இடுக்கி
தனிக்கையில்தானிடுக்கி
மன்னவனே வந்திறங்கு
புண்ணியனேவந்திறங்கு
அரனுடைய புத்திரனே
வந்திருக்க வேணுமையா
அமருமையா பந்தியிலே

# விநாயகர் கீதம்

## அகத்தியர் பாடியது

பூத்திருக்கும் நாமமும் புகுந்திருக்கும் நாமமும்
சேர்த்துவைக்கும் நாமமும் ஜகத்துளாடும் நாமமும்
பார்த்த திக்கெலாம் தன் ஏகரூபமாய்ப் பரந்து நின்று
காத்திருக்கும் நாமமும் கணேசராஜன் நாமமே. 1

மலைபோல் வரும் காலதூதருக்கோ அவர் தம் மன்னனுக்கோ
வலைபோல் விழும் யம பாசம் தனக்கோ மருண்டு நில்லேன்
நிலைபேர்வுறுமல் எந்தன் நெஞ்சகத்தே எழில் நீரணிந்து
விலைபேசவொண்ணு ரத்னமாதங்கமொன்று வெளிப்பட்டதே. 2

பூக்கும் கலைஞானம் எல்லாம் தெளியும் பொருள் சிறக்கும்
தேக்கும் பரசிவானந்தக் கடலில் திளைத்திடலாம்
வாக்கும் மனமும் இனிக்கத் துதித்து வலம் வருவீர்
காக்கும் கணபதி வேழமுகன் தாள் கமலங்களே. 3

அமுதளித்து அல்லல் தவிர்த்துப் புரப்பதும் அம்புதம் போல்
சமுத நிறைப்பதும் சச்சிதானந்த தரங்கத் தமிழ்ந்
துமுத மதர்ப்பில் அடியேன் களிக்கத் துணைசெய்வதும்
குமுத மருப்பொன்றிருபத முக்கடக் குஞ்சரமே. 4

நீண்டவிநயகன் நின்ற விநயகன் நிர்க்குணத்தில்
மூண்டவிநயகன் முத்து விநயகன் மொய்க் கருணை
பூண்ட விநயகன் கோயில் விநயகன் பூவுலகை
ஆண்டவிநயகன் அம்புயத் தாள்கள் அரண் நமக்கே. 5

மதங்கொண்ட யானையை வானோர் வணங்கி வழிவிலகப்
பதங்கெண்டு அடர்ந்து நடக்கும் கைம்மாவைப் பரிந்து பற்றும்
விதங் கண்டறிந்து உயர் கற்பூரஜோதி வெளியொளியில்
நிதங்கண்ட நேயருக்கு ஈரேழுலகும் நிகரில்லையே. 6

நித்திலம் பூக்கும் நிலாச்சுழிமேல் ஞானநிட்டையிலே
சத்தமடங்கித் தனித்திருந்தேன் சிவ சத்தி வெள்ளம்
தத்தித் திரையெறிந் தெங்கும் பெருக்கெழுத் தான் நடுவில்
புத்திக் கமலத் தமர்ந்தது காண் அந்தப்போதகமே. 7

போகமு மேனிப் பொலிவும் புலமையும் புண்ணியமும்
யோகமும் வாய்ந்து விளங்கிடலாம் வான் உருத்தெழும் ஏழ்
மேகமுங் கண்டு நெடுந்துதிக்கையால் விழைந்து பற்றித்
தாகமடங்கப் பிழியும் களிற்றைச் சரண் புகினே. 8

தீபத்துக்குள்ளே ஒளியாம் ஓங்காரத் திருஉருவும்
தாபத்தைத் தீர்த்து மெய்யின்பங்களைத் தரும் தண்ணருளும்
பாபத்தைத் தீர்க்கும் அருட்பார்வையும் கொண்டு நம்மைப் பாலனஞ்செய்
ஆபத்துக்காத்த விநயகன் அம்புயத் தாள்கள் அரண் நமக்கே. 9

காயும் கிரணக் கதிரவனும் தண் கலாமதியும்
வேயும் திகிரியென் கொண்டெழுகின்ற வித்தகன் தேர்
சாயும்படிக்கதன் அச்சையிறுத்துத் தன் தந்தையையும்
தோயும் வியப்பில் திகைக்கவைத்தான் சரணம் அரண் நமக்கே. 10

சத்துருவான கொடுஞ்சூரர் தானையைச் சாய்த்தெழும்பிக்
குத்துங் கடதடக் கொம்பி கண்டீர் கடுங்கோபமுற்றுக்
கத்துரு பந்தம் விலக்கச் செயிக்கும் கருடனுக்குச்
சித்துரு தந்து அமுதக் குடம் காட்டும் சிவக்கொழுந்தே. 11

சின்னஞ்சிறிய திரு நயனங்களும் கேண்செவியும்
பொன்னும் பணியு முந்நூலும் கொம்பொன்றும் புனைந்து நின்ற
பென்னம் பெரிய வடிவமும் ஓசைப்பெருங்குரலும்
முன்னம் தனியே இருந்து கண்டால் பின் முடிவில்லையே. 12

முந்துறும் முத்தமிழ் தந்தான் குமரன் முருகன் அன்று
வந்தெனக்குத் தனியே அழைத்துச் சொன்ன வாசகம் காண்
சந்தன இன்ப சுகந்தாபிடேகன் தமயனை நீ
எந்த இடத்தும் முதலிற் பணிந்தழை என்பதுவே. 13

எங்கள் பிராட்டி எழுந்தாள் மகிடன் இரத்தமெண்ணிச்
செங்கண் கனலெனத்தாவி வால் வீசிச் செகம் குலுங்கச்
சிங்கம் முழுங்கவும் கண் குறிப்பாலுடன் தேவி செல்லத்
தங்கரம் தாழ் செவி வைத்தான் பதங்கள் சரண் நமக்கே. 14

சத்தியமாய் வேத நித்தியமாய் சிவ சாட்சியுமாய்
முத்தியுமாகிய மூல விநாயகன் முன்னவனை
எத்தினம் போற்றி நறுமணம் காட்டி இறைஞ்சுகின்றீர்
அத்தினமே உங்கள் ஊழ்வினைப் பாசம் அறும் தினமே. 15

தினந்தினமாறும் பொய்வாழ்வை விரும்பிச் சிவனளித்த
மனந்தன்னைத் தீய வழியிற் செலுத்தி மயங்கல் நன்றோ
சினந்தவிர்ந்தார் கண்ட செல்வன் கணேசன் திருவரையில்
அனந்தனைப் பூணும் அவன் பதம் கொள்வீர் அடைக்கலமே. 16

## அகத்திய கீதம்:

அகத்தியர் இயற்றியது

### 1. கணபதி

அரும்பாத மனக் கனிய அருள் செய்தானை
அகலாத துணை வனுமாய் ஆட் கொண்டானை
விரும்பா தென் வாழ்வனைத்தும் வீணாகாமல்
மெய்ஞ் ஞான விளக்கேற்றி மிக வைத்தானை
பெரும் பானை வயிற்றனை ப்ரண வாகாரப்
பெருமானை, நாயடியேன் பிடித்துக் கொண்ட
கரும்பானைக் கண்ணுதற்குக் கண்ணானைக்
கணபதியைக் கஜபதியைக் கண்டேன் நானே.

### 2. கணபதி

ப்ரபோ கணபதே! பரி
பூரண வாழ்வருள் வாயே!
சார்ந்து வணங்கித் துதி பாடியாடி உந்தன்
சன்னதி சரணடைந்தோமே
சாந்த சித்த சௌபாக்கியம் யாவையும்
தந்தருள் சற்குரு (ப்ரபோ)

ஆதிமூல கண நாத - கஜானன
அற்புத தவள ஸ்வரூபா
தேவ தேவ ஜெய விஜய விநாயக
சின்மய பரசிவ தீபா. (ப்ரபோ)

தேடி தேடி எங்கோ ஓடுகின்றார் - உன்னை
தேடிக் கண்டு கொள்ளலாமே - உள்ளே
தேடிக் கண்டு கொள்ளலாமே
கோடி கோடி மத யானைகள் பணிசெயக்
குன்றென விளங்கும் பெம்மானே (ப்ரபோ)

ஞான வைராக்ய விசார ஸார ஸ்வர
ராக லய நடன பாதா
நாம பஜன குண கீர்த்தன நவவித
நாயக ஜெய ஜகன்னாதா ! (ப்ரபோ)

பார்வதி பால அபார வார வர
பரம பகவ பவதரணா
பக்த ஜன ஸுமுக ப்ரணவ விநாயக
பாவன பரிமள சரணா (ப்ரபோ)

## 3. வேழ முகத்தவன்

1. வேழ முகத்தவனே - ஜெய ஜெய
வீரம் மிகுத்தவனே - சதுர்
வேத மகத்துவனே

வாழ வணங்கு கின்றோம் - மகிழ்ந்துமுன்
வந்து வரம் தருவாய்
வந்து வரம் தருவாய் - உயிர்க்குலம்
என்றும் நலம் பெறவே.

2. எத் தொழிலானாலும் - நல்ல செயல்
எச் செயலானாலும் - அது
சித்தியடைந்திடவே - முன்னம் அவர்
சேவிப்பதுன்னை யன்றோ
நித்தம் நினைத் துதிக்கும் - இவ்வேழையின்
நெஞ்சக்கோயிலிலே - ஒரு
மத்த கஜம் போலே - காக்ஷிதரும்
வஜ்ரவி நாயகனே

3. ஜோதி கற்பூரத்திலே - உபாசனே
சொல்லும் தொடர்ச்சியினுல் - வரும்
ஏதும் வசப்படுமாம் - மனேசித்தி
எட்டும் இயற்றிடலாம் - எழும்
நாதக் கனுவினிலே - விநாயகா
நானுனைக் கண்டு கொண்டேன் - அந்த
போதத்தினுல் வருவாய் வளர்ந்த பைம்
பொன் மலை போன்றவனே.

4. பொங்கித் தலை தூக்கிப் - பொருப்பினைப்
போழ்ந்து துதிக்கையினுல் - திசை
எங்கும் செலுத்தி வரும் - யானை ஒன்று
என் மொழி கேட்பதனுல் - என்றும்
மங்களமே பெறுவேன் - அச்சம் இன்றி
வையகத்தே திரிவேன் - பிறர்
சங்கடம் நீக்கிடவே - மனம் தனில்
சக்தி வளர்த்திடுவேன்.

5. பாடும் இடங்களிலே - உனது
பாதச் சிலம்போசை - துதி
நாடும் இடங்க ளெல்லாம் - உனது
ஞான மணியோசை - பாடிப்பாடிக்
கூடும் மெய் அன்ப ரெல்லாம் - உணர்ந்திடக்
கொண்டெழும் பேரோசை - இவை
நீட வணங்குகின்றேன் - என் பாடலில்
நின்றருள் நாயகனே.

6. தந்தைக்குத் தேரளித்தான் - மணம் செயத்
தம்பிக்குத் தாரளித்தான் - அவன்
ஐந்து கரத்தாலும் - எனக்கருள்
அள்ளி அளிப்பதனுல் - மனமு
வந்து விளம்பு கின்றேன் - மனத்துயர்
மாற்றும் உபாயமெலாம் - அவன்
மந்திரத்தே உளதாம் - அக்காலமும்
வந்தது மங்களமே.

7. ஒற்றை மருப்பழகன் - அவன் துணை
உள்ளது வாழ்க்கையிலே
மற்றினி ஐயமில்லை - செல்லுதற்கு
மார்க்கமும் தோற்றமுண்டாம் - வளர்
நற்றவ வல்லபத்தால் - தொடர்ந்தவர்
நன்மை அடைந்திடுவார் - முற்றும்
வெற்றி அளித்தருள்வாய் - என் சிந்தையில்
வீற்றருள் நாயகனே.

8. ஆனை முகத்தனை அன்புடனே தொழ
ஞானம் மிகுத்து வரும் - தானுறெனும்
ஞானம் மிகுத்து வரும்
பானையின் உந்திப்பரம் பொருளைத் தொழப்
பண்பு வளர்ந்து வரும்.

9. கம்பக் களிற்றைக் கருத்தில் இருத்திடில்
சம்பத் தெல்லாம் வளரும் - இகபர
சம்பத் தெல்லாம் வளரும்
தும்பியில் மோதகம் தொட்டவனைத் தொழத்
துன்ப மெலாம் விலகும்.

10. வாரணத் தனை வணங்கி வந்தாற் பரி
பூரணத்தைப் பெறலாம் - யோகபரி
பூரணத்தைப் பெறலாம் - பெரும்
பாரப் பெரும் திருமேனியனைத் தொழப்
பாருல காண்டிடலாம்.

11. சித்தி விநாயகன் சேவடியைத் தொழச்
செல்வ மெலாம் பெருகும் - அழியாச்
செல்வ மெலாம் பெருகும் - சிவ
சக்தி விநாயகன் தான் மலரைத் தொழச்
சந்ததி ஓங்கி வரும்.

12. அங்குச பாசம் அணிந்தவனைத் தொழ
மங்கள வாழ்வு வரும் - மன்றல் முதல்
மங்கள வாழ்வு வரும்
எங்கும் இருப்பவன் என் ஐயனைத் தொழ
இன்ப மெலாம் பெருகும்

13. கைக்கனி ஏந்தும் கடாசலத்தைத் தொழ
எக்கணமும் ஜெயமாம் - செய்யும் செயல்
எப்பொழுதும் ஜெயமாம் - எங்கள்
விக்கின மூர்த்தி விநாயகனைத் தொழ
வெவ்வினை வேறிடுமாம்.

14. ஓரெலி மேல் வரும் உத்தமனைத் தொழ
ஒன்பதும் நன்மை தரும் - கோள்களிவை
ஒன்பதும் நன்மை தரும் - நின்று
பேரொலி செய்யும் பிரான் பெயரைச் சொலின்
பேய்கள் அகன் றொழியும்.

15. கும்பமுனிக்கருள் கொம்பனைக் கும்பிடக்
கோடி நலங்களுண்டாம் - கமழ்
தும்பையும் பூவும் தொடுத்தறுகிட்டருள்
ஜோதி வளர்த்திடுவோம் - கனிந்தினித்
தோத்திரம் செய்திடுவோம்.

## 4. நாம பஜனமே ஜீவன்

1. நாம பஜனமே ஜீவன் ! ஜீவன் ! நாம பஜனமே ஜீவன் ।
ஞான நலம் தரும் நாதலயம் தரும் நாம பஜனமே ஜீவன் ॥

2. கஜமுக மங்கள கணபதி நாமம்
கபில கணேச்வர நாமம்.
கவலையை நீக்கும் பெருநிலை ஆக்கும்
கனிவொடு காக்கும் நாமம்.

3. ஆதி மூல கண நாயக நாமம்
அருண விநாயக நாமம்.
அயன் முதல் வானவர் முனிவர் அனைவரும்
அனுதினம் வழிபடும் நாமம்.

4. வெற்றி யளிக்கும் மேன்மை அளிக்கும்
விக்ந விநாயக நாமம்
விகட கடாசல கடக மகா பல
விபவ மனோமய நாமம் - நாமம்
விமல குணோதய நாமம் ॥

5. ஓங்காரப் பொருளாகிய நாமம்
உதய கஜானன நாமம் ;
எளிதினில் இரங்கி அருள் தர விளங்கும்
ஏக விநாயக நாமம் - நாமம்

எங்கள் குலம் தொழும் நாமம்
அகத்தியன் அருள் செயும் தமிழ்க் கவி புகல்பவர்
அகத்தினில் குடி புகும் நாமம் ॥

## விநாயக மாலை

அகத்தியர் இயற்றியது.

வாசித்துத் தெய்வத் துதிகளைப்பாடி வணங்கியுண்மை
பேசித்துயர்ப் படுவோருக் குதவிப் பெரியோர் பதம்
நேசித்து வாழ் பயன் பெற்றுனை நெஞ்சுள் நிறுத்தியென்றும்
பூசித்துப் போற்ற அருள் புரிவாய் பரிபூரணனே ! 1

சாகாத கல்வியும் தீராத செல்வமுந்தா வனலில்
வேகாத மேனியும் மாருத இளமையும் மேதினியில்
ஆகாத யாவையுமாக்குந் திறமு மகத்தை விட்டுப்
போகாத பக்தியும் தந்தருள் வாய் பரிபூரணனே ! 2

## ஆதி விநாயகர்

சீ ரானையூர் பெருமான் சேயானைத்தூயானைச் செழுந்தேன் பில்கும்
தாரானை அருளெனக்குத்தந்தானை வந்தானைத் தனம் நல்வாழ்வின்
வேரானை மூஷிகத்து வீற்றுனை மேலானை வினைக்கோள் நீக்கும்
ஓரானை முகத்தானை விளங்கு மைந்து கரத்தானை உளத்துள் வைப்பாம்.

## மூல விநாயகர்

அகத்தனை அருள்டே ஷி அசித்தனை விசித்த வெண்காண்
மகத்தனை வரிக்காராபூ வரத்தனை யுரத்து மாமத்
தகத்தனைத் தகர்த்து வென்ற தடத்தனைத் தனி த்த வேழ
முகத்தனைக் கடவுட்கெல்லாம் முனத்தனை மனத்துள் வைப்பாம்.

## வரத விநாயகர்

நெஞ்சகத்தில் அன்பெனும் நெடுந்தளைக்குள் ஆக்கியே
வஞ்சமின்றி வாழ்த்து வோர்க்கு வரமளிக்கும் ஐங்கரக்

குஞ்சரத்தை எண்ணுவோம் குழைந் தெல்லோரும் எண்ணிஞல்
அஞ்சல் அஞ்சல் என்று வந்தடுத்து நின்று காக்குமே.

## செல்வ விநாயகர்

அல் வழியல்லா நல்வழி கண்டோம் அவனிக்கே
சொல் வழியாகும் தீவினை போகும் சுக மேவும்
வில்வ விசால விருட்ச நிழற் கீழ் விளையாடும்
செல்வ விநாயகன் அம்புஜ பாதம் சேர்வோமே !

## படிக விநாயகர்

மணி முடியணிகஜ வதனு சரணம்
மனமொழி யணுகவு மரியாய் சரணம்
தணியறு கிலையிட மகிழ்வாய் சரணம்
தாழ கடுடையாய் சரணம் சரணம்
பிணியற நவநிதி தருவாய் சரணம்
பிரணவ ஹரபர நிலையாய் சரணம்
பணிபவரிட முறைபவனே சரணம்
படிக விநாயக சரணம் சரணம் !

## சாமள கணேசர்

துங்க மிகு பரிசுத்த கங்கா ஜலத்தை நிகர்
தூய மனமுற்ற வரையே
தொழுது புகல் மொழிகளிற் பழுது வாராமல்
தொடர்ந்து துதி பாடியாடி
அங்கமும் புளகிக்க ஆனந்த நீரருவி
ஆருகி யோட நின்தன்
அனந்த கல்யாண குண வைபவ மெலாம் எண்ணி
அன்பிஞல் அவச மிகவே
எங்கணும் உனைக் கண்டு நானு மிறு மாந்துலவ
எப்பொழுதும் அதுபோல நீ
என்னையுங்கண்டு நான் எண்ணிய தெலாமருளி
என்னுடனிசைந்து வருவாய்
சங்கர குமார சஞ்சல நிவாரண ஞான
தாயக கணேச நமவே

ஸர்வ மங்கள வரஸதானந்த மூர்த்தியே
சாமள கணேச நமவே !

## மரகத கணேசர்

சேக்கிள ருருவத் தேவே சரணம்
ஸித்திக ளெல்லாம் பொழிவாய் சரணம்
வாக்கின் வல்லப வடிவே சரணம்
மரகத கணபதி சரணம் சரணம்

பாக்கிய மருளும் பதியே சரணம்
பாசாங்குச மோதக கர சரணம்
ஆக்க மனைத்து மளிப்பாய் சரணம்
ஆதி விநாயக சரணம் சரணம்

## ஆபத்துக் காத்த விநாயகர்

தீபத்துக் குள்ளே ஒளியா மோங்காரத் திருவுருவும்
தாபத்தைத் தீர்த்து மெய்யின் பங்களைத்தரும் தண்ணருளும்
பாபத்தை நீக்கும் அருட்பார்வையுங்கொண்டு பாலனஞ்செய்
ஆபத்துக் காத்த விநாயகன் தாள்கள் அரண் நமக்கே.

## நடந விநாயகர்

வேத விநாயக சரணம் சரணம்
விஜய விநாயக சரணம் சரணம்
ஜோதி விநாயக சரணம் சரணம்
சொர்ண விநாயக சரணம் சரணம்
நாத விநாயக சரணம் சரணம்
நடன விநாயக சரணம் சரணம்
கீத விநாயக சரணம் சரணம்
கிரண விநாயக சரணம் சரணம்

## முத்து விநாயகர்

நீண்ட விநாயகன் நின்ற விநாயகன் நிர்குணத்தில்
மூண்ட விநாயகன் முத்து விநாயகன் மொய் கருணை
பூண்ட விநாயகன் கோயில்விநாயகன் பூவுலகை
ஆண்ட விநாயகன் அம்புயத்தாள்களரண் நமக்கே !

## பவள விநாயகர்

ஓடும் புன்னெறி யுறுவாய் சரணம்
ஒரு கொம்புடையாய் சரணம் சரணம்
நாடும் முருகன் மணமே புரிய
நயமாயருளும் நாதா சரணம்
மூடும் வினைதவிர் முதல்வா சரணம்
மூஷிக வாகன சரணம் சரணம்
பாடும் புலவர்க் குரியாய் சரணம்
பவள விநாயக சரணம் சரணம்

## ஸித்தி விநாயகர்

வரத கணபதி வருகவே - ஜக - வசிய கணபதி வருகவே
மதன கணபதி மதுர கணபதி வயிர கணபதி வருகவே
சரப கணபதி வருகவே ஸுக ஸரஸ கணபதி வருகவே
சக்தி கணபதி வருகவே சிவ ஸித்தி கணபதி வருகவே

பரம கணபதி வருகவே - ஜய - கமல கணபதி வருகவே
பால கணபதி தீப கணபதி யோக கணபதி வருகவே
உரக கணபதி வருகவே எனை அருளும் குணநிதி வருகவே
உதக கணபதி உபய கணபதி உதய கணபதி வருகவே

## தெய்வ கணேசர்

விக்கின மெலாம் நீக்கி வெற்றியை அளிக்கும் மத
வேழ முகமும் கருணையால்
மெய்யன்பரைக் கண்டு குளிர்கின்ற மூன்று திரு
விழிகளும் பிறையழகுடன்

பக்க லொரு தந்தமும் பரிமள ஸுகந்தமும்
பட்டுடை அலங்காரமும்
பாசாங்கு சங்களும் பாரெலாம் பணிகின்ற
பாதமும் என் இதய மலரை

எக்கணமும் அகலாமல் ஏகாந்த ஜோதியாய்
இன்பம் பொழிந்து வரவும்
யாவரும் எனக்கு வசமாகவும் செய்கின்ற
யாவும் மங்கள மாகவும்

திக்குகள் அனைத்திலும் செங்கோல் நடத்தி மகிழ்
க்ஷிப்ர கணபதி வருகவே
செல்வ கணபதி பெரிய வில்வ கணபதி எமது
தெய்வ கணபதி வருகவே

## வழித் துணை விநாயகர்

விழித்தமேல் விழியுண் மூத்தி விரித்துவான் வரித்த இன்பங்
கொழித்து வெண் கோடொன் றேந்தி கொழுதி வண்டிமிரும் பைந்தார்
செழித்த மென் மன்றலெங்குஞ் சிவ மணப்பயனே நல்கும்
வழித்துணை விநாயகன்பொன் மலர்ப் பதம் மனத்துள் வைப்பாம்

## ராஜ விநாயகர்

சந்த்ரோதய தலபம்போல் மணிமுடி
சந்தோபிசித விதந்தூவ
சங்கோலிட கண கண்டாரவமது
சம்போ கணபதி என்ரேத
இந்த்ராதியர் ஜய லம்போதர கஜ
கும்பாகர நம என்றுட
என்பா லொருமுறை கண்பாரெனமுனம்
நின்றூர் கனி வொடு கொண்டாட
மந்த்ரோதய பரிமள பிம்போதய
மந்தர ரூப விநாயக ஓம்
மங்காப் பிரணவ கங்காரப் ரிய
வரத விபூதி விநாயக ஓம்
யந்த்ரோதய குண நவநிதி ஸுரபதி
யாகோத்பவ கணநாயக ஓம்
ஹேரம விநாயக நாம விநாயக
ராஜ விநாயக நாயக ஓம்

## பிரணவ விநாயகர்

ஓங்காரத்தின் ஒளியே ஓம்
உத்தரகிரியின் பதியே ஓம்
ஓதிய பூஜா பலமே ஓம்
மங்கள யந்திர மயமே ஓம்
நீங்கா அருள் வரம் தருவாயே
அடியேன் துதி சொல வருவாயே

நின் மந்திர உரு வேற்றிடுவேன்
நில வுலகத்தை மாற்றிடுவாய்
ஏங்காப்பர நிலையுற வேண்டும்
எங்கும் அடியவர் எழ வேண்டும்
என்னிடம் நீ வழி சொல வேண்டும்
யாவரும் அவ்வழி செல வேண்டும்
தே ங்கானந்தக் கடலே ஓம்
மாங்கனியுணுமத கஜமே ஓம்
செல்வ வி நாயக வில்வ விநா யக
ஸித்தி விநாயக நாயக ஓம்.

நாமாவளி:

கஜ மதங்க வதந ஓம் கனகரூப ஸுமுக ஓம்
ஏக தந்த நமஹ ஓம் விக்ன ராய சரணம் ஓம்

நம்மையாண்ட மந்திரம் நடன நாத மந்திரம்
நாவிலே விநாயக ப்ரகாசமான மந்திரம்

நினைக்கு முன் அனைத்தையும் நிகழ்த்தும் நித்ய மந்திரம்
நீண்ட தும்பியால் பகைவரிற நெருக்கும் மந்திரம்

நுண்மை யான மந்திரம் தண்மையான மந்திரம்
நூலுளே நுழைந்திடும் கணேச நேச மந்திரம்

நெஞ்சில் நின்ற குஞ்சரத்தில் அஞ்சு சக்திமந்திரம்
நேத்திரத்தி லொளி எழுப்பி நிஷ்டை யேறும் மந்திரம்

நைந்தவர்க் கிரங்கி இன்பம் நல்கும் வேழமந்திரம்
நொடியிலீனர் துடிதுடிக்க இடி யிடிக்கும் மந்திரம்

நோக்கினுற் குபேர செல்வம் ஆக்கு மௌன மந்திரம்
நோன்பு(உ)ஞற்றி ஞான மென்ற தேன் புகட்டும் மந்திரம்

பங்கஜாங்க மந்திரம் பஞ்ச தீர்த்த மந்திரம்
பாடுகின்ற வேளையிற் பரிந்து பார்க்கும் மந்திரம்

பின்னு முன்னு மான பின்பு பிள்ளையான மந்திரம்
பீலி மோலி தாங்கியே பிறங்குகின்ற மந்திரம்

புஷ்பதந்த பூர்வ புண்ய புஷ்ப ராக மந்திரம்
பூர்ண கும்ப ஸோம ஹோம பூஜை கொண்ட மந்திரம்

பெருகும் ஏக மந்திரம் பெரிய யாக மந்திரம்
பேசுகின்ற மந்திரம் அபேத மான மந்திரம்

பைரவாதி கணகடார படலபந்த மந்திரம்
பொருளறிந்த மெய்யருள் பொருந்து கின்ற மந்திரம்
போத வர்ண மந்திரம் போக யோக மந்திரம்
பௌஷ்கராதி சாஸ்த்ர தத்வ ஸர்வதர்ம மந்திரம்

## அகத்திய விநாயகர்

முகத்தினிலே நகையுடனும் அகத்தினிலே பகையுடனும் முறை நேரின்றி
ஜகத்தினியே திரிபவரைத்தரும சிவ ஸன்மார்க்கம் தழுவச் செய்ய
இகத்தினிலே பரபோகம் பொழிய எனை வருவித்த இறைவன் எந்த
யுக்த்திலுலே எனைப்பிரியா அகத்திய விநாயகனை உணர்ந்து வாழ்வாம்.

ஏக கணபதி வாழ்கவே சிவ போக கணபதி வாழ்கவே
இந்த்ர கணபதி யந்த்ர கணபதி மந்த்ர கணபதி வாழ்கவே

நாக கணபதி வாழ்கவே கண ராஜ கணபதி வாழ்கவே
ஞான கணபதி வாழ்கவே சிவ கான கணபதி வாழ்கவே
மேக கணபதி வாழ்கவே மிகு வீரகணபதி வாழ்கவே
மேரு மணிமுடி சேருமகணித தாரு கணபதி வாழ்கவே
மாக கணபதி வாழ்கவே ஜெய கோஷ கணபதி வாழ்கவே
வர்ண கணபதி சொர்ண கணபதி வாழ்க என்மனம் வாழ்கவே

---

लक्ष्मीगणेशमीडे।

अष्टाधिकद्वि दशमन्त्रगमं गणेशं दन्तं दधानमभयं त्वथ शङ्ख चक्रे।
शुण्डाग्रहेमघट मब्जकराब्ज पुत्र्याऽप्यालिङ्गितं त्रिनयनं कनकाभमीडे॥
पाशाङ्कुशाशुगशरासन रम्य हस्तं रक्ताब्जगं विवसनामहिलारतं तम्।
सप्ताधिकत्रि दशवर्णमनु प्रदीपं उच्छिष्टलंबजठरं सततं नमामि॥

शूलोत्पलांबुजशरासन दन्तपाशधान्याग्र चक्ररुचकांश्च गदां धरन्तम्।
शुण्डाग्र कुंभमिभवक्त्रमथेन्दुचूडं आलिङ्गितं जलज भूषणहस्तया च।
रक्तं त्रिणेत्रमपि नैजसतीकृताङ्कं वन्दे त्रयस्त्रिदशमन्त्रगमोह नाङ्गम्॥

## விநாயக கீதம்

அல்லும் பகலும் அனுதினமும் கவி ஆயிரங்கள்
சொல்லும்படி எந்தன் உள்ளச் சுடரொளி தூண்டுகின்றான்
கொல்லும் கொடுங்கஜமுகனைப் பிறைக் கொம் பொடித்து
வெல்லும் பெருமகன் வில்வத்து அடியில் விநாயகனே (1)

விண்ணோர் வணங்கும் முழுமுதல் தெய்வம் வேதாகமத்தின்
கண்ணாகும் ஞான கணபதி காண் மலைக்காட்டில் அந்நாள்
அண்ணா என மனத்தாலே அழைத்தான் அகம் மகிழப்
பெண்ணைச் சேர்த்த பெருமான் நமக்குப் பெருந்துணையே (2)

பெற்றவர்க் கெழும் ஊடலைத்தீர்த்திடப் பிஞ்சகன் கைப்
பற்றியிழுத்தன்னை பக்கமிருத்தும் பசும் பிள்ளையைக்
குற்ற மிலா மனம் கொண்டருள் மும்மதக் குஞ்சரத்தைக்
கற்ற வருக்குப் பிறவிக்கடல் கணைக் காலளவே (3)

துரியரவர்க்கு வெண்தும்பி அன்பர்க்குத்துவர் நிறத்தன்
உரிய செபத்து மரகதம் மங்கலத் தொண் பொன் வணம்
பெரியன் அரியன் எளியன் பகைஞர் பிழையடக்கக்
கரிய களிற்றன் என வருவான் எங்கள் காவலனே (4)

காடும் கரியமுகிலும் கிரியும் நின் காட்சி யென்றே
பாடுமெனைத் தன் அருகே அழைத்துக் கண் பார்த்து எழுதும்
ஏடும் மணக்க ஓர் அக்கரம் நாட்டிக் கை ஈந்தது வெண்
கோடும் பிறையு மின் மோதகமும் கொண்ட குஞ்சரமே (5)

குவிக்கும் கனி எட்கசி மோதகங்கள் உட்கொண்டு உகந்து
சுவைக்கும் பெருமான் பதமே துதித்துத் துணை பெறுவீர்
அவிக்கும் வினையால் அலந்தறிவுங்குன்றி ஆற்றலின்றித்
தவிக்கும் தருணத்திலேனும் கனிந்து சரண் புகுந்தே (6)

சங்கை யகன்ற சமாதியில் தன்னந்தனியறிவாம்
பங்கசத்தே காட்சி தந்தது பொன் மணிப் பாத்திரத்தால்
கங்கை கடாகப் புனலாட்டி வில்வம் கமழ் சிறப்பின்
செங்கை குவித்துச் சிவபூஜை செய்கின்ற சிந்துரமே (7)

சிந்திக்க உள்ளம் சிலிர்க்கும் சிவஞானத் தேன் பொசியும்
பந்திக்கும் பாசத்தளையகலும் பசு பாவனை போய்ச்
சந்திக்க மேலைத்தலைவாயில் சூட்சுமத்தாள் திறக்கும்
வந்திக்கத் தானே வருங்காண் வலம்புரிவாரணமே (8)

வாதித்தறிய வொண்ணு ஞான நர்த்தன மண்டபத்தே
சோதித்தலையில் அணுவான சூட்சுமம் தொட்டு விட்டால்
நாதக் கலையின் அனுபூதியாம் காட்சி நல்கிநிற்கும்
ஆதித்தர் கோடிநக காந்தி சேரருள் ஆணையொன்றே (9)

ஆவனஞ் செய்கை பரிசுத்தமாக அருள் கனிந்த
பாவனன் காண் பல ஆடலும் செய்யும் பரம் பொருள் காண்
தேவன் எஞ்சாப் பொருள் தந்து பத்தொன்று சிவாலயங்கள்
தாவனஞ் செய்யத் துணைநிற்கும் வேழத் தலைவனன்றே (10)

தலையார நின்னைப் பணிந்து செந்நாத் தழும்பேற வாழ்த்தி
அலையேது மின்றி அடங்கி எனக்குள் நின் ஆடல் எல்லாம்
கலையாகக் கண்டுலகத்திலும் கண்டெந்தன் காலமுற்றும்
நிலையாகிவாழக் கணநாயகனே முன்நின்றருளே (11)

அந்தணன் மாலும் கணத்தவர் தேவரும் அஞ்சலித்துத்
தந்தலை குட்டிக் கைமாற்றிச் செவிதொட்டுத் தாழ்ந்தெழுந்து
வந்தனை செய்ய முடியசைத் தேற்கின்ற வள்ளலுக்குச்
சிந்தனை சாதனை சீவன் திரிநெய் திருவிளக்கே (12)

விடையானும் தாயும் மயூரனும் மாலும் மிக வியப்பக்
கிடையா அமுதம் விரும்பிப் பாலாழி கிளர்ந்தலைப்பப்
புடையாகி இட்டுக் கடைந்த பொருப்பைப் புறம் வளைத்துக்
கடையால் இழுத்து விளையாடும் மூடிகம் காப்பெமக்கே (13)

ஏகத்தைக் காட்டி ஓரேழையும் காட்டி எனக்கு ஞான
தேகத்தைத் தந்த ஓர் தந்தனை இந்திரன் தென்புலமும்
தாகத்தை தீர்க்கக் கமண்டல கங்கையைச் சாய்த்துவிட்ட
காகத்தைக் கண்டு களித் தேன் எனதிரு கண்ணினுள்ளே (14)

கண்டேன் மரகத சூரியர் கோடி கலந்துருவம்
கொண்டே எழுந்த குணமாமலையைக் குவிந்துமனம்
வண்டே அணைய முரன்று சுழன்றேறி வான் அமுதம்
உண்டேன் உயிர்க்கலை வென்றேன் இனி யாதுரைப்பதுவே (15)

யாமங்களிலே மணிநாதம் கேட்கும் இரு செவிகள்
தாமங்கசைய நெருங்கும் சலனங்கள் தானுணர்வாம்
மாமங்கள நல்வடிவமும் காட்டிவயப்படுமாம்
நேமந்தவறுது உபாசனமார்க்கத்து நிற்பவர்க்கே (16)

நிற்பதும் என்னுள் நிலைப்பதும் இங்கே நிகழ்வதும் பேர்
அற்புதமாயெனை ஆட்கொண்ட பெம்மானை ஐம் முகனும்
சிற்பரமாய்க் கண்ட செஞ்சுடர் வெள்ளத்தைத் தெய்வீகப் பூங்
கற்பக யானையை எண்ணுந் தொறுமென் கரந்தொழுமே (17)

கைக்குஞ்சரத்தை வணங்கி அகத்தியன் கண்டுரைத்த
மெய் கவிமாலை புகல வல்லார்க்கென்றும் வெற்றியுண்டு
துய்க்கும் இகபரபோகங்களுண்டு தொடர்ந்து பதம்
வைக்கும் பொழுதும் துணையுண்டு வாழி இவ்வையகமே (18)

பண்டு முதலின்று வரை பக்தியொடு நினது புகழ் பாடுமொடு விரதமல்லாம்
பற்றிலேன் உலகிலொரு பற்றிலேன் பக்தஜன பதமல ரலம்பி அன்பாய்த்
தொண்டு செயலல தொன்று கற்றிலேன் என்மனத் தூய்மை நீ அறியாததோ
துங்கமாய் எங்கும் துதிக்கத் துவங்கினேம் துணையாக வரவேண்டுமே
தெண்டமிடு மெய்யன்பர் மண்டல நெடும் பஜனை தேக நினைவின்றி நடனம்
திக்காட ஆடுகையில் தித்தா எனத் தானும் சேர்ந்தாடி மகிழுமலையே
குண்டலினி குறுகுறுத்தெழு மூஷிகத்திலருள் குலவவரு குலதெய்வமே
கொன்றை யருகும் பொழிந்தின்பமொடு கும்பமுனி கும்பிடும் கணநாதனே (19)

## உச்சிட்ட கணபதி

கருத்தில் நினைத்தவை எல்லாம் கைவர மெய்வரம் தரும் பொற்களபம் தீக்கோள்
வருத்தமெலாமகற்றி அருள் நிழல் விரிக்கும் கற்பகம் தேன்வரி வண்டார்க்கும்
மருக் குழலாள் வல்லவையை வாமத்தே வைத்த மணிமலையாம் கண்முன்
உருச் சுடரும் மந்திர உச்சிட்டகண நாயகனை உளத்துள் வைப்பாம் (20)

எடுத்தவை வெற்றியாக எதிரிகள் வலிமை குன்ற
தொடுத்த எம்வாழ்வு பொங்க தொழில் வளர்ந்தனந்த செல்வம்
மடுத்திட யாமும் எம்மை மருவு மண்டலமும் ஓங்கக்
கடுத்தவிழ்ந்தருள் உச்சிட்ட கணபதி காப்பாமின்றே (21)

விண்ணுடார் மலர் பொழிந்து விரும்பிப் போற்றும்
மூன்று விநாயகனே மெய்ஞ்ஞான விளக்கே
கண்ணுளா ஐந்துகரக் கடவுளே உன்
கருணையுள்ளம் கசியாதா என நான் காத்துப்
பண்ணுறும் துதிகள் பல பாடிப்பாடிப்
பணிகின்றேன், என் மனக் கவலை தீர்த்துத்
தண்ணார் நின் வல்லபத்தைத் தருவாய் எந்தத்
தருணத்தும் எனைத் தொடர்ந்து தழுவும் தேவே (22)

# ஸ்ரீ மஹா கணபதி புராண வரலாறுகள்

பிரும்ம வைவர்த புராணம்

பார்வதி பிள்ளைப்பேறுபெறப் புண்யகம் என்ற விரதமிருந்தாள். விரதம் முடிந்ததும் பெரியோர்களுக்குத் தக்ஷிணை வழங்கும் போது, புரோஹிதரான ஸனகர் எதிர்பாராத படி சிவபெருமானையே தக்ஷிணையாகக் கேட்டார். தேவி திகைத்து நிற்கையில் இத்தகைய சுப விரதத்தில் தக்ஷிணை கேட்டபடி தருவதே உசிதமென மும்மூர்த்திகளும் வற்புறுத்திய போது பார்வதி தக்ஷிணையாக சிவபெருமானை அளித்துப் பின் சிவபெருமானுக்கு ஈடாக லக்ஷக்கணக்கில் பசுக்களைத் தருவதாகக் கூறிச் சிவபெருமானைத் திருப்பித் தர வேண்டினாள். புரோஹிதர் சம்மதிக்கவில்லை. பார்வதி பரம்பொருளான கிருஷ்ணனை வேண்ட , கிருஷ்ணன் தோன்றினார். பார்வதி தான் பிள்ளைப் பேறு பெறக் கிருஷ்ணரைக் குறித்து விரதமிருந்ததைக் கூறி அவரைப் போன்ற புதல்வனை வரமாக வேண்ட, கிருஷ்ணன் அந்த வரத்தை அளித்தார். கிருஷ்ணன் கோரியபடி ஸனகர் சிவபெருமானைத் திருப்பியளித்தார். கிருஷ்ணனே கணேசராகப் பார்வதியிடம் தோன்றினார். குழந்தையைக் காணத் தேவர்களுடன் சனி பகவானும் வர அவர் கண் பட்டுச் சிசுவின் தலை வெட்டுண்டு கிருஷ்ணரைச் சென்றடைந்தது. புஷ்பபத்ரா நதிக்கரையில் வடக்கில் தலை வைத்துப் படுத்திருந்த யானைத் தலையைக் கொணர்ந்து விஷ்ணு பொருத்தினார். கணேசர் கஜாநநர் ஆனார். குழந்தைக்கு ரிஷிகளும் தேவர்களும் கூடி எட்டு பெயரிட்டனர்.

विघ्नेशश्च गणेशश्च हेरम्बश्च गजाननः।
लम्बोदर श्चैकदन्तः शूर्पकर्णो विनायकः।

விக்நேசுவரர், கணேசர், ஹேரம்பர், கஜாநநர், லம்போதரர், ஏகதந்தர், சூர்பகர்ணர், விநாயகர் என்ற எட்டுப் பெயர்களும் விக்நம் மறைய உதவுகிற திருநாமங்களாயின

''ओं श्री ह्रीं क्लीं गणेश्वराय ब्रह्मरूपाय चारवे
सर्वसिद्धि प्रदेशाय विघ्नेशाय नमो नमः''

என்பது அவரது திருமந்திரமானது. தன் புதல்வனின் தலை அறுபட்டதற்காக சனி பகவானுக்குத் தேவி உடலை இழந்து துயருறும்படி சாபமிட, விஷ்ணு உபதேசித்த ஸ்ரீ கணேசரின் ஸம்ஸார மோஹன கவசத்தின் மூலம் சனி சாபம் நீங்கப் பெற்றார். (முதல் பாகம் பக் 37)

கணேசருக்குக் குழுமியிருந்த தேவர்களுள் எல்லா தேவதைகளையும் விட முன்னதாக வழிபடப் பெறுகிற உரிமையை வரமாகக் கிருஷ்ணர் அருளினார். (கிருஷ்ணரையே பரம் பொருளாகக்கொண்டு இந்தப்புராண வரலாறுகள் அமைந்துள்ளன)

பரசுராமர் சிவபெருமானின் சீடர், சிவனாரது பேரருளால் அஸ்திர வித்யை பெற்றவர். ஈசனது கோடரியை பிரஸாதமாகப் பெற்று க்ஷத்திரியர்களை அழித்தவர். அவர் தனது குருவான சிவபெருமானைக் காண வந்தார். அனுமதியின்றி அந்தப்புரம் நுழைந்த அவரை ஸ்ரீ கணேசர் தடுக்கப் பரசுராமர் போரிட்டார். சிவனது கோடரியைக் கணேசரின் கழுத்தை நோக்கி எறிந்தபோது தன் இடது தந்தத்தால் கணேசர் அதனைத் தடுத்தார். தந்தையின் ஆயுதத்திற்கு மதிப்பளிக்கத் தன் இடது தந்தத்தை அது வேருடன் வெட்டிச் சாய்க்கவிட்டார். கணேசர் ஏகதந்தரானார். தந்தம் பூமியில் விழுந்ததும் பூமி தாங்காமல் பேரிடி போன்ற ஒலி எழுந்தது. அந்தப் புரத்திலிருந்து ஓடி வந்த தேவி கணேசரின் தந்தம் பூமியில் கிடந்ததையும் அவரது வாயிலிருந்து ரத்தம் தாரையாகப் பெருகி வழிவதையும் கண்டு சோகமுற்றாள். அப்போது அங்கு பாலராகத் தோன்றிய கிருஷ்ணர், ''ஸ்ரீ கணேசருக்கு ஸாமவேதம் எட்டு பெயர்களை முன்னரே குறிப்பிட்டுள்ளது. கணேசர், ஏகதந்தர், ஹேரம்பர், விக்நநாசகர், லம்போதரர், சூர்பகர்ணர், கஜவக்த்ரர், (கஜாநநர்) குஹாக்ரஜர் என்பவற்றில் ஏகதந்தர் என்ற பெயர் பொருளுள்ளதாக ஆகவே இந்த நிகழ்ச்சி நேர்ந்துள்ளது.'' என்று கூறி கணேசரைத் தடவிக் கொடுத்து வேதனை நீங்கச் செய்தார். பரசுராமரும் வேதம் கூறிய அந்த எட்டு பெயர்களைக் கூறி கணேசரை வணங்கி அபராதத்தைப் பொருத்தருள வேண்டினார் (பரசுராமர் செய்த ஸ்தோத்திரமும் கண்ணன் குறிப்பிட்ட கணேசாஷ்டகமும் ஸ்தோத்திரப் பகுதியில் முதல் பாகத்தில் பக் 155, இரண்டாம் பாகத்தில் பக் 340ல் உள்ளன).

துளஸீ தேவ குலத்துப் பெண். நாராயணனைக் குறித்து நல்ல கணவனைப் பெறத் தவமியற்றினாள். கங்கைக் கரையில் அவள் உலாவுகையில் அங்கே கணேசரைக் கண்டாள். அவள் மனத்தில் காமம் உண்டானது. தன்னை மணக்கும்படி அவரை வேண்டினாள். கணேசர், தாம் எந்தப் பெண்ணையும் மணக்க விரும்பாததைப் பல முறை தெரிவித்தும் அவள் வற்புறுத்தியதால் செடியாகும்படியும் அசுரனே உன்னை மணப்பான் என்றும் சபித்தார். துளஸி குற்றத்தை உணர்ந்து அவரது எட்டு திருநாமங்களைக் கூறி வணங்கி வழிபட்டபோது, "நீ, இதுவரை தவத்தால் வழிபட்டுவந்த ஸ்ரீ நாராயணனின் அருள் பெறுவாய். அவரது அருளைப் பெறச் செய்யப் பெறுகிற வழிபாட்டில் நீ முக்கியப் பொருள் ஆவாய். நாராயணனுக்கு உன்னிடம் பேரருள் மிக்க பிரியம் தோன்றும். என் வழிபாட்டில் மட்டும் நீ இடம் பெற மாட்டாய்" எனச் சாபநீக்கம் செய்தார். (துளஸி மறுபிறவியில் பிருந்தாவாகத் தோன்றி அசுரன் சங்கசூடனின் மனைவியாகி, சங்கசூடனைச் சிவபெருமான் மாய்த்ததும், நாராயணனின் அருள் பெற்றுச் செடியாகி அவரது வழிபாட்டில் மிகச்சிறந்த பொருளானாள்.)

சிவபுராணம்,

நந்தி, பிருங்கி முதலிய சிவகணங்கள் பார்வதி தேவி தனிமையில் இருக்கும் போது பாதுகாப்பளித்து வந்தனர். தேவியின் தோழிகள் இருவர், ஜயாவும் விஜயாவும், தேவி தனக்கெனத் தனித்த பாதுகாப்பாளரை அமைத்துக் கொள்ளும்படி வேண்டினர். ஒருநாள் பார்வதீ நீராடிக் கொண்டிருக்கும் போது சிவபெருமான் தேவியைக் காணவந்தார். வாயிலைக் காத்த நந்தி சிவபெருமானிடம் தேவி தனிமையில் நீராடிக் கொண்டிருந்ததைத் தெரிவித்த பின்னரும் அதனைப் பொருட்படுத்தாமல் சிவன் உள்ளே நுழைந்தார். நாணம் மிகுந்த நிலையில் தேவியின் நினைவில் தோழி கூறியது நினைவிற்கு வந்தது. சிவகணங்களில் ஒருவரான நந்தி சிவனைத் தடுக்க இயலவில்லை. தனது கணத்தவரானால் தடுத்து நிறுத்தி யிருக்கக் கூடும் என நினைத்தாள். அவள் கை, அவளது உடலில் பூசிய மஞ்சள் பூச்சை அனிச்சையாக திரட்டி உருட்டியது. அதில் தேவியின் அருட்பார்வை புகுந்தது. அதனிடம் சைதன்யம் நிலைத்து உயிர் பெற அற்புத பாலகர் தோன்றினார்.

சக்தி கணத்தின் முதல்வர் அவர். அவரைப் புதல்வராக ஏற்றுத் தன் ஆற்றலின் அம்சத்தைத் தடியாக உருவாக்கித் தந்து தன் காப்பாளனாக ஆக்கினாள். சிவன் ஒரு சமயம் தேவீ நீராடுகிற தனிமையில் உட்புக, இவர் தடுக்க, சிவன் வெகுண்டு எழ, சிவகணங்கள் காப்பாளனுடன் போரிட்டுத் தோற்க, தான் பார்வதியின் புதல்வனும், காப்பாளனுமாவன் எனக்கூறி சிவனைத் தடுக்க, தேவர் படை நடுங்கி ஓட, தேவி தன் அன்புப் புதல்வனுக்கு உதவ இரு சக்திகளை ஏவ, பால கணத்தலைவனின் வலிவு வளர்ந்தது. சிவன் தன் திரிசூலத்தை ஏவி பாலனின் கழுத்தை அறுத்தார். தேவியின் துக்கம் எல்லை கடந்தது. தன் சக்திகளை ஏவி உலகையே பிரளயம் செய்து அழிக்கத் தொடங்கினாள். நாரதர் முதலானோர் வேண்டியும் தன் புதல்வன் உயிர் பெற்றாலன்றி உலக அழிவை மாற்ற இயலாது என தேவி கூற சிவபெருமான் வடதிக்கில் முதலில் கண்ட உயிரினித்தின் தலையை வெட்டி இந்த முண்டத்துடன் பொருத்த பாலன் உயிர்த்தெழுவான் எனக் கூறினார்.

வடக்கு திக்கில் முதலில் யானை தென்பட்டது. அதற்கு ஒற்றைக் கொம்பு தானிருந்தது. அதனை வெட்டிப் பாலனின் உடலில் பொருத்தப் பாலன் உயிர்த்தெழுந்தான். தேவர்களால் வேண்டப்பெற்ற சிவபெருமான் தன் முழு தேஜஸ்ஸையும் அந்த சிசுவிடம் செலுத்தித் தானும் உட்புகுந்தார். சிவனின் புதல்வருமாக ஆன அவரை கஜானனர் எனப் பெயரிட்டுத் தேவர்கள் வழிபட்டனர். தேவியும் தேவனும் தம் மடி மீதமர்த்தி கஜானனரை அன்புக்கினியவனாக ஆக்கினர். அவர் முகத்தில் செந்தூரம் வழிந்தது. தேவி ''செந்தூரத்துடன் அவரை வழிபட நன்மை பெருகும்'' என அருளினாள். கணேசர் தேவியையும் தேவனையும் வணங்கி சிவாபராதம் செய்த தன்னை மன்னிக்க வேண்ட, சிவன் அவரை உச்சியில் முகர்ந்து தலைமேல் தூக்கிக் கொண்டாடினார். மும்மூர்த்திகளும் ''தம் வழிபாட்டிற்கு முன் இவரை வழிபட்டால்தான் தான் மற்றவர் வழிபாடு பயன்தரும். இவரை வழிபடாமல் செய்த எந்த தெய்வ வழிபாடும் பலனளிக்காது'' என்றனர். எல்லா தேவ கணங்களுக்கும் தலைமையையும் அளித்தனர். அதனால் கணேசர், கணபதி கணநாதர் என்றெல்லாம் பாராட்டப் பெற்றார்.

கணபதியும் குகனும் அன்புமிகச் சகோதரர்கள். அன்புக்குப் பல சோதனைகள் நேரும். அன்பே வெல்லும். இருவரது திருமணத்திலும் போட்டி ஏற்பட்டது. யார் முதலில் மணப்பது ? இருவரும் சிவதேஜஸில் தோன்றியவர்கள். பூமியை மூன்று முறை வலம் வருபவர்களில் முதல்வருக்கு முதலில் திருமணம் என்று முடிவானது. நீராடித் தூய ஆடை உடுத்தித் தாயையும் தந்தையையும் ஒரு ரத்தின ஆஸனத்தில் அமர்த்தி ஏழு தடவை வலம் வந்து வணங்கி எழுந்த கணபதி தன் திருமணத்தை முடிக்கக் கூறினார். உலகை வலம் வராமலே திருமணத்தை எதிர்பார்ப்பது எங்ஙனம் என்ற கேட்டதும், உலகமே என் பெற்றோர் தான் என்றார். உடனே பிரும்மா சித்தி, புத்தி என்ற இரு புதல்விகளுடன் திருமணம் செய்வித்தார்.

மூவுலகையும் வலம் வந்த முருகன், கணேசருக்குத் திருமணம் முடிந்து விட்டதை உணர்ந்து மனம் நொந்து தன் பெற்றோரை விட்டகன்று க்ரௌஞ்ச மலையில் தங்கினார். இனி மணப்பதில்லை என உறுதி கொண்டு 'குமாரர்' ஆனார். குமரனைக் காணாத பார்வதி பிரிவால் வருத்தப்பட. க்ரௌஞ்ச பர்வதம் சென்று சிவனும் பார்வதியும் அவரைக் கண்டு வருகிறார்கள்.

பத்ம புராணத்தில் - மற்றொரு லீலை. தேவப் பெண்கள் அமுதத்தில் தோய்த்தெடுத்த ஒரு கொழுக்கட்டையைச் சமைத்து தேவியிடம் அர்ப்பணம் செய்தார்கள். கணேசரும் குகரும் இதனைப் பெறப் போட்டியிட்டனர். அறவழியில் நடந்து காட்டினவர் பெறலாம் என நிபந்தனை விதிக்கப் பெற்றது. மூவுலகிலுள்ள புண்ய தீர்த்தங்களில் நீராடுவதே சிறந்த அறப்பணி என நினைத்து உலகைச் சுற்றி வந்த குகப்பெருமானைப் பெற்றோரை வலம் வந்து வழிபடுவதே மிகச்சிறந்த அறப்பணி எனச் செய்து காட்டிய கணபதி போட்டியில் வென்று கொழுக்கட்டை பெற்றார். இதனால்இவருக்குக் கொழுக்கட்டையே முக்கிய நிவேதனப் பொருளாயிற்று.

மற்றொரு லீலை: - சிவபெருமான் ஒரு வேள்வி புரியத் தொடங்கினார். தேவர் அனைவரையும் அதில் பங்கு பெற அழைக்கின்றபொறுப்பை குகப்பெருமானிடம் தந்தார். மயில் மீதேறி வேகமாகச் சென்றாலும் வேள்வி தொடங்குமுன்னர். அனைவரையும் அழைக்க இயலவில்லை. கணேசரோ தன்

தந்தையே எல்லா தேவர்களின் வடிவானவர் எனத் தியானித்து மும்முறை அவரை வலம் வந்து அனைத்து தேவர்களும் வேள்வியில் பங்கு பெறும்படி மானசிகமாக வேண்டினார். தேவர்களனைவருக்கும் இவ்வேண்டுகோள் உரிய நேரத்திற்கு முன்னரே, போய்ச்சேர, அனைத்து தேவர்களும் வேள்வியில் பங்கேற்றனர். எல்லாம் வல்லவர் என்ற பெருந்தன்மையை குகப்பெருமான் வெளியிட, எளிமையும் இறைவனருள் பெற உதவும் என்பதைக் கணபதி வெளியிடுகிறார். பெரும்பாலும் எளிமை பெருமையை வென்று விடுகிறது.

காசியில் மனுவழிவந்த ரிபுஞ்ஜயன் என்ற அரசன் தெய்வ அருள் பெறக் கடுந்தவமியற்றித் தேவர்கள் அனைவரும் தன் நாட்டு மக்கள் சுபிக்ஷத்துடன் வாழ உதவ வரம் பெற்றான். நாகராஜனான வாஸுகியின் பெண் அநங்க மோகினியை மணந்து திவோதாஸன் என்ற பெயர் பெற்றான். தேவருலகம் இவனுக்கு அடிமையாயிற்று. மக்கள் நேர்மையுடன் நல்லறம் காக்கத் தேவர்கள் மழை தந்து உதவினர். தேவர் தன் வலிமையை உணர்த்த அடிக்கடி பூமிக்கு வந்தனர். தேவர் தம் பணியைத் தேவருலகிலிருந்தே செய்யட்டும். பூமிக்கு வர வேண்டாம். தேவர் குறுக்கீடின்றி பூமியை நானே ஆள்வேன் எனப் பிரும்மாவிடம் அனுமதி பெற்றான். மும்மூர்த்திகளும் தேவர்களும் பூமியை விட்டகன்றனர். சிவபெருமானுக்குக் காசியை விட்டகல மனம் வரவில்லை. நல்லறமே நேரில் பலனளிக்கு மாதலால் தேவரின் குறுக்கீடு தேவையற்றதென்ற திவோதாஸனின் கோரிக்கையைச் சிவபெருமானும் ஏற்றுக் கைலாஸம் சென்றார்.

தேவர்கள் தம் அதிகாரம் குன்றியதால் மனம் குன்றி அரசன் தவறிழைக்க நேருகிற தருணத்தை எதிர்பார்த்தனர். அவர்கள் சூரியனைக் காசிக்குச் சென்று அரசாட்சியைக் கண் காணிக்க அனுப்பினர். சூர்யன் தன் பௌதிக உருவில் உலகத்தை வலம் வந்தார். பன்னிரு தெய்விக உருவில் காசியில் நடப்பதைக் கண்காணித்தார். (லோலார்கர், உத்தரார்கர், ஸாம்பாதித்யர், த்ரௌபதாதித்யர், மயூகாதித்யர், ககோல் காதித்யர், அருணாதித்யர், விருத்தாதித்யர், கேசவாதித்யர், விமலாதித்யர், கங்காதித்யர், யமாதித்யர் என்ற பெயரில் இன்று காசியில் பல்வேறு இடங்களில் சூர்யன் கோயில்

கொண்டுள்ளார்) அரசின் ஆட்சி முறையில் குறை காணாமல் அவர் அங்கேயே தங்கி விட்டார்.

பிரும்மாவே அந்தணர் வேஷத்தில் அரசனிடம் சென்றார். தான் வேள்வி புரிவதால் அதற்கு உதவக் கோரினார். அரசன் தன் அரசையே அவரிடம் ஒப்படைத்துப் பத்து அச்வமேத வேள்விகளைச் சீராக நடத்திக் கொடுத்தார். (அவ்வேள்விகள் நடந்த இடம் இன்று தசாச்வமேத கட்டம் என்ற பெயருடன் விளங்குகிறது) அவராலும் அரசரிடம் குறை காண இயலவில்லை.

சிவபெருமானுக்குக் காசி செல்லும் விருப்பம் வலிவடைந்தது. கணபதியை அனுப்பினார். அவர் சோதிடராக வேஷம் கொண்டு காசிவாசிகளுக்கு நல்லது நடக்க விருப்பதைத் தன் இனிய குரலில் சொன்னார். மக்கள் மயங்கி இவரைச் சென்றடைந்து நன்மை பெற்றனர். அரசனும் தன் அரண்மனைக்கு இவரை அழைத்து இவர் ஒரு ஞானி என்றுணர்ந்து, தனக்கு நாடாளும் ஆசை குறைந்து விரக்தி ஏற்படுவதைத் தெரிவித்து வழிகாட்ட வேண்டினார். வருகிற பதினெட்டாவது நாளில் முதிர்ந்த மகான் உனக்கு நல்வழி உபதேசிப்பார் என அருள் வாக்கு கூறி நாடெங்கிலும் சுற்றி அதனைத் தன் வசப்படுத்தினார். மக்களைத் தேடி அலைந்ததால் அவர் டுண்டியானார். (டுண்டி-தேடுபவர்)

பதினெட்டாம் நாளன்று நாராயணனும் அந்தணர் வேஷத்தில் வந்து அரசனுக்கு உபதேசம் செய்து திவோதாஸேச்வரலிங்கத்தை ஸ்தாபித்து வழிபடச் செய்தார். திவோதாஸன் நற்கதியடைந்தான். தேவர்கள் பூமிக்கு வரத் தொடங்கினார். சிவதம்பதியும் கணேசரது அருட்செயலால் மறுபடி காசியில் தங்கும் வாய்ப்பு பெற்றனர்.

கணேச புராணத்தில் - பரம்பொருள் கணேசரே. ஸ்ருஷ்டியின் தொடக்கத்தில் தோன்றி பிரும்மாவைத் துன்புறுத்திய மதுவையும் கைடபனையும் அழிக்கும் முயற்சியில் வெற்றி காணாத நாராயணர் சிவபெருமானின் உபதேசத்தால் கணேசரின் அருள் பெற்று அசுரர்களை மாய்த்தார். ஸித்த க்ஷேத்ரத்தில் ஸித்தி விநாயகரை வழிபட்டார்.

வாசக்னவி என்ற முனிவரின் மனைவி முகுந்தா, தன் புதல்வன் க்ருத்ஸமதரிடம் கோபம் கொண்டு அவருக்குப்

பிறக்கிற பிள்ளை கொடும் அசுரனாவான் எனச் சபித்தாள். இதனால் வருந்திய க்ருத்ஸமதர் புஷ்பக வனம் சென்றடைந்து கணபதியைக் குறித்துக் கடுந்தவமியற்றினார். தவத்தால் மகிழ்ந்த கணபதி மூவுலகும் புகழ்கிற சக்திமிக்க புதல்வன் தோன்றுவான். அவனை வெல்ல சிவபெருமானால் மட்டுமே இயலும் என வரமளித்தார். வரத கணபதியை வழிபட்டு வந்த க்ருத்ஸமதருக்கு எதிரில் ஒரு சிறுவன் தோன்றினான். தான் கிருத்ஸமதரின் தும்மலிலிருந்து தோன்றியதாகக் கூறித் தன்னை மகனாக ஏற்க வேண்டினான். அவனது முரட்டுத் தனத்தால் பயந்த முனிவர், அவனை மகனாக ஏற்றுக் கணபதியை வழிபடும் முறை உபதேசித்தார். கோடரியும், தாமரையும், மாலையும், கொழுக்கட்டையும் ஏந்திய கணேசர் அவன் முன்தோன்றி அவன் விரும்பியபடி மூவுலகையும் வெல்ல இரும்பாலும் வெள்ளியாலும் தங்கத்தாலும் முப்புரங்கள் அமைத்துத் தந்து, ''சிவபெருமானுடன் மோதா வரை நீ மூவுலகையும் ஆள்வாய். சிவபெருமானுடன் மோதினால் ஒரே அம்பால் உன்னை அவர் அழிப்பார்'' என்று வரமளித்தார்.

முப்புரங்களையும் கொண்டதால் திரிபுரனான அசுரன் மூவுலகையும் வென்றான். கைலாஸத்தை விட்டகலும்படி சிவனிடம் கேட்டான். தேவர்கள் நாரதரிடம் உபதேசம் பெற்று ஸங்கட நாசன ஸ்தோத்ரத்தால் (2ம் பாகம் பக் 344) விநாயகரை வேண்ட, விநாயகர் பிராமணச்சிறுவன் வேஷத்தில் திரிபுரனிடம் சென்று சிவபெருமான் வழிபட்டு வருகிற சிந்தாமணி கணேச விக்ரஹத்தைப் பறித்துத் தரத் தூண்டினார். சிவபெருமான் இல்லாதபோது அதனைத் திருடித் திரிபுரன் கொண்டு வந்த சிந்தாமணி கணபதிப் பதுமை அசுரனின் கையிலிருந்து மறைந்தது. சிவபெருமான் வருந்தி நிற்கையில் திரிபுரனை மாய்க்கக் கணேசரின் அருள் இன்றியமையாததென நாரதர்கூறச் சிவபெருமான் வழிபட்டுக் கணேசரின் அருள் பெற்றுத் திரிபுரனை மாய்த்தார். (மஹாகணபதி ஸஹஸ்ர நாமத்தின் முன்னுரை 2ம் பாகம் பக்.4 காண்க).

பார்வதி இவரை மோதகமும் லட்டுகமும், நிவேதனம் செய்து ஆராதித்தாள். ராதை கிருஷ்ணனின் அன்பு பெற இவரை ஆராதித்துத் துதித்தாள். சந்த்ரன் விநாயகரைப் பரிகசிக்க இவரது சாபத்தால் தேய்வு பெற்றதும் வழிபட்டுச் சாபம் நீங்கப்

பெற்றான்.

ஒருநாள் நாரதர் ருசிமிக்க அபூர்வமான பழத்தை சிவபெருமானிடம் காணிக்கையாக வைத்தார். கணேசரும் குகனும் அதனைப் பெற விரும்பினர். பக்கத்திலமர்ந்திருந்த பிரும்மனிடம் சிவபெருமான் யாரிடம் இதனை அளிப்பது என்று யோசனை கேட்க வயதில் சிறிய குகனே இதைப் பெறுவது உசிதம் என்றார். சிவபெருமான் குகனிடம் பழத்தைத் தந்தார். பிரும்மா தன் இருப்பிடம் சென்று படைக்கத் தொடங்கியதும் தடை ஏற்பட்டது. அவரது எதிரில் கோபமிக்க கணேசர் தோன்றினார். அவரைக் கண்டு பிரும்மா நடுங்கினார். கணேசரின் கோபத்தால் விகடமான வடிவத்தையும் அதனைக் கண்டு பிரும்மா நடுங்கியதையும் கண்ட சந்திரன் சிரித்தான். ''நீ பிறர் காண முடியாத நிலை பெறுவாய். உன்னைக் கண்டவரும் துயரடைவர்'' எனக் கணேசர் சபிக்க, சந்திரன் மறைந்தான். சந்திரனைக் காணாமல் உலகம் வரட்சி கண்டது. தேவர்கள் விநாயகரை வழிபட்டு வேண்ட சாபத்தின் உக்கிரத்தை பாத்ரபத சுக்ல சதுர்த்தி ஒருநாளில் மட்டும் உணரும்படி சுருக்கினார்.

சந்திரனின் தொடர்ந்த வழிபாட்டில் மகிழ்ந்த பகவான் அவனைத் தன் தலையணியாகக் கொண்டார். ஸங்கட சதுர்த்தி வழிபாட்டில் சந்திரனுக்கு அர்க்யமளித்தே தன் வழிபாட்டை முடிக்கச் செய்தார். சந்திரனைச் சபித்ததை விட சந்திரனுக்கு அருள் புரிந்ததே, அவனுக்கு அதிகப் பெருமை தந்ததே, கணேசரின் பெருமைக்குச் சான்று.

யுகங்களுக்கேற்ப கணேசர் எடுத்த அவதாரங்கள் பல. கிருத யுகத்தில் சிங்கத்தில் அமர்ந்து பத்து கைகள் கொண்ட மஹோத்கடர், திரேதாயுகத்தில் மயிலேறிய மயூரேச்வரர் தன் பெயர் கொண்ட மயூரேச்வரத்தில் கோயில் கொண்டவர், வெண்ணிறம், கொண்டவர், ஆறு கைகள் உள்ளவர், துவாபரத்தின் இறுதியில் பெரும் எலியை வாகனமாக்கி, கஜானனர் என்ற பெயருடன் சிவந்த மேனியும் நான்கு கைகளும் கொண்ட வடிவில்; கலியின் இறுதியில் தூம்ரகேது (தூமகேது) என்ற பெயருடன் குதிரை ஏறி இரு கைகளுடன் புகை நிற மேனியுடன் வர இருப்பவர் என்று நான்கு அவதாரங்கள் முக்கியமானவை.

மஹோத்கடர்.

பிரும்மாவின் மானஸ புத்திரர்களில் ஒருவரான கசியபருக்கும் அதிதிக்கும் புதல்வனாக மஹோத்கடர் தோன்றினார். கசியபர் உபதேசித்த விநாயகமந்திரத்தை வெகு நாட்கள் ஜபித்து தியானமும் தவமும் செய்த அதிதியின் முன் பத்து கைகளுடன் உள்ள விநாயகர் ஸித்தி - புத்தி தேவிகளுடன் தோன்றினார். அவரைத் தன் புதல்வனாக வரும்படி அதிதி கேட்க பகவான் அதனை ஏற்றார். ஒரு நல்ல நாளில் இதே தோற்றத்துடன் ஸித்தி புத்தி தேவிகளுடன், பாலகனாகத் தோன்றினார். இந்த திவ்யவடிவை விட்டுச் சாதாரணக் குழந்தையாக மாறும்படி அதிதி வேண்ட பாலகனாகி அழ ஆரம்பித்தார்.

அங்கதேசத்தில் கங்கைக்கரையில் உள்ள நகரில் ருத்ரகேது என்ற வேதமறிந்த பிராமணனுக்கு அவரது மனைவி சாரதாவிடம் தேவாந்தகனும் நராந்தகனும் இரட்டைப் பிள்ளைகளாகத் தோன்றினர். சிறு வயதிலேயே சாகசம் மிக்கவர்களாக வளர்ந்த அவர்கள் நாரதரின் உபதேசப்படி சிவபெருமானைக் குறித்து தவமியற்றி மூவுலகையும் ஆள்பவராக, பிரும்மா படைத்த எதனாலும் மரணம் நேராதவராக இருக்க வரம் பெற்றனர். இவர்களுக்கு அசுரர்கள் துணைபுரிய மூவுலகையும் வென்றனர். தேவர்கள் ஆட்சி இழந்தனர். பூமிதேவி கடுந்துயருடன் பிரும்மாவிடம் சென்று துயர் நீக்க வேண்ட கசியபர் வீட்டில் பிறந்துள்ள குழந்தை உன் துயர் நீக்கும் என்றார்.

கசியபரின் புதல்வனைக்காண வசிஷ்டர் முதலான மஹரிஷிகள் வந்தனர். அவர்கள் வேண்டியபடி தேவாந்தக நராந்தகர்களை அடக்குவதைப் பால மஹோத்கடர் ஏற்றார். அசுரர்களுக்கு இச்செய்தி எட்டியது. முளையிலேயே கிள்ளி விட நினைத்து விரஜா என்ற கொடிய அரக்கியை தேவாந்தகன் அனுப்பினான். தாதியாக வந்த அவளை பகவான் மாய்த்தார். அவளைத் தொடர்ந்து உத்ததன் துந்துரன் என்ற இரு அசுரர்கள் கிளி வடிவில் வந்தனர். குழந்தை அவர்களைத் தாவிப்பிடித்து விளையாட, அவை முனி குமாரனைக் குத்திக் குதறத் தொடங்கின. பகவான் இவற்றைத் தரையில் அறைந்து கொன்றார். குழந்தைக்கும் நான்கு வயது நிறைந்தது. தாயுடன் ஸோம

அமாவாஸ்யை யன்று ஓர் ஓடைக்கு நீராட வந்தான். நீரில் இறங்கிய சிறுவனை முதலை கவ்வியது. சித்ரன் என்ற கந்தர்வ அரசன் பிருகு முனிவரை அவமதிக்க அவரது சாபத்தால் முதலையானவன் மஹோத்கடரின் திருவடியைத் தீண்டியதும், அவர் அவனை வெளியே இழுத்துத் தரையில் ஓங்கி அடிக்க முதலை வடிவம் நீங்கி கந்தர்வனாகிப் பகவானைத் துதித்து விட்டுச் சென்றான்.

ஹா - ஹா, ஹூஹூ, தும்புரு என்ற கந்தர்வர்கள் கசியபரின் ஆசிரமம் வந்தனர். அதிதிகளாக அவர்களை வரவேற்றுக் கசியபர் உபசரித்தார். அவர்கள் விநாயகர் சிவன் பார்வதி நாராயணன் சூர்யன் இவர்களின் ப்ரதிமை வைத்துப் பூஜை செய்து வந்தனர். அங்கு வந்த பாலன் அவற்றை வாயிலிட்டு விழுங்கி விட்டான். கசியபர் மஹோத்கடரின் வாயைத் திறந்து பார்க்க மூவுலகமும் மும்மூர்த்திகளும் அதனுள் அடங்கியிருப்பதைக் கண்டதும் கசியபருக்கு கணபதிப் பெருமானே தன் மகனாக வந்தது நினைவில் வந்தது. கை கூப்பி வணங்கி நிற்கிற கசியபரிடம் கந்தர்வர்கள் பஞ்சாயதன பூஜை செய்யாமல் உணவேற்க மறுத்ததும் மஹோத்கடரே தன்னிடம் அவ்வைவரும் அடக்கியுள்ளதைக் காட்டி விசுவரூபக் காட்சி தர அவர்கள் மஹோத்கடரை வணங்கி வழிபட்டுச் சென்றனர்.

மஹோத்கடருக்குக் கசியபர் உபனயனம். செய்வித்தார். விகாதன், பிங்காக்ஷன், விசாலன் பிங்களன் சபலன் என்ற ஐந்து அசுரர்கள் அந்தணர் வேஷத்தில் கையில் ஏந்திய கமண்டலுவில் கொடிய அஸ்த்ரங்களை மறைத்துக் கொண்டு குமாரனுக்கு அக்ஷதை போடும்போது அஸ்த்ரங்களை அவர் மீது போட்டனர். மஹோத்கடர் இதனையறிந்து கையில் அக்ஷதை எடுத்து அவர்கள் மீது போட அவர்கள் அசுரர்களாக மாறி உயிரிழந்தனர். இதில் மகிழ்ச்சி பெற்ற அந்தணர்கள் மஹோத்கடருக்கு ஆசி வழங்கினர்.

பிரும்மா அவருக்கு பிரும்ஹணஸ்பதி (தன்னையும் காக்க வந்தவர்) எனப் பெயரிட்டார். பிருஹஸ்பதி 'பாரபூதி' என்றும், இந்த்ரன் 'ஸூராநந்தன்' எனவும், வருணன் 'ஸர்வப்ரியன்' எனவும் சிவபெருமான் 'விரூபாக்ஷர்' என்ற தன் பெயரையும் விருதாக அளித்தனர். சிவன் தனது திரிசூலத்தையும்

உடுக்கையையும் தந்து சந்த்ர கலையை நெற்றியில் அணிவித்துப் பாலசந்த்ரன் எனப் பெயரிட்டார். பரசுராமரின் தாய் ரேணுகா தேவி கோடரி தந்து 'பரசுஹஸ்தர்' என அழைத்தாள். எல்லோரும் மகிழ்ந்து சிங்கத்தை அவரது வாஹனமாக்கித் தந்து தேவாந்தக நராந்தகர்களை அழிக்கக் கோரினர்.

மஹோத்கடர் எல்லா வித்யைகளையும் எளிதில் கற்றார். காசி அரசன் தன் மகனின் விவாஹத்தை நடத்தித் தரும்படி தன் குல குருவான கசியபரை வேண்ட, கசியபர் தாம் சாதுர்மாஸ்ய வ்ரதத்தில் இருந்ததால், மஹோத்கடரை அரசனுடன் காசிக்கு அனுப்பினார். காசி செல்லும் வழியில் தூம்ராக்ஷன் என்ற அசுரன் குறுக்கிட அவனை மஹோத்கடர் கொன்றார். அவனது மகன்களான ஜகனனும், மனுவும் காசிராஜனை வழிமறித்து நராந்தகனின் ஆணையின் பேரில் வந்த தூம்ராக்ஷனின் உதவியால் தான் காசி தேசத்தை எதிரிகளிடமிருந்து பாதுகாத்துக் கொண்ட காசி அரசன் இன்று தூம்ராக்ஷனையே கொல்லச் சதி செய்து மஹோத்கடரை அழைத்து வந்ததாகக் குற்றம் சாட்டி மிரட்டினர். காசிராஜன் அவர்களிடம் பயந்து மஹோத்கடரை அவர்களிடம் ஒப்பித்துத் தப்பி ஓடத் தொடங்கினான். மஹோத்கடர் நொடியில் அவ்வசுரர்களை மாய்த்து அரசரைப் பின் தொடர நராந்தகனின் ஆணையால் வந்த பல அசுரர்களையும் மாய்த்தார். காசிக்கு வந்த மஹோத்கடரையும் பல அசுரர்கள் துன்புறுத்தினர். காசி மக்களுக்குப் பல நாட்களாக துயர் தந்து வந்த அசுரர்களை மஹோத்கடர் மாய்த்ததால் மக்களிடையே மஹோத்கடர் புகழ் பரவிற்று.

காசிவாசிகள் ஒவ்வொருவரும் ஏழையும் பாமரனும் கூட மஹோத்கடரைத் தம் வீட்டிற்கழைத்து விருந்தளித்து மகிழ்ந்தனர். ஒரே சமயத்தில் பலரழைக்க மஹோத்கடர் பல வடிவங்களேற்று அனைவரின் உபசாரத்தை ஏற்று மகிழ்ந்தார். காசி வாசிகள் ஒவ்வொருவரும் அவரைத் தும் தம் தெய்வமாகக் கொண்டாடினர்.

நராந்தகன் தனது வீரர்கள் அனைவரும் ஒவ்வொருவராய் கொல்லப்பட்டதை உணர்ந்து தானே தம் படைகளுடன் காசியை முற்றுகையிட்டான். கடும் போரில் மஹோத்கடர், தம் தேவியான ஸித்தி தேவிக்கு ஆணையிட அவள் கால புருஷனை ஏவி நராந்தகனது படைகளை அழித்தாள். நராந்தகனும் மாண்டான்.

இச்செய்தி கேட்ட நராந்தகனின் தந்தை ஸ்வர்கத்தில் ஆட்சி புரிகிற தேவாந்தகனைத் தூண்ட அவனும் பெரும் படைகளுடன் வர புத்திதேவி தன் சக்திகளை ஏவ அப்படைகள் மறைந்தன. மாயையால் பல அஸ்த்ரங்களை ஏவித் தாக்க வந்த தேவாந்தகனை எதிர்க்க 10 கைகளுடன் கூடிய கஜானனர் வடிவில் மஹோத்கடர் களத்திலிறங்கினார். தேவாந்தகன் விநாயகரது தந்தத்தை வேருடன் பிடுங்கினான். அதனைக் கொண்டே பகவான் அவனை மாய்த்தார்.

துயர் நீங்கிய காசிநகரம் விழாக் கோலம் பூண்டது. காசிராஜனின் மகனது திருமணமும் நடந்தேறியது. மஹோத்கடர் தன் பெற்றோரைக் காண ஆசிரமம் செல்ல விரும்பினார். காசி மக்கள் அவரைப் பிரிய விரும்பாத போது, மண்ணால் தன் உருவம் அமைத்து வழிபட்டு வரும்படி பகவான் வழிகாட்டினார். ஆசிரமம் திரும்பிய மஹோத்கடர் தன் பெற்றோரை வணங்கி அவதாரப்பணி நிறைவுற்றதால் கசியப தம்பதிகளுக்குத் தம் உருவ வழிபாட்டை உபதேசித்துக் கைலாஸம் வந்து பார்வதியின் மைந்தனாக லீலை செய்தார். (கணேச புராணத்தில் இரு ஸ்கந்தங்களில் இக்கதை விரிந்துள்ளது)

2. மயூரேச்வரர்

திரேதாயுகத்தில் இது நிகழ்ந்தது, கண்டகி நதிக்கரையில் அமைந்த மிதிலையின் அரசன் சக்ரபாணி பிள்ளைப் பேறின்றி வருந்தி சௌனக முனிவரின் உபதேசப்படி மனைவியுடன் பிரும்மசரியம் பூண்டு ஸூர்யனைக் குறித்து, ஓராண்டு காலம் விரதமிருந்து வழிபட்டான். விரதம் முடியும் முன்னரே ராணி கனவில் பிரும்மசரியம் இழந்து ஒளிமிக்க தேவனோடு கூடி மகிழ்ந்து அதனால் கருவுற்றாள். கரு வளர்ந்து வர அதன் தாபம் ராணியைப் பாதிக்க, அதனைத் தணிக்க இயலாமல் பிறர் அறியாதவாறு கடற்கரை சென்று கருவைக் கலைத்து வெளியேற்றி விட்டு வீடு சேர்ந்தாள். அரசன் விரதமும் வீணாகி கர்ப்பமும் கலைக்கப்பட்டதை உணர்ந்து துயருற்றான்.

கரு வளர்ந்து அசுர சக்திமிக்கக் குழந்தையானது. கடலரசன் அதனைத் தாங்க முடியாமல் அரசனிடம் கொண்டு சேர்த்தான். ஸிந்துவில் (கடலில்) தோன்றியதால் அவன் ஸிந்து ஆனான். ஸிந்து வளர்ந்ததும் சூரியனை வழிபட்டுத்

தவமியற்றினான். சூர்யன் தோன்றி சிந்து விரும்பியபடி அவன் அழியாதிருக்க ஓர் அமுத கலசம் தந்து அதனை வாயிலடக்கிக் கொள்ளச் சொன்னார். அது வாயிலிருக்கும் வரை எவரும் அவனை அழிக்க இயலாது. வரவலிவால் வீரியம்மிகுந்த தன் புதல்வனிடம் அரசை ஒப்படைத்து அரசன் காடு சென்றான்.

ஸிந்து மூவுலகையும் வென்று அரசாண்டான். தேவர்களை வென்ற ஸிந்து வைகுண்டம் சென்று ஹரியிடம் தமது போர்த்திறனைக் காட்ட அவர் மகிழ்ந்து வரம் தர முன் வந்ததும் கண்டகீ நகரிலேயே எப்போதும் இருந்து அருள் பாலிக்க வேண்டினான். நாராயணரும் அதனை ஏற்று அங்கேயே நித்யவாஸம் செய்யச் சம்மதித்து அவனுடன் கண்டகி நதிக்கரையில் அமைந்த கண்டகி நகரில் கோவில் கொண்டார். பின்னர் ஸிந்துவின் கொடுமை அதிகமாயிற்று. முனிவர்களும் தேவர்களும் மஹோத்கடரின் 10 கைகளும் ஸித்தி புத்தி இணைந்ததுமான விக்ரகம் அமைத்து வழிபட்டுத் தவமிருந்தனர். ஸங்கஷ்டஹர விரதமிருந்து வழிபடுகிற தேவர்களிடம் அருள் கொண்டு மயூரேச்வரராகத் தோன்றித் துயர் நீக்குவதாக வரம் தந்தார்.

அதே சமயத்தில் ஸிந்துவின் பீடை நீங்க சிவனும் பார்வதியுடன் திரிஸந்தியக்ஷேத்ரத்தைச் சென்றடைந்து அங்கு தவமியற்ற இயலாத நிலையில் துயருற்றிருந்த கௌதமர் முதலான ருஷிகளுக்கு ஆறுதல் அளித்தார். தாமும் பல கோடி புவனங்களைத் தம் ரோம கூபங்களில் அணைத்துக் காத்துக் கொண்டிருக்கிற கணேசரை வழிபட்டார். பார்வதிக்கும் கணேசரின் ஏகாக்ஷர மந்திரத்தை உபதேசித்து வழிபடச் செய்தார். அவளும் லேகாத்ரியில் தவமிருந்தாள். அவளது தவத்தில் மகிழ்ந்த கணேசர், நடுவில் நாராயணனின் முகமும் வலத்தில் சிவமுகமும் இடத்தில் பிரும்ம முகமும் கொண்டவராக சேஷனின் மீது பத்மாஸனத்தில் அமர்ந்தவராய்க் காட்சி தந்தார். தனக்குப் புதல்வனாக வர வேண்டிய பார்வதிக்கு அந்த வரத்தை அளித்தார் - பகவான் காட்சி தந்த இடத்திலேயே கோயிலமைத்து கிரிஜாத்மஜர் என்ற பெயரில் விக்ரகத்தை வழிபட்டாள் - பாத்ரபத சுக்ல சதுர்த்தியில் எண்ணற்ற கண்களும் மூக்குகளும் வாய்களும் காதுகளும் கொண்ட விராட் புருஷனாக பார்வதியின் அருகில் பகவான் தோன்றினார். பார்வதியின்

வேண்டு கோளுக்கிணங்க சிறுவனாக மாறினார்.

படிக நிறத்தில் ஆறு கைகளும் முக்கண்களும் கொண்ட அழகிய குழந்தையை மடியில் ஏந்திய பார்வதியைக் கண்ட சிவபெருமானும் ருஷிகளும் மகிழ்ச்சியில் ஆழ்ந்தனர். குணேசர் எனப் பெயரிட்டனர்.

ஸிந்துவிற்கு அவனை மாய்க்கவந்த சிறுவன் ஒருவன் திரிஸந்திய க்ஷேத்ரத்தில் தோன்றியுள்ளதை ஆகாசவாணி தெரிவித்தது. அசுரன் தன் வீரர்களை அக்குழந்தையை மாய்க்க அனுப்பினான். கழுகு வடிவில் கிருத்ராஸுரன், குசலாஸுரன், க்ரூரன், வியோமன் என வரிசையாக வந்த அசுரர்களை அந்த சிசு விளையாட்டாக மாய்த்தது. சிறுவர்களுடன் விளையாடுகிற குணேசர் சிறுவர்களின் பசி நீக்க கௌதமரின் ஆசிரமத்தில் புகுந்தார். பூஜையும் வைசுவதேவமும் நிகழ இருக்கையில், அதற்கு நிவேதனப் பொருளாகச் சமைத்த உணவை கௌதமரின் பத்தினி அறியாமல், சிறுவர்களுடன் பங்கிட்டுத் தாமும் உண்டார். கௌதமர் கொதித்தெழுந்து கையும் களவுமாகக் குணேசரைப் பார்வதியிடம் இட்டுச்சென்றார். தாய் பார்வதி குணேசரைக் கயிற்றால் கட்டி வாயிற்தூணுடன் பிணைத்தாள். கௌதமர் தன் ஆசிரமம் திரும்பினார். பார்வதியும் ஆசிரமத்தின் உட்பக்கம் சென்று உட்கார்ந்தாள். தாயின் இடது மடியில் பாலகணேசன் ஓடிவந்து அமர்ந்தார். தாயின் முகத்தை அன்புடன் நோக்கினார். வாயிலில் கட்டுண்ட மயூரேசர், அதே வாசலிலேயே சிறுவர்களுடன் விளையாடுகின்ற மயூரேசர் என எங்கும் அவரே! திகைத்தாள். கண்களில் நீர் மல்கத் தனயனை எங்கும் கண்டாள். வீட்டு வாசலில் கட்டுண்டவரை அவிழ்க்க ஓடினாள். அழுதழுது சோர்ந்து தரையில் படுத்துள்ளவரைக் கட்டவிழ்த்து மடியிலமர்த்திப்பால் பருகச் செய்தாள். குழந்தை வளர்ந்து ஆறும் வயதில் காலடி வைத்தது. விச்வகர்மா அவருக்கு துறட்டி, கோடரி, பாசம், தாமரை இவற்றை அளித்து, அஸ்த்ர வித்யையைப் பழக்கி வைத்தார். விருகன் என்ற அசுரன் துறட்டியால் மடிந்தான்.

மயூரேசருக்கு உபநயனம் நடந்தது. கிருதாந்தன் காலன் என்ற இரு அசுரர்கள் யானை வடிவில் வந்து ஆசிரமத்தை அழிக்கத் தொடங்கினர். மயூரேசர் அவர்களை முஷ்டியால் தாக்கி

அழித்தார். சங்கரர் இதனைப் பாராட்டி திரிசூல மளித்து நெற்றியில் சந்த்ரனை அணிவித்தார். நாராயணன் சக்கிரமளித்து சோசிஷ்கேசன் எனப் பெயரிட்டார். இந்திரன் சிந்தாமணி ரத்னத்தைக் கழுத்தில் கட்டி சிந்தாமணி என்ற பெயரையும் தந்தார். பிரும்மா விதாதா என்று பெயரிட்டு வழிபட்டார். குணேசரின் வேதகானம் உலகை மயக்கியது.

மாந்தோட்டத்தில் சிறுவர்களுடன் விளையாடுகிற குணேசர், மரங்களில் பழுத்துத் தொங்குகிற பழங்களை எல்லோருடனும் பகிர்ந்து உண்டார். அங்கு ஒரு பெண் ஒரு பறவை முட்டையைக் காப்பாற்றி நின்றாள். சிறுவர் விளையாட்டில் விசிறி எறிந்த பழம் அவள் மேல் விழுந்தது. அவள் கொதித்து எழுந்து அனைவரையும் விரட்டினாள். குணேசர் மரப்பொந்தினுள் ஒளிந்தார். அங்குதான் அந்தப்பெண் காத்து வந்த முட்டை இருந்தது. கணேசர் கைபட்டதும் முட்டை உடைந்து அதிலிருந்து பெரும் மயில் வெளியானது. ஆவேசத்துடன் அது குணேசரைத் தாக்க இவர் அதனை அடக்கி அதன் மீதமர்ந்தார். முட்டையைக் காத்தவள் கசியபரின் மற்றொரு மனைவியான விநதை, கருடன் முதலிய பறவையினத்தின் தாய். கசியபருக்கு அவளிடம் பிறந்த முட்டையே மயிலாயிற்று. இந்த மயிலை அடக்குபவரே அதன் எஜமானர் என்பதை உணர்ந்த அந்த விநதை அதைக் குணேசரின் வாகனமாக்கினாள். அவளது சக்களத்தியிடமும் நாகர்களிடமும் அடிமைப்பட்டுள்ள ஜடாயுமுதலியவர்களை விடுவிக்கக் குணேசர் புறப்பட்டார். அந்த மயில் தன் பெயரைப் பகவானின் பெயருடன் இணைத்துக் கூறப் பெறுவதை வரமாகக் கேட்டது. மயூரேச்வரம் என்று ஊரும் மயூரேச்வரர் என்று பகவானும் இன்றும் பெயர் கொண்டுள்ளனர்.

குணேசர் சிறுவர்களுடன் ஜலக்கிரீடை செய்து போது நாக கன்னிகைகள் இவரை நாகலோகம் அழைத்துச் சென்றனர். நாகர் முதலில் இவரை எதிர்த்தாலும் பின்னர் இவரது ஆபரணங்களாயினர். ஆதிசேஷன் இடுப்புக் கச்சானார். ஜடாயு முதலியவர் விடுவிக்கப்பட்டனர்.

திரிஸந்திய க்ஷேத்திரத்திலிருந்து சிவனும் பார்வதியும் தன் குமாரனுடன் கிளம்பியதும் ஸிந்துவின் நண்பன் கமலாஸுரன் தன் பெருஞ்சேனையுடன் போர் புரிய வந்தான். மயூரேசர் தன்

உடலிலிருந்து கோடிக் கணக்கில் போர் வீரர்களைத் தோற்றுவித்து கமலாஸுரனைப் படையுடன் அழித்தார்.

குணேசருக்குத் திருமணம் செய்விக்க நினைத்த சிவதம்பதி நாரதரிடம் தன் விருப்பத்தைத் தெரிவிக்க பிரும்மாவின் குமாரிகளான ஸித்தியும் புத்தியும் ஏற்றவர்கள் என நாரதர் தெரிவித்தார். ஸிந்து அசுரனை அழித்த பிறகே விவாஹம் என குணேசர் உறுதி பூண்டார். கூட வந்த அந்தணச் சிறுவர்கள் தர்ப்பைகளில் மந்திர சக்தி ஏற்றி எறிய அந்த தர்ப்பைகள் அசுரர்கள் ஒவ்வொருவர் மூக்கிலும் கண்களிலும் புகுந்து தும்மலும் அரிப்பும் எரிச்சலும் தந்து மூச்சை அடைத்து மாய்த்தன. கடைசியில் ஸிந்துவும் போரிட்டு மாண்டான். தேவர்களும் ருஷிகளும் துயரிலிருந்து மீண்டனர் - தன் மயிலை பகவான் குணேசர், குகப்பெருமானுக்கு அளித்தார். ஸித்தி - புத்திதேவிகளை மணந்தார்.

3. கஜானனர்

துவாபர யுகத்தில் நிகழ்ந்தது. பிரும்மா தூங்கி விழித்ததும் கொட்டாவி விட்டார். அதிலிருந்து ஒரு கோரமான புருஷன் வெளிப்பட்டான். பிரும்மனைப் பார்த்து நீரே என் தந்தை, எனக்கு உணவும் இருப்பிடமும் தாரும் என்றான். தன்னிடம் தோன்றியவன் என்பதால் பாசம் மிகுந்து மூவுலகை வெல்கிற சக்தியும் செந்நிறம் கொண்டதால் சிந்தூரன் என்ற பெயரையும் தந்தார். இவனால் அணைக்கப் பெறுபவன் சுக்கு நூறாகிப் போவான் என்ற ஆற்றலையும் தந்தார். தவமே செய்யாமல் வேறு பயிற்சி பெறாமல் பெற்ற இந்த ஆற்றலைச் சோதிக்க வேறு எவரும் கிட்டாததால் பிரும்மாவிடமே சோதிக்க ஸிந்தூரன் விரட்டப் பிரும்மா ஓடினார். விஷ்ணு இவனை ஏமாற்றி பிரும்மாவை விடுவித்துச் சிவனிடம் பலபரீக்ஷை செய்யும்படி திசை மாற்றியனுப்பினார். சிவனிடம் சென்று பார்வதியின் அழகைக் கண்டு மயங்கி அவளைப் பறித்துக் கொண்டு ஓட, சிவன் தடுக்கப் போரிடத் தொடங்கிய போது, பார்வதி மயூரேசனைத் தியானித்து வழிபட்டாள். மயூரேசர் அந்தணச் சிறுவர் வடிவில் வந்து பார்வதியைக் காப்பாற்றிச் சிவபெருமானை அணைக்க முயன்ற அசுரனின் மார்பில் அவன் கண்களில் படாமல் நின்று தன் கோடரியால் அடிக்க அசுரன் துவண்டு சிவனிடமிருந்து விலகினான். சிவபெருமான்

பார்வதியை அபகரித்ததால் வெகுண்டு உன்னை அழித்து விடுவார் என அந்த அந்தணச்சிறுவன் பயமுறுத்திப் பூவுலகிற்கு சிந்தூரனை அனுப்பி விட்டார். சிந்தூரனின் அட்டஹாஸம் பூமியில் பரவியது.

தேவர்கள் வேண்ட சிந்தூரனை மாய்க்கக் கணேசர் மனம் கொண்டார். சிவனும் பார்வதியும் பூமியைச் சுற்றி வரும் போது பர்யலிக் (பரேலி) காட்டின் அழகில் பார்வதி லயித்து அங்கு தங்கித் தவமிருக்க நினைத்தாள். ஒரு ஆசிரமம் அங்கு சிவகண கணங்களால் அமைக்கப் பெற்றது. தவத்தில் ஆழ்ந்திருந்த பார்வதியின் முன் குணேசர் தோன்றித் தான் கஜானனராகத் அவளது புதல்வராகத் தோன்றுவதாக வரமளித்தார். நான்கு கைகளுடன் நீண்ட துதிக்கையுடன் முறம் போன்ற காதுகளும், சிறுகண்களும் குட்டையான கைகளும் கால்களும் கொண்ட குழந்தையாக அறுவறுக்கத் தக்கவராக அவர் தோன்றியதும் பார்வதி முதலில் சற்றுத் திகைத்து நின்றாலும் சிவபெருமான் கணேசரே சிந்தூரனின் வதத்திற்காக இவ்வாறு தோன்றியுள்ளதை விளக்கியதும் கலக்கம் நீங்கினாள்.

அக்காலத்தில் மாஹிஷ்மதி நகரில் வரேண்யன் என்ற நல்லரசன் தன் மனைவி புஷ்பிகாவுடன் பன்னிரண்டாண்டுகள் கடும் தவமிருந்து கணேசரை வழிபட்டான். அவர்களுக்கும் புதல்வனாகத் தோன்றுவதாக கணேசர் வரமளித்துள்ளார். புஷ்பிகா கருத்தரித்து ஒரு மகனைப் பெற்றாள். அவள் பிரஸவக்களைப்பால் மயக்க முற்றிருந்த போது ஒரு ராக்ஷஸி சிசுவைப் பறித்துச் சென்றாள். அதனால் மயக்கமுற்ற புஷ்பிகா முன் தன்னைக் கிடத்தும்படி சிவ தம்பதியரிடம் கணேசர் கூற நந்தியிடம் குழந்தை கணேசரைத் தந்து புஷ்பிகாவின் மயக்கம் தெளியுமுன் கொண்டு சேர்ப்பிக்க செய்தார். மயக்கம் தெளிந்த புஷ்பிகா இந்த துதிக்கையுடன் உள்ள குழந்தையைக் கண்டு பயந்து ஓலமிட்டு ஓடி விட்டாள். வரேண்யனும் இந்த பொருந்தா உருவம் கொண்ட குழந்தை கேடு விளைவிக்கும் என்றெண்ணிச் சேவகர்களிடம் அதனைத் தந்து மனித ஸஞ்சாரமற்ற காட்டில் விடச் சொன்னான்.

சிசுவை அக்காட்டில் வசித்த பராசரர் கண்டு தியானத்தால் பரம்பொருளாக உணர்ந்து வணங்கி எடுத்துச் சென்று தன் ஆசிரமத்தில் வளர்த்தார். பராசரரின் மனைவி வத்ஸலாவிற்கு

அதனை வளர்ப்பதே பெரும் பாக்கியம் எனத் தோன்றியது. ஆசிரமத்தில் பெருமகிழ்ச்சியும் செழிப்பும் பரவியது. வரேண்யனுக்கும் இச்செய்தி எட்டியது. அவனும் உண்மை உணர்ந்து புத்திர ஜனனோத்ஸவம் கொண்டாடினான்.

சிந்தூரனுக்கும் ஆகாச வாணிமூலம் இச்செய்தி எட்டியது. பார்வதியின் குமாரராகப் பிறந்துள்ளாரெனக் கேட்ட அவன் பார்வதியைத் தேடிப் பர்யளி வந்தான். குழந்தையைக் காணாத அவன் பார்வதியை அழித்து விட ஆயுதம் ஏந்திய போது பார்வதியின் மடியில் அந்தச் சிறுகுழந்தையைக் கண்டான். குழந்தையைத் தூக்கி எடுத்துக் கடலில் எறிய நினைத்தான். வழியில் குழந்தை மலையாகக் கனத்தது. அதனை அங்கேயே விட்டெறிந்தான். சிசு விழுந்த மலை தூளாகியது. சிசு நர்மதையில் விழுந்தது. (விழுந்த இடம் கணேச குண்டம் என்ற பெயர் பெற்றது) கணேசரின் ரத்தம் சிந்திய பாறை சிவந்தது. (நர்மதா கணேசர் என அதை வழிபடுகின்றனர்.) சிசு ஒழிந்தது என்ற மகிழ்ச்சியில் நகர்ந்த அசுரனிடம் கணேச குண்டத்திலிருந்து எழுந்த கோர வடிவுள்ள புருஷன் அவனை அழிக்க விருக்கிற பகவான் வேறிடத்திலுள்ளார் எனக் கூறி மறைந்தார். பர்யளியில் அசுரபடை மிகுந்ததால் சிவதம்பதிகள் கைலாஸம் சென்றனர்.

இந்திரனின் சபையில் க்ரௌஞ்சன் என்ற கந்தர்வன் ஆசனம் விட்டெழும்போது அருகிலமர்ந்திருந்த வாம தேவரிஷியின் மேல் கால்பட அவரது சாபத்தால் எலியானான். வாமதேவரிடம் மன்னிக்க வேண்ட கஜானனரின் வாகனமாகும் வாய்ப்பு பெற்றான். அந்த எலி பராசரரின் ஆசிரமத்தில் புகுந்து கொட்டமடித்தது. தன் பாசத்தால் கட்டி கஜானனர் அதனை அடக்க, கஜானனரை நிமிர்ந்து பார்த்ததும் பகவானை உணர்ந்து தன்னை வாகனமாக்கிக் கொள்ள வேண்டியது. தன்னைத் தாங்க அதன் இயலாமையை உணர்ந்த கஜானனர் மிகவும் லேசானார். (க்ரௌஞ்சன் என்ற கந்தர்வன் மஹரிஷி ஸௌபரியின் ஆசிரமத்தில் அவரது மனைவி மனோமயியைப் பற்றி இழுக்கத் திருட்டுத் தனத்துடன் நுழைந்ததால் எலியாகும்படி ஸௌபரி சபிக்க, கந்தர்வன் மன்னிக்க வேண்ட, கஜானனரின் வாகனமாக அருள் புரிந்தார் எனறும் வரலாறு.)

கஜானனர் உபநயனத்திற்குப் பின் வித்யைகள் அனைத்தையும் பராசரரிடமிருந்து கற்றார். சிந்தூரனை அடக்க விரும்பிப் பராசரரையும், வத்ஸலையும் வணங்கி ஆசி பெற்றார்.

அங்குசமும் பாசமும் பரசுவும் கமலமும் ஏந்தி சிந்தூரன் இருக்குமிடம் சென்று விராட் புருஷனாகிச் சிந்தூரனின் கழுத்தை நெரித்துக் கொன்றார். அவனரது ரத்தத்தை தன் உடல் முழுவதும் பூசி ஸிந்தூர வதனனாக, ஸிந்தூரப் ப்ரியனாகக் காட்சியளித்தார்.

வரேண்ய அரசரும் கஜானனரிடம் வந்து வழிபட்டுத் தன் பிழை பொறுக்க வேண்டினார். முன் பிறவியில் வரேண்யனும் அவரது மனைவி புஷ்பிகாவும் பல்லாண்டுகள் தவமிருந்து தன்னைப் புத்திரனாகும்படி கோரியதற்கேற்ப இப்பிறவியில் அவர்களது புத்திரனாகத் தோன்றியதைக் கூறினார் கஜானனர். வரேணியன் தனக்கு நல்வழி புகட்ட வேண்ட, கஜானனர் அருளிய உபதேசமே கணேச கீதை. ஒரே அவதாரத்தில் உமாமகேச்வரர்களுக்கும் புஷ்பிகா - வரேண்யர்களுக்கும் வத்ஸலா பராசரர்களுக்கும் புதல்வராகி சிந்தூரனை அடக்கினார்.

4. தூம்ரகேது -

இவர் கலியுக இறுதியில் தோன்ற விருப்பவர். இவருக்குச் சூர்பகர்ணர் என்ற பெயருமுண்டு. உடலிலிருந்து கோபத்தீயின் ஜ்வாலை கொழுந்து விட்டெரியும். நீலவண்ணக் குதிரை மீதேறி எதிரிகளை அழிக்கக் கூரிய வாளேந்தித் தன் விருப்பப்படி உதவப் படைகளையும் ஆயுதங்களையும் படைத்துத் தர்மத்தின் எதிரிகளை அழிப்பார். தர்மநெறி பின்பற்றுபவர்களைக் காத்துத் தர்ம யுகத்தை நிலை நாட்டுவார்.

**முத்கல புராணம்.**

ஸ்ரீ கணேசர் எடுத்த பல அவதாரங்களில் முக்கியமானவை எட்டு.

1. வக்ரதுண்டர். இவர் செந்நிற மேனியராக பாசம் அங்குசம் இருமேல் கைகளில், அபயம் வரதம் இரு கீழ்க்கைகளில் கொண்டவராக. சித்தி புத்தி தேவிகளுடன் தோன்றியவர். இந்திரனின் ஒழுக்கக்குறைவின் காரணமாகத் தோன்றியவன் மத்ஸராஸுரன். (மத்ஸரம் - பிறரது சுகத்தைக் கண்டு பொறாமைப்படுவது) இவனுக்குக் குரு சுக்கிரர். இவரிடமிருந்த சிவதீக்ஷை பெற்று சிவ பஞ்சாக்ஷர ஜபத்துடன் கடுந்தவமியற்றிய அஸுரன் சிவதர்சனம் பெற்று

எவரிடத்திலிருந்தும் பயமின்மை என்ற வரம் பெற்றான். அசுரர்களின் அரசனானான்.

பூமியில் உள்ள அரசர்களை வென்றபின் பாதாளத்தை வசப்படுத்தித் தேவலோகம் சென்று வென்று மூவுலகிற்கும் அரசனானான். அசுரனால் துன்பமுற்ற தேவர் முதலானோர் தத்தாத்ரேயரிடமிருந்து ஸ்ரீ வக்ர துண்டரின் ஏகாக்ஷர உபதேசம் பெற்று கணேசரை வழிபட்டனர். ஸ்ரீ வக்ரதுண்டர், மத்ஸராஸுரனுடன் போரிட்டு அவன் கர்வத்தை அடக்கித் தனது பக்தனாக்கிக் கொண்டார்.

உலகைப் படைக்க முற்பட்ட நான்முகன், தன் பணி நிறைவுற ஸ்ரீ வக்ரதுண்டரை, அவரது ஆறு அக்ஷர மந்த்ரத்தைக் கொண்டு தவமியற்றிப் படைக்கிற சக்தி பெற்றார். உலகைப் படைக்கத் தொடங்கியதும் அவரது உடல் பயம் காரணமாக நடுங்கத் தொடங்கியது. நடுக்கத்தில் தோன்றியவன் தம்பாஸுரன். (தம்பம் - ஜம்பம் ஆணவம்) அவன் நான்முகனை வழிபட்டுத் தவமியற்றி நான்முகனிடமிருந்து பயமின்மையை வரமாகப் பெற்றான். மூவுலகையும் தன் ஆளுகையில் கொணர்ந்தான். தேவர்கள் வக்ர துண்டரை வழிபட வக்ரதுண்டர் சித்தி புத்தி தேவிகளுடன் போருக்குப் புறப்பட்டார். இதனையறிந்த தம்பன் சுக்ராசாரியரை அடைந்து வக்ரதுண்டரையும் சித்தி புத்தி தேவிகளையும் பற்றிக் கேட்டறிந்து, தன் தவற்றை உணர்ந்து வக்ரதுண்டரைச் சரணடைந்து மேனிலை பெற்றான்.

2. ஏகதந்தர் - சுக்ராசாரியரின் சகோதரர் சியவனர் பிருகு மஹரிஷியின் புதல்வர், சியவனர் மந்திரசக்தியால் மதத்தை (திமிரை) உருவகப்படுத்தி மதாஸுரனாக்கினார். அசுரத்தன்மை பெற்று சுக்கிரரின் சிஷ்யனாகி ஏகாக்ஷர சக்தி மந்த்ரத்தின் உபதேசம் பெற்றுக் காட்டில் தவம் செய்து தேவியின் அருளுடன் மூவுலகில் ஆட்சியை வரமாகப் பெற்றான். அவனது மனைவி ஸாலஸா (சோம்பல் மிக்கவள்). அவளிடம் அசுரனுக்கு மூன்று பிள்ளைகள். விலாஸீ (ஆடம்பரம் மிக்கவன்) லோலுபன் (சபலமுள்ளவன்) தனப்பிரியன் (பொருள் நாட்டமிக்கவன்) என. மூவுலகையும் வசப்படுத்திய அசுரனின் கொடுமை தாங்காமல் தேவர்கள் ஏகதந்தரை ஸனத்குமாரரிடம் உபதேசமாகப் பெற்ற ஏகாக்ஷர

மந்திரத்தால் வழிபட்டனர். ஒற்றைக் கொம்பும் பெருவயிறும் சித்தி புத்தி தேவிகள் அணைக்க, பெருச்சாளி மீது அமர்ந்து ஆதிசேஷனை வயிற்றைச் சுற்றி இறுகக் கட்டி கோடரியும், சூலமும், அபயமும், வரதமும் ஏந்திய நான்கு கைகளுடன் ஏகதந்தர் தோன்றினார். (ஒற்றைத் தந்தம் மாயையின் உருவகம். அதை வெளிப்படையாகக் காட்டிக் கொண்டிருப்பவர் அவர்.) ஏகதந்தர் மதாஸுரனுடன் போரிட்டார். இவரது கோடரி அசுரனின் மார்பில் பாய்ந்து அவனை நினைவிழக்கச் செய்தது. அவன் சிறிது நேரம் கழித்து உணர்வு பெற்றதும், தன்மேல் பதிந்த கோடரி தானே ஏகதந்தர் கையைச் சென்றடைந்ததைக் கண்டான். அவனிடமிருந்த அசுர எண்ணமகன்று பகவானைச் சரணடைந்தான். தெய்வீகச் சூழ்நிலையுள்ள இடங்களில் நீ செல்லக்கூடாது. அசுர எண்ணத்துடன் செய்கிற பணிகள் பயனற்றுப் போகச் செய்வாய் என உத்தரவிட்டுப் பாதாளத்திற்கு அனுப்பினார்.

ஏகதந்தரின் உபாஸனையால் பெற்ற சிந்தாமணி ரத்னத்தை விஷ்ணு இந்திரனுக்குக்குத்தர, இந்திரன் , அதை விஷ்ணுவின் அவதாரமான கபிலதேவருக்கு அளித்தார். அதனை கணாஸுரன் பறித்துச் செல்ல, ஏகதந்தர், கணாஸுரனை மாய்த்துக் கபிலரிடம் அளிக்க, அதனை ஏகதந்தரின் மார்பில் சாற்றிக் கபிலர் ஆனந்தமடைந்தார்.

3. மஹோதரர். தாரகன் என்ற அசுரன் பிரும்மாவிடம் வரம் பெற்று மூவுலகையும் வாட்டி வந்தான். சிவன் ஸமாதியிலிருந்ததால் தேவர்கள் பார்வதியைச் சரணடைய அவள் வேட்டுவப் பெண் வேடத்தில் ஸமாதியிலிருந்த சிவனை ஸமாதி நீங்கச்செய்தாள். சிவனின் மோஹம் மோஹாஸுரனாக உருப்பெற்றது. சமாதியைக் காமன் கலைத்தான் என்ற கோபத்தில் காமனைச் சிவன் சுட்டெரிக்க காமன் மஹோதர கணேசரைச் சரணடைந்தான். சிவன் சுட்டெரித்த உடலை மீண்டும் தர இயலாமையால் அவர் மன்மதன் குடியிருக்கச் சில இடங்களை சுட்டிக் காட்டினார். யௌவனம், பெண், பூ, பாட்டு, மதுவினம், பறவைகளின் கலகல ஒலி, தோட்டம், வஸந்தருது, நறுமணமுள்ள சந்தனம், முதலியவை, சிங்கார ரஸிகர்களின் உறவு, ஆண் பெண் மறைவிடக் காட்சி, புத்தாடை, நகை முதலியவற்றில் அமர்ந்து

காமன் மயக்கலாம் என்ற அருள் பெற்ற மன்மதன் பின்னர் கண்ணனின் மகனாக ப்ரத்யும்னனாகப் பிறந்தான். கார்த்திகேயர் கணேசரின் ஆறக்ஷரமந்திரஜபம் மூலம் சக்தி பெற்றுத் தாரகனை மாய்த்தார்.

சிவனின் காமத்திலிருந்து தோன்றிய மோஹாஸுரன் சுக்ரரின் உபதேசப்படி சூரியனைத் தவத்தால் வழிபட்டான். எங்கும் வெற்றி பெறும் வரத்தை, அவரிடமிருந்து பெற்று, மோஹாஸுரன் மூவுலகையும் ஆண்டான். பிரமதாஸுரனின் பெண் மதிராவை மணந்தான். (பிரமதன் - மதம் மிக்கவன். மதிரா - கள்ளைப்போல் மயக்குபவள்).

துன்புற்ற தேவர்களுக்கு ஸூர்யன் ஏகாக்ஷரமந்தி ரத்தால் கணேசரை வழிபட உபதேசித்தார். மஹோதர கணபதி தோன்றி மோஹாஸுரனை அடக்குவதாக அருள் செய்தார். மோஹாஸுரனுக்கு இந்தச் செய்தி தெரிந்ததும் சுக்ரரிடமிருந்து பகவானின் பெருமையுணர்ந்து பகவானைச் சரணடைந்தான். தேவர்கள் நிம்மதி பெற்றனர்.

துர்புத்தி என்ற அசுரனைக் கணேசர் அழித்தார். அவனது மகன் ஜ்ஞானாரி என்பவன் கணேசரிடம் வைரம் பாராட்டினான். சுக்ரர் இவனுக்கு சிவ பஞ்சாக்ஷர உபதேசம் செய்து சிவனைக் குறித்துத்தவமிருக்கச் செய்தார். சிவபெருமானின் அருளால் எங்கும் பயமற்ற நிலையை வேண்டிப் பெற்ற ஜ்ஞானாரி மூவுலகையும் பயப்படச் செய்தான். தேவர்கள் 10 அட்சரம் கொண்ட க்ஷிப்ரப்ரஸாதன கணபதி மந்த்ரத்தால் மஹோதரரை வழிபட்டனர். கணேசர் லக்ஷ்மியின் புதல்வராகத் தோன்றி துன்பம் களைவதாக அருள் பாலித்தார். லக்ஷ்மியின் படுக்கையின் அருகே அழகான சிசுவாகத் தோன்றி அவளை மகிழ்வித்தார். லக்ஷ்மிதேவி அவருக்குப் பூர்ணானந்தர் என்ற பெயரிட்டாள்.

ஜ்ஞானாரியின் மகன் ஸுபோதனுக்கு பூர்ணாநந்த மஹோதரரிடம் அளவிலாத பக்தி. அவரது நாமங்களைக் கூறுவதிலும் அவரை வழிபடுதலிலும் இடைவிடாது ஈடுபடுகிற ஸுபோதனிடம் ஜ்ஞானாரிக்கு வெறுப்பு வளர்ந்தது. அவனை எவ்வகையிலும் தன் வழிப்படுத்த இயலாத ஜ்ஞானாரி அவனைக் கொல்ல முற்பட்டான். எங்கும் நிறைந்துள்ள மஹோதர கணேசர் தன்னைக் காப்பாற்றுவார் என்று உறுதியுடன் கூறுகிற மகனை

வாளால் வெட்ட ஜ்ஞானாரி முயன்றபோது, பயங்கர ஒலியுடன் பூர்ணானந்த மஹோதரர் அங்கே தோன்றி அசுரனை மாய்த்தார்.

4. கஜானனர் - சிவபெருமானையும், பார்வதியையும் காணச் சென்ற குபேரனின் மனத்தில் பார்வதியின் அழகால் சலனமேற்பட, லோபாஸுரனாக அந்த காமம் உருப்பெற்றது. சுக்ரரின் உபதேசம் பெற்ற அசுரன் சிவபஞ்சாக்ஷர மந்த்ரத்தால் சிவனை வழிபட்டுப் பயமில்லா நிலை பெற்றான். மூவுலகையும் வென்ற அசுரனால் துயருற்ற தேவர் முதலானோர் ரைப்ய முனிவரது உபதேசப்படி கஜானனரை வழிபட, அவர் லோபனை அடக்க முன் வந்தார். அதனை அறிந்த அசுரன் கஜானனரது தோற்றத்தையும், பெருமையையும் சிவபெருமான் மூலம் உணர்ந்து அவரைச் சரணடையத் தேவர்கள் மகிழ்ந்தனர்.

5. லம்போதரர் - அமுதத்தைப் பங்கிட விஷ்ணு எடுத்த மோஹினி வடிவில் சிவபெருமான் மயங்கிய போது விஷ்ணு தன் நிலை பெற்றதும் சிவபெருமானுக்கு வந்த கோபத்தில் உதித்தவன் குரோதாஸுரன். சம்பரனின் பெண் ப்ரீதியை மணந்தான். சுக்ரர் உபதேசித்த ஸூர்ய மந்த்ரத்தால் ஸூர்யனை வழிபட்டுத் தவமிருந்தான். சூர்யன் தோன்றியதும் மரணமின்மையையும், பிரும்மாண்டத்தின் ஆட்சியையும் ஆரோக்யத்தையும் வரமாகப் பெற்றான். தனக்கு வரமளித்த சூர்ய தேவனையும் பதவியிழக்கச் செய்தான். தேவர்களின் தவத்தால் மகிழ்ந்த லம்போதரர். குரோதனுடன் போரிட்டார். அவன் செய்த தவத்தால் கிட்டிய நற்பயனனைத்தும் பின் செய்த கெட்ட செயல்களால் வலிவிழந்து அழிந்து விட்டதால் களைத்த அவனுக்குத் தன் இறை நிலையைக் காட்டினார். இடதுபுறமமர்ந்த ஸித்தி தேவி புத்தியைக் குழப்புபவள். வாழ்வில் வெற்றி பெற விழைபவர் குழப்பமடைவர். வலது புறத்தில் அமர்ந்துள்ள புத்திதேவி அந்தக் குழப்பத்தை ஆராய்ந்து உண்மை நிலை உணர்த்துபவள். புத்தி தேவி க்ஷிப்தம் மூடம் விக்ஷிப்தம் ஏகாக்ரம் நிருத்தம் என்ற ஐந்து புத்தி நிலைகளின் உருவகம். பிரமை வடிவான ஸித்தி தேவியும் புத்தி வடிவமான புத்தி தேவியும் இரு புறமிருக்க உலகையே தன் வயிற்றினுள் கொண்டவர். உலகின் தோற்றமும் வாழ்வும் மறைவும் இவர் வயிற்றினுள் விளையாட்டு போல் தானே நடக்கின்றன. அசுரனென்றோ தேவன் என்றோ பாகுபாடின்றி

அறவழியில் செல்பவர்களை பாதுகாப்பதும் அறவழியில் நடக்கும்படி கட்டுப் படுத்துவதுமே அவரது பணி. என்பதை குரோதன் உணர்ந்தான். உள்ளம் நெகிழ்ந்து பக்தியுடனே கணேசரைச் சரணடைந்தான்.

மற்றொரு லீலை . பிரும்மா தியானத்திலமர்ந்திருந்த போது நீண்ட பெருமூச்சு வெளியேறியது. அதிலிருந்து ஒருவன் தோன்றினான். பிரும்மனை வணங்கி நின்ற அவனுக்கு மாயாசுரன் எனப்பெயரிட்டு அவனது விருப்பமனைத்தும் நிறைவேறவும் தடையுறாமல் எங்கும் செல்லவும் சக்தியைப் பிரும்மன் அளித்தார். இவனுக்கு விப்ரசித்தி என்ற அசுரன் துணை நிற்க பாதாளத்திற்குச் சென்று அனைவரையும் அடக்கியாண்டான். ஆதிசேஷனின் வேண்டுகோளின்படி கணேசர் லம்போதரராக அவருக்கு மகனாகத் தோன்றி மாயாசுரனை மாய்த்தார்.

6. விகடர் : ஜலந்தரனின் பத்னி பிருந்தா தேவி சிறந்த விஷ்ணு பக்தை. விஷ்ணு அவளது அழகில் மயங்கி நின்றபோது அந்த காமத்தின் விளைவாகத் தோன்றியவன் காமாஸுரன். சுக்ரரது உபதேசப்படி பஞ்சாக்ஷர மந்த்ர தீக்ஷை பெற்று சிவனைக் குறித்துத் தவமிருந்து அவரிடமிருந்து மரணமின்மை, பயமின்மை பிரும்மாண்டத்தின் ஆட்சி, வலிவு முதலியவற்றைப் பெற்றான். மஹிஷாஸுரனின் பெண் த்ருஷ்ணா (வேட்கை) என்பவளை மணந்து ரதிதம் (ஈர்ப்பளிப்பது) என்ற தன் தலைநகரில் வசித்தான். மூவுலகை வசப்படுத்தினான். தேவர் முனிவர் முதலானோர் முத்கல மஹரிஷியின் வழிகாட்டலில் மயூரேச்வரத்தில் (மோரேகாம்வ்) தவமிருந்தனர். மயூரேச்வரரான விகடர் காமாஸுரனை மாய்ப்பதாக அருள் புரிந்தார். பாசமும் அங்குசமும் ஏந்திய விகடர், காமாஸுரனுடன் போர்புரிந்தார். பகவானின் பெருமை உணர்ந்து அவனும் சரணடைந்தான்.

7. விக்னராஜர் - இமயமலைச் சாரலில் தன் தோழிகளுடன் பார்வதி கலந்துரையாடும் போது அடங்காச் சிரிப்பு ஏற்பட்டது. அதிலிருந்து தோன்றியவன் மமதாஸுரன் (என் எனது என்ற இறுமாப்பு). பார்வதி அவனுக்குக் கணேசரை ஆறக்ஷர மந்திரத்தால் வழிபட வழி காட்டினாள். அவன் மந்த்ர ஜபம் செய்தவாறு காட்டில் தவமிருந்த போது சம்பரன் என்ற மாயாவியான அசுரன் தானறிந்த மாயா வித்யையை அவனுக்கு உபதேசித்தான்.

சம்பரன் விநாயகரை உபாசித்து மரணமின்மையும் பிரும்மாண்ட ஆட்சியும் பெற மமதாஸுரனைத் தூண்டினான்.

மமதாஸுரனும் அவ்வாறே தவமிருந்து விக்கிநராஜரிடமிருந்து வரம் பெற்று மூவுலகத்ததிபதியானான். தர்மன் அதர்மன் என்ற இரு புத்திரர்களைப் பெற்றான். அறநெறி மீறிக் கொடுமையுடன் ஆட்சி புரிந்தவனை அடக்கத் தேவர்களின் வேண்டுகோளை ஏற்ற கணேசர், தன்னுடன் போர் புரிய வந்த அசுரப்படையை கையிலிருந்த தாமரையை எறிந்து அதன் மணத்தில் மயக்கமடையச் செய்தார். பின்னர் தாமரையைக் கண்டாலே திகிலடைகிற அசுரனையும் அவனது படையையும் மறுபடியும் கணேசர் எதிர்த்துப் போரிட முற்பட்டதும் அசுரன் சரணமடைந்தான். அறவழி மீறாமல் ஆட்சி புரியத் தொடங்கினான்.

8. தூம்ரவர்ணர் - வினையையொட்டியே படைப்பும் காப்பும் மறைவும் நிகழ்கின்றன. அதனால் வினைக்குச் சாட்சியாகவும் வினைக்கேற்ப பலன் தருபவராகவும் இருக்க சூரியனிடம் அதிகாரத்தை பிரும்மா அளித்தார். இவ்வதிகாரம் பெற்ற சூரியனிடம் அஹங்காரம் வெளிப்பட்டது. அப்போது சூர்யன் தும்மினார். அதிலிருந்து மிகப்பெரிய வடிவும் கோரமும் கொண்ட அசுரன் தோன்றினான். சுக்கிரர் அவனுக்கு இடமளித்து அஹங்கார அசுரன் (அஹம் 'நான்' எண்ணம் தூக்கலாக உள்ளவன்) எனப் பெயரிட்டு கணேசரின் 16 அட்சர மந்திரத்தை உபதேசித்துத் தவமிருக்கச் செய்தார். தவத்தில் மகிழ்ந்து முன் தோன்றிய பகவான் கணேசரிடமிருந்து அசுரன் பிரும்மாண்ட ஆட்சியும். வீணாகாத வலிவும் வேண்டிப் பெற்றான். விஷயப்ரியம் (நாடுகின்ற பொருள்மிக்க நகரம்) என்ற நகரில் பிரமதாஸுரனின் (திமிரால் வழி தவறி நடப்பவன்) மகள் மமதா (தனது என்ற எண்ணம் வலிவுற்றவள்) வை மணந்து கர்வன் (செருக்கு) சிரேஷ்டன் (சிறப்பு) என்ற இரு புதல்வர்களைப் பெற்றான். பிரமதனின் உதவியுடன் மூவுலகையும் வென்றான். உலகமெங்கம் தெய்வ வழிபாட்டை நிறுத்தினான். தேவர்களின் கடும் தவத்தில் மகிழ்ந்த கணேசர் புகைநிறமுள்ள மேனியுடன் அவர்கள் முன் தோன்றி அசுரபீடையை அகற்றுவதாக வரமளித்தார்.

அஹங்காராஸுரனின் கனவில் கணேசர் அதே தூம்ர வர்ணராக (புகைநிற மேனியராக)த் தோன்றித் தேவர் முனிவர் முதலானோரைத் துன்புறுத்தாமல் அறவழியில் அரசாளக் கூறினார். விழித்தெழுந்த அசுரன் எங்கும் எதிலிருந்தும் பயமின்மையை வரமாகப் பெற்றுள்ளதால் கணேசரின் சொல்லுக் கடங்குவது அவசியமல்ல எனக் கருதினான். கணேசர்

தனது பாசத்தை ஏவ, அது வலிவுமிக்க அசுரர்களை வீழ்த்தியது. எதிர்த்த கர்வனையும் சிரேஷ்டனையும், சுட்டெரித்தது. பயந்த அஹங்காராஸுரனைப் பகவானைச் சரணடையும்படி சுக்ரர் தூண்ட, அவன் கணேசரைச் சரணடைந்தான்.

மத்ஸரம் மதம் மோஹம் கோபம் காமம் குரோதம் அஹந்தை மமதை என்ற எட்டும் அசுரகுணங்கள். தவத்தால் கிடைத்த தெய்வ அருளைத் தவறான வழியில் பயன்படுத்தித் துன்புறுத்தும் போது கணேசர் தன் சக்தியால் அவர்களை அடக்கி நல்வழிப் படுத்துகிறார். பகவானைச் சரணடையும் போது ஆணவமும் அறியாமையையும் அகல, அகந்தை மமதை, காமம் முதலிய உள்ளத் தெதிரிகள் அடங்கி விடுகின்றன. இந்த எட்டு அவதாரங்கள் எட்டு அசுரர்களை மாய்க்க கணேசர் எடுத்துள்ளதாக முத்கல புராணம் கூறும்.

वक्रतुण्डावतारश्च देहानां ब्रह्मधारकः।
मत्सरासुरहन्ता स सिंहवाहनगः स्मृतः ॥
एकदन्तावतारो वै देहिनां ब्रह्मधारकः ।
मदासुरस्य हन्ता स आखुवाहनगः स्मृतः ॥
महोदर इति ख्यातो ज्ञानब्रह्म प्रकाशकः ।
मोहासुरस्य शत्रुर्वै आखुवाहनगः स्मृतः ॥
गजाननः स विज्ञेयः सांख्येभ्यः सिद्धिदायकः ।
लोभासुरप्रहर्ता वै आखुगश्च प्रकीर्तितः ॥
लम्बोदरावतारो वै क्रोधासुरनिबर्हणः ।
शक्तिब्रह्माखुगः सद्यत्तस्य धारक उच्यते ॥
विकटो नाम विख्यातः कामासुर विदाहकः ।
मयूर वाहनश्चायं सौरब्रह्मधरः स्मृतः ।
विघ्नराजावतारश्च शेषवाहन उच्यते ।
ममतासुरहन्ता स विष्णु ब्रह्मेति वाचकः ॥
धूम्रवर्णावतारश्चाभिमानासुरनाशकः ।
आखुवाहन एवासौ शिवात्मा तु स उच्यते ॥

(முத்கல புராணம் - 20 -5- 12)

பரம்பொருள் நம்முள் சரீரம், ஜீவன், ஜ்ஞானம், முதலிய பல நிலைகளில் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளுகிறது. அந்த

பரம்பொருள் நிலைக்கு எதிரியாக எட்டு குறைகள் நம்மிடம் உள்ளன. அவை மறைய பகவானைச் சரணடைய அந்த பரம்பொருள் நிலைக்கு வலிவூட்டி எதிரியான குறைகளை அடக்கி விடுகிறார்.

காமம், கோபம் பொறாமை, செருக்கு முதலான முறை தவறிய எண்ணங்கள் தேவருக்கும் எழும். மும்மூர்த்திகளிடம் எழுந்த காமம் முதலியவை அவ்வெண்ணங்களை வலிவுடன் பிரதிபலிக்கிற அசுரவடிவம் பெறுகின்றன. உலக அளவில் அவை பெருங்கேட்டை விளைவிக்கின்றன. ஆனால் இறைவனின் ஆற்றல் முன் அவை வலிவிழந்து அடங்கி விடுகின்றன. அவ்வ முழுவதும் அழியாமல் அறநெறிக்கு எதிரான முறை தவறிய எண்ணங்கள் தனி மனிதனின் மனத்தில் எழும்போது அசுரவலிவுடன் அவனுக்கும் சமுதாயத்திற்கும் கேடு விளைவிக்கின்றன. இறைவனைச் சரணடைய அவை உருக்குலைந்து அடங்கி விடுகின்றன. இதனையே முத்கல புராணத்தின் எட்டு அவதார வரலாறுகளும் விளக்குகின்றன.

மத்ரஸன் (பொறாமை) என்ற அசுரனை அழிக்கச் சிங்கவாஹனராக வக்ரதுண்டர் தோன்றுகிறார். உடலே அவராகப்பாவிக்க மத்ஸரன் அடக்கப்பெறுகிறான். மூஷிக வாஹனரான ஏகதந்தர் மதன் (செருக்கு) என்ற அசுரனை அடக்குகிறார். தன் ஜீவனையே அவராகப்பாவிக்கச்செய்கிறார். மஹோதரர் என்ற அவதாரத்தில் மூஷகவாஹனராக. ஸாதகனின் அறிவைத் தன் இருப்பிடமாகக் கொண்டு மோஹாஸுரனை அடக்குகிறார் கஜானனராகி ஆத்மாவையும் அநாத்மப் பொருள்களையும் பகுத்தறிகிற ஸாங்கிய ஞானம் தந்து லோபா ஸுரனை அடக்குகிறார். லம்போதரராகி, சக்தியை தன் விளக்கமாகப் பாவிக்கச் செய்து குரோதாஸுரனை அடக்குகிறார். மயில்வாகனமேறி விகடராகி காமனைவெல்ல சூரியசக்தியாகிறார். விக்நராஜராகி ஆதிசேஷன் மீதமர்ந்து விஷ்ணு சக்தியாகி மமதாஸுரனை அடக்குகிறார். தூம்ரவர்ணராகி மூஷக வாஹனமேறி சிவதத்துவம் துலங்கச் செய்து அஹங்காரா ஸுரனை அடக்குகிறார் என்றிதனைப் புராணம் விளக்குகிறது.

பரம்பொருளை விளக்கவந்த புராணங்கள், விளக்கத்திற்கு அவசியமான குறியீடுக்ள் இல்லாததால், சில குறியீடுகளை வரம்பாக்கிக்கதையாக சித்தரிக்கின்றன. தத்வநோக்குள்ளவன் இவற்றைக் கொண்டு பரம்பொருளை எளிதில் உணரக் கூடும் என்பதே பெரியோரின் அனுபவம்.

